

# பெண்ணில்லாத ஊரிலே....

எஸ். எஸ். தென்னரசு M.L.A.

வெளியீடு :

திருமாறன் நிலையம்

155, பீட்டர்ஸ் ரோடு, சென்னை-600 086.

தொலைபேசி : 86 98 49

முதற்பதிப்பு: மே, 1990.

★ 160 பக்கங்கள்

பதிப்பாசிரியர்: கயல் தினகரன்

விலை ரூ. 25.00

அச்சிட்டோர்:
**அருண் அச்சகம்**
155, பீட்டர்ஸ்ரோடு,
சென்னை-600 086.

தொலைபேசி: 86 98 49

# புகழ்ஸ்துதி அல்ல முன்னுரை!

1969-
கண்மணிகளின் இமைகள்
துக்கத்தில்
நீராடிக் கொண்டிருந்தபோது
தனது நேசக்கரங்களால்
எங்கள் கண்ணீரைத் துடைத்து
கழகத்தை வழி நடத்தி,
இன்று-
வடக்கும், தெற்கும்
வாழ்த்தும் தலைவராக
வளர்ந்து விட்டவர்
நமது தலைவர் கலைஞர்.
அவரை நான் பூரணமாக உணர்ந்தவன்;
அதைப்போல
அவரும் என்னைப்பற்றி
முற்றிலும் அறிந்தவர்.
அப்பேர்ப்பட்ட அருமைத்தலைவர்
கலைஞரின்
உறங்காத உழைப்பிற்கு
இந்த நூல்
ஒரு சிறிய
அர்ச்சனைப்பொருள்;
இது புகழ்ஸ்துதி அல்ல!

-தென்னரசு

மிசா காலத்தில் ஓராண்டு, சிறைக்குச் சிறை பந்தாடப்பட்ட போதும் தென்னரசு கலங்கியதில்லை! அவரது சொந்த ஊர் நரிகளின் சூழ்ச்சிகளைக் காரி உமிழ்ந்துவிட்டுக் களம் கண்ட தளகர்த்தர்-என் இதயத்தில் இடம் பெற்றுள்ள உடன்பிறப்புகளில் ஒருவர்-தென்பாண்டி மண்டிலத்தின் தி.மு. கழக அரண்!

அவரைப்பற்றி, அவரது மக்கள் திருமணத்தில் நான் பேசியதையும் இந்த நூலில் இணைத்துள்ளனர். அதையும் படித்தால் என் உள்ளம் அனைவர்க்கும் புரியும்! தென்னரசின் ஆற்றலும், தொண்டும்இந்தத் திராவிட தேசத்துக்கு என்றென்றும் பயன் படுமாக!

# பேராசிரியர் புகழுரை

'சிறுகதை மன்னர்' என்று நாடறிந்த பெருமைக்குரிய எனது அன்புக்குரிய நண்பர் எஸ். எஸ். தென்னரசு அவர்கள் திராவிட முன்னேற்றக் கழகத்தின் முன்னணித் தலைவர்களிலே ஒருவர். சிந்தாமணியாக வளர்ந்த சிறு வயது முதல் பேரறிஞர் அண்ணாவிடம் ஈடுபாடு கொண்டவராக விளங்கி, தென்னரசு பெயர் கொண்டவராய் நாட்டுக்கு அறிமுகமாகி, கலைஞரின் நெருக்கமான தோழராகச் செயற்பட்டு, எம்மனை யோரின் நம்பிக்கைக்குரிய தென்பாண்டி மண்டலத்தின் மூத்த தளபதியாகச் செயற்படுகிறார் இந்நாள்.

செய்திகளைத் திரட்டுவதிலும், கதைக் கரு ஒன்று கிடைத்தால் கற்பனையுடன் இணைத்துக் கதையாக வடிப்பதிலும் வல்லவர். அவர் எழுதியுள்ள நினைவுக் குறிப்பேடுதான் 'பெண்ணில்லாத ஊரிலே' என்னும் தலைப்பில் வெளிவந்துள்ளது.

ஆண்களே இல்லாத ஒரு 'கோதைத் தீவு' பற்றிய ஒரு கற்பனைச் சித்திரம் வ. ரா. அவர்களால் பல ஆண்டுகள் முன்பு வரையப்பட்டது.

பெண்களின் உரிமை வாழ்வு - ஆணினத்தின் வரையறைகளுக்கு ஆட்படாமல் வாழ்ந்தால், எப்படி அமையும் என்பது அதன் நோக்கமாகலாம், இந்த நூலோ - பெண்களே இல்லாத - காணாத ஓர் இடத்தில் - பல திங்கள் தொடர்ந்து வாழ்ந்திருந்த நிலையை விவரிப்பதற்கு இந்தத் தலைப்பைக் கொண்டுள்ளது.

ஆணும் பெண்ணும் காதல் கூட்டத்தில் களிப்புறு விடினும் ஆண்களும் பெண்களுமாக வாழும் உலக வாழ்வில்தான் இருபால் மக்களும் வாழ்வின் சலிப்பிலிருந்து விடுபடுகின்றனர் என்பது உலகியல் அறிந்தோர் உணர்ந்த உண்மை. மாறாகப் பெண்களையே பார்க்காத ஓரிடம் - இயற்கைக்கே மாறான ஒரு சூழல் - எந்த அளவு வறண்ட-வெறுப்பான மனப்பான்மையைத் தோற்றுவிக்கும்? அப்படிப்பட்ட இடந்தான் சிறைச்சாலை! அந்தச் சிறைச்சாலையில், தான் வாழ்ந்திருந்த நாட்களில் அவரது உள்ளத்தைத் தொட்டு வருடிய-வருத்திய நிகழ்ச்சிகளை விவரிப்பதே இந்த ஏடு.

திராவிட முன்னேற்றக் கழகம் மேற்கொண்ட அனைத்து அறப்போராட்டங்களிலும் ஈடுபட்டுத் தவறாமல் சிறைச் செல்லும் நிலைக்கு ஆளானவர் தென்னரசு அவர்கள். சிறைச் சாலையில் அவர் அடைபட்டிருந்த காலமும் அதிகமே. பலமுறை சிறைப்பட்ட கழகத் தோழர் என்னும் தனிப்பெருமையும் அவருக்குண்டு.

மத்திய அரசின் இந்திமொழி ஆதிக்கத்திட்டம் - தலைதூக்கும் போதெல்லாம் தி. மு. க. எதிர்ப்புக் குரல் கொடுத்துப் போராடி வந்துள்ளது. அப்படிப்பட்ட போராட்டங்களில் 1964ல் அறிஞர் அண்ணா தலைமையில் தொடங்கிய சட்டவரிகள் எரிப்புப் போராட்டத்தில் கலந்து கொண்டு சிறை சென்ற தென்னரசு அவர்கள், 1986ல் நிகழ்ந்த அதே வகைப் போராட்டத்திலும் பங்கேற்றுச் சிறை புகுந்தவர். பலமுறை சிறை சென்ற வகையால் சிறை வாழ்க்கைபற்றி விவரிப்பதில் தனியொரு பட்டறிவு அவரிடத்தில் காணலாம்.

1975-ல் ஜனநாயக நெறிமுறை - நெருக்கடி நிலை அறிவிப்பால் கழுத்து நெறிக்கப்பட்டது. மக்களின் உரிமைகள் - மூச்சுத் திணறி நைந்து கொண்டிருந்தன. அதைக் கண்டித்து எதிர்ப்புத் தெரிவிப்பதைக் கலைஞர் ஒரு கடமையாகக் கருதிச் செயற்பட்டார். அதன் தொடர்ச்சியாகத் தமிழகத்தில் நடைபெற்று வந்த கழக ஆட்சி கவிழ்க்கப்பட்டது. கழக முன்னணித் தோழர்கள் பல் நூறு பேர் - மிசா கைதிகளாக - விசாரணைக்கு இடமின்றிச் சிறை வைக்கப்பட்டனர். கலைஞரின் மகனும் மருமகனும் சிறையில் தள்ளப்பட்டனர். சென்னை சிறைச் சாலையில் சித்திரவதையே நடத்தப்பட்டது. அந்த நாட்களில் மதுரைச் சிறையில் அடைக்கப்பட்டவர்களில் முக்கியமானவர் தென்னரசு. சிறை வாழ்விலேயே அது ஒரு தனி வகைக் கொடுமை அல்லவா? அவரது மனவுணர்வு கொந்தளித்த வகையையும் இந்த ஏடு விளக்குகிறது.

அறிஞர் அண்ணா அவர்களிடம் நெருங்கிப் பழகவும் அவரது அன்பையும் நம்பிக்கையையும் பெறவும் வாய்ப்புப் பெற்றவர் அவர், கலைஞரின் உற்ற நண்பராக - அவரது அன்பில் திளைப்பவராக, அவரது எண்ணத்தைச் செயற்படுத்தும் ஆற்றல் கொண்டவராக விளங்குபவர். எம் போலும் கழகத்தின் முன்னணியினரிடமெல்லாம் அன்பு கொண்டு இனிது பழகுபவர். அதேபோல் சிறை வாழ்வில் அவர் பழகியவர்களை எல்லாம் மறக்காமல், அவர்களுடன் கொண்ட உறவைக் குறிப்பிட்டுப் பேசத் தவறவில்லை.

ஒரு இலட்சியத்திற்காகச் சிறை வாழ்வை ஏற்றவர் என்பது எவ்வளவு பெருமையுணர்வைத் தந்தாலும், நாற்புறமும் உயர்ந்து நிற்கும் சுவர்களிடையில் - கொட்டடியில் அடைக்கப்பட்டுள்ள கைதி என்று உணரும்போது எப்படிப்பட்ட அலை மோதும் உணர்ச்சிக்கு ஆளாக நேரிடுகிறது என்பதை இந்தச் சித்திரம் புலப்படுத்தும். ஒரு வகையில் அதுவேதான் கொள்கை உரம் ஏறுதற்குக் காரணமாகின்றதோ என்று நான் எண்ணுகிறேன்.

தி. மு. கழகம் ஆட்சியில் இருந்தாலும் இல்லையானாலும் அறப்போராட்டத்தில் சிறையில் வதையும் நிலை வாய்த்தாலும், அதனை இலட்சியப் பணி என்று ஏற்று அயராது நடைபோட்டவர் என்பதற்கு இந்த ஏடே சான்று.

எந்த ஒரு கருத்தையும் எளிதாக மனங்கொள்ளுமாறு, சுருங்கிய சொற்களால் பளிச்சென வரைவது அவரது இயல்பான நடை. படிக்கின்றோம் என்ற எண்ணமின்றியே படிப்பவர் அவரது ஏட்டில் திளைப்பர். நமது இயக்கத்தின் முன்னணியினர், கழக இலட்சியம் வெற்றி பெற, அண்ணாவின் அடிச்சுவட்டில் நடைபோட்டு, ஏற்றுள்ள இழப்பு - தாங்கிக் கொண்ட துன்பம், பட்ட துயரம், கொட்டிய குருதி, சிந்திய கண்ணீர், உயிர் பறிக்கப்பட்ட உடன்பிறப்புக்கள் ஆம் - நாம் தந்துள்ள விலை - விலையா; அல்ல; செய்துள்ள தியாகம் - ஆகியவற்றின் சில காட்சிகளைத் தென்னரசு அவர்கள் படமாக்கியுள்ளார்.

இன்றைய இளைய தலைமுறையினர் - எனது அருமை இளைஞரணித் தம்பிமார்கள் இந்த ஏட்டினைப் படித்திடவேண்டும் படிப்போர் நமது கழகத்தின் இலட்சியத்தின் அருமையைத் தெளிவர். அந்தத் தெளிவே இளைஞர்களைக் கொள்கை உறுதி வாய்ந்தவர்களாக - வீறு நடை போடச் செய்யும்.

தமிழ் மொழி - பண்பாடு - கலை - நாகரிகம் - தமிழின வாழ்வு - மாநிலத் தன்னாட்சி உரிமை ஆகியவற்றைக் காக்கவும் - நிலைநாட்டவும் அடுத்த தலைமுறையும் தொடரவேண்டிய பணியன்றோ நமது இயக்கப்பணி; அந்தப்பணிக்குத் தயாராக வேண்டிய இளைஞர்களுக்கு, இந்த நூல் எழுச்சியூட்டும் என்பது என் நம்பிக்கை.

இந்த ஏட்டில் நிறைந்துள்ள நண்பர் தென்னரசு அவர்கட்கும் என் வாழ்த்துக்கள். வெளியிட்டுள்ள திருமாறன் பதிப்பகத்தாருக்கும் எனது பாராட்டு.

அன்பன்
க. அன்பழகன்
(கல்வி அமைச்சர்)

# நாஞ்சிலார் வாழ்த்து

''பெண்ணில்லாத ஊரிலே'' என்ற புதுமையான தலைப்போடு, சிறுகதை மன்னன், அன்புச் சகோதரர் திரு. தென்னரசு அவர்களின் 1964-லிருந்து 1989-வரை தேதிவாரியாக, நடைபெற்ற நிகழ்ச்சிகளின் தொகுப்புதான் இந்நூல்.

எளிய, இனிமையான, சுவையான அவருக்கே உரிய பாணியில், நடையில் எழுதியிருக்கிறார்.

நூலின் ஆரம்பமே என்னைப்பற்றிச் சுற்றி அரசியல் சட்டத்தின் மொழிப்பிரிவை முதல் முறையாக அண்ணா அவர்கள் நெருப்பினுக்கு இறையாக்குவதென்ற முடிவில், பகிரங்கமாக, ஒளிமறைவின்றி நாட்டுக்குத் தெரிவித்துவிட்டு, காஞ்சிபுரத்திலிருந்து சென்னைக்கு வந்து கொண்டிருந்த நேரத்தில் கைது செய்யப்பட்டார் அண்ணாவழி என்வழி என்ற முடிவில் தென்னரசு அவர்கள் எரிப்புப் போராட்டத்திற்குத் தயாரானார். தீபரவிற்று. சட்டத்தின் மொழிப்பிரிவு சாம்பலாயிற்று. கைது செய்யப்பட்டார். நோக்கம், அரசியல் சட்டத்தை அவமானப்படுத்த அல்ல, நமது உணர்வை உலகறியச் செய்ய!

நான் ஏற்கனவே, நாகர்கோயிலில் தபால் நிலையத்திற்கு முன்பு மறியல் போராட்டத்தில் ஈடுபட்டேன். ஆறுவாரத் தண்டனை பெற்று மதுரை சிறைச் சாலைக்குக் கொண்டுவரப் பட்டேன். அதே சிறையில் ஒரு வருடம் தண்டனை பெற்ற தடந்தோள் வீரன் தென்னரசு அவர்கள் ராஜமரியாதையுடன் அரியணையில் அமர்த்தப்பட்டிருந்தார்.

தென் கிழக்காசிய நாடுகளான, தென்வியட்நாம், ஹாங்காங், ஜப்பான், அத்தோடு ப்பார்மோசா போன்ற நாடு-களுக்குச் சென்று விட்டுத் திரும்பிய என்னை, அரசாங்க விருந்தினராக மதுரைச் சிறை ஏற்றுக் கொண்டது!

நான் கொலு வீற்றிருந்த அடுத்த அறையில் சிம்மா-சனத்தில் அமர்ந்திருந்தவர் சகோதரர் தென்னரசு.

மாலை ஆறு மணிக்கு, சிறைத்தாய் தாலாட்டுப்பாடும் முயற்சி மேற்கொள்வாள்.

காலை, கதவுகள் திறந்து கொள்ளும், கூடவே எங்களது மனக் கதவுகளும்.

தென்னரசு என் சிறைக்கு வருவார். மணிக்கணக்காக, மகிழ்ச்சியோடு உரையாடுவோம். தனது இந்த நூலில் சியாங் காய் ஷேக், அவர் துணைவியார் அவர்களோடு உரையாடியவைகளைப்பற்றிச் சொன்னார். ஆர்வத்தோடு கேட்டார்! பேச்சுக்கள் குறிப்பெடுக்கப்படவில்லை. ஆனால் அவரது மனக் குறிப்பேட்டில் அழியாத இடத்தைப் பெற்றன என்பதை இந்நூல் மூலம் தெரிந்து கொண்டேன்.

இந்நூல், இலக்கியம் மட்டுமல்ல, சுருக்கமான வரலாறு! அன்பு நண்பர் தென்னரசிற்கு நினைவாற்றல் அதிகம் என்பதை சுட்டிக் காட்டத்தவறவில்லை! கால் நூற்றுண்டு காலவரலாறு இது. இந்த நூலில் அவர் எனக்கு பூச்செண்டு வழங்கியிருக்கிறார் புகழ்மாலை சூடியிருக்கிறார்.

தகுதி படைத்தவனா நான்? பழமொழி ஒன்று நினைவிற்கு வருகிறது, ''காக்கைக்கும் தன் குஞ்சு பொன் குஞ்சு!''

''மிருதுவான வார்த்தைகளைப் பயன் படுத்து ஆனால் வாதங்கள் கடுமையாக இருக்கட்டும்'' என்பதற்குச் சிறுகதை மன்னன் சிறந்த எடுத்துக்காட்டு. இது அண்ணாவின் பாதை.

அறிஞர் அண்ணாவைப்பற்றி அவர் கீழ்வருமாறு குறிப்பிட்டு, தனது இயல்புகளை வெளிப்படுத்துகிறார்''.

> ''கண்ணியமான பொது வாழ்க்கையையும், தூய்மையானதியாகத்தையும் மேற்கொள்ளுவோரை அண்ணா மதிக்கத் தவறமாட்டார். எனக்கு இதில் அசைக்க முடியாத நம்பிக்கையுண்டு. எந்தக் காரியத்தையும் நான் அவருடைய யோசனை கேட்டுத்தான் செய்வேன். சொந்த விஷயங்களில் கூட அந்த நிலைதான். நான் நினைத்தபடி, எதிர்பார்த்தபடி-கனவு கண்டபடி அவர் என்மனதில் பூரணமாக நிறைந்து விட்டார். என் பெயர் சொல்லி அவர் அடிக்கடி கூப்பிடுவார். சொர்க்கம் போவதற்கு ஊசி முனையில் தவமிருந்து வெற்றி பெற்றவனைப்போல் என் மனம் குளிர்ந்தது''. (பக்கம் 27)

இந்த உணர்வு கலந்த வரிகளைப் படித்த என் மனமும் குளிர்ந்தது.

இந்த நூலில், தென்னரசு அவர்களின் பெருந்தன்மை பளிச்சிடுவதைப் பார்க்கிறேன். ஊரறிந்த உண்மையை உளத் தூய்மையோடு மறைப்பவர்கள் உண்டு! ஆனால் வரலாற்றை

வழுக்கு நிலத்தில் பயணம் செய்ய அனுமதிக்காதவர்களும் உண்டு!

இந்த நூலில், எஸ்.எஸ். இராஜேந்திரன், நெடுஞ்செழியன், எம். ஜி. ஆர். செழியன் போன்றவர்களைப் பற்றிய குறிப்பு குறிப்பாக இடம் பெற்றிருக்கிறது. மறைத்திருக்கலாம். மறைத் திருந்தால் அவர் தென்னரசாக உயர்ந்திருக்க முடியாது.

இந்த நூலில் ''வழக்கு'' என்ற தலைப்பில் நீதிமன்றத்தில் நமது வழக்கறிஞர்கள் வாதாடிய விதம், திறமை ஒளிசிந்துகிறது

''காலில் விழுந்த கலெக்டர்'' என்ற தலைப்பில் தரும் சேதிகள், புதுமையின் பாற்பட்டதல்ல. அது ஒரு தொடர்கதை! கலெக்டர் மட்டுமல்ல, சில உயர்தர அதிகாரிகளும் அடக்கம். இப்போது, கலைஞர் மீண்டும் முதலமைச்சரானதற்குப் பிறகு, துல்லியமான மாற்றம் ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. தன்மான உணர்விற்குத் தனிமரியாதை ஏற்பட்டிருக்கிறது.

தென்னரசு அவர்களுக்கு வயது அறுபத்தி இரண்டு இளைஞர் ஆங்கிலத்திலே ஒரு பழமொழி உண்டு,

''A man is as old as he feels, a woman as old as she looks.

''மனிதன் முதுமை பெற்றவனாகிறான், அவன் அப்படி எண்ணும் போது, மங்கையோ, அவளது தோற்றத்தில்.''

வாழ்க்கையில் விரக்தியடையாத குறிப்பிட்டவர்களில் தென்னரசு ஒருவர். அவரது நம்பிக்கை, ''திருப்திப்படு, கடலில் போதுமான அளவு மீன்கள் உள்ளன'' என்பதே!

கலைஞரின் இதயத்தில் நீங்கா இடம் பெற்றவர்களில் குறிப்பிடத்தகுந்தவர் தென்னரசு அவர்கள். அது இலட்சியப் பிடிப்பு காரணமாக, இதய ஒற்றுமையின் அடிப்படையில்.

எனது நன்றி தென்னரசிற்கு. நிகழ்காலத் தம்பிமார் களுக்கும், வருங்கால இளந்தளிர்களுக்கும்! கட்சியில் யார், எப் படிப் பட்டவர், அவர்தம் சாதனை இவைகள் இடம் பெற்றிருக் கின்றன இந்நூலில். சரித்திரத்தை, சதிக்கு ஆளாக்கமுடியாது. வாழ்க தென்னரசு. ஆனால் ஒரு கேள்வி, பெண்ணில்லாத ஊரிலே குடியிருப்பது நன்றோ? குடியிருக்கத் துணிந்துவிட்ட தென்னரசிற்கு எனது ஆழ்ந்த அனுதாபங்கள். ஆனாலும் ஒரு மகிழ்ச்சி! இது தலைப்புதானே தவிர, தலையங்கம் அல்ல.

ஔ

இந்த நூலை, அழகாக, புதுமையாக, கவர்ச்சிகரமாக, திருமாறன் நிலையத்தார் வெளியிட்டிருக்கின்றனர். இதுவரை வெளிவந்த நூல்களைவிட, தனித்தன்மை என்ற ஒன்று இந்நூலில் காணப்படுவதுகண்டு மகிழ்கிறேன். இதற்குக் காரணமாக அமைந்த அன்பு நண்பர் கயல் தினகரன் பாராட்டுதலுக்குரியவர் வாழ்த்துகிறேன்.

அன்புள்ள,
கி.மனோகரன்
வருவாய்த்துறை அமைச்சர்



# எளியவர் இனியவர்

இந்நூலின் பதிப்பாசிரியர்
சகோதரர் தினகரன் எளியவர்;
ஆனால் மிகவும் இனியவர்.
முப்பதாண்டுகளுக்கு முன்பு
எனக்கு அறிமுகமானார்.
சொந்த ஊர் தேவகோட்டை!
சின்ன வயதிலேயே
எதையும் நுணுக்கமாக
எண்ணிப்பார்ப்பவர்.
முதன் முதலில்-
கவிஞர் கண்ணதாசனின்
'தென்றல்' பத்திரிகையில்
நிர்வாகியாகவும், துணை ஆசிரியராகவும் பணியாற்றினார்.
பின்னர்-கலைஞர் நிறுவனத்திலிருந்து
வெளிவரும் 'முரசொலி' 'முத்தாரம்' 'மறவன்மடல்'
ஆகிய ஏடுகளில்
துணை ஆசிரியராகப் பணிபுரிந்தார்
கால வோட்டத்தில்-
சென்னையிலிருந்தும்
மதுரையிலிருந்தும்
ஒரே சமயத்தில் வெளிவந்த
'தமிழ்முரசு' நாளேட்டின்
ஆசிரியராகவும் பொறுப்பேற்றார்.
இன்று மிகச் சிறந்த
பதிப்பாசிரியராகத் திகழ்கிறார்.
மலர்கள் தயாரிப்பதிலும்
செய்திகளைத் தொடுப்பதிலும் வல்லவர்.
நல்ல கட்டுரையாளர்;

தலைவர் கலைஞர் அவர்களிடம்
நீங்காப் பற்றுக் கொண்டவர்.
தலைவர் கலைஞர் அவர்களுக்கும்
தினகரனிடத்தில் நல்ல பிரியம் உண்டு!
இவரது தணியாத முயற்சியால்தான்
இந்த நூல் வெளிவருகிறது.
எனது சோம்பேறித்தனத்தை
முறியடித்து வெற்றி கண்டவர்
நண்பர் தினகரன்

நண்பர் தினகரன்
தலைவர் கலைஞரின்
எழுத்துக்களையெல்லாம்
நகைப்பெட்டியைப்போல்
கவனமாகக் கண்காணிப்பவர்.
அத்தகைய இனிய நண்பர்
எனது எழுத்துக்களைச் சேகரித்து
நூலாக்கிட முனைந்து
சாதனை புரிந்தது
நான் எதிர்பாராதது!
அவருக்கு என் நன்றி!
அவருக்கு ஒத்துழைத்த
அவரது நண்பர்களுக்கும்
என் நன்றி! வணக்கம்!

அன்பன்

**எஸ். எஸ். தென்னரசு**

# எனக்குத் தெரிந்த தென்னரசு அவர்கள்

திராவிட முன்னேற்றக் கழகம் ஒரு அரசியல் இயக்கம் மட்டுமல்ல-

- ★ அறிவு இயக்கம்-
- ★ பகுத்தறிவு இயக்கம்-
- ★ சிந்தனையாளர்களின் பேரவை-
- ★ நாவுக்கரசர்களின் மாளிகை-
- ★ எழுத்து வேந்தர்களின் அரங்கம்-
- ★ தியாகச் செம்மல்களின் களம்-
- ★ செயல்மறவர்களின் பாசறை-
- ★ இன உணர்வின் ஆருத உலைக்கூடம்-
- ★ கலை இலக்கியப் பூங்கா!

தமிழகத்தில் உள்ள வேறு எந்தக் கட்சிக்கும், ஒரே முகத்தில் இத்தனை ஒளிக் கீற்றுகளைக் காண முடியாது.

அனைத்துத்துறை வல்லவர்களும் இணைந்து பரிமளிக்கும் ஒரே இயக்கம் தி. மு. கழகம்தான்.

இந்த இயக்கத்தின் ஒளிச் சுடர்களுக்கு இலக்கணமாய் விளங்குகின்றவர், தென்பகுதி மண்ணின் 'சின்னமருது' என்று தலைவர் கலைஞர் அவர்களால் செல்லமாக அழைக்கப்படும் மரியாதைக்குரிய என் மூத்த சகோதரர் எஸ். எஸ் தென்னரசு அவர்கள்.

சிலருக்கு சிறுகதை மட்டுமே எழுதவரும் நாவல் தடுமாறும்!

சிலருக்கு நாவல் வரும் தொடர்கதை எனில் முகம் சுளிக்கும்!

சிலருக்கு தொடர்கதைவரும் கட்டுரை கைவராது- வந்தாலும் கருத்துப்பஞ்சம் கடுமையாக இருக்கும்.

இதில் எல்லா வரங்களையும் ஒருங்கே பெற்ற பேராளர் தமிழினத் தலைவர் கலைஞர் அவர்கள்.

இந்த இமயத்தின் அடிவாரத்தில் அமர்ந்து அதன் மூச்சுக் காற்றைச் சுவாசித்து தன் எழுத்துக்களில் கீர்த்திமிகு பரிணாமத்தை வடித்துக் கொண்டவர் எஸ்.எஸ். தென்னரசு அவர்கள்.

முப்பத்தைந்து ஆண்டுகளுக்கு முன்னரே இத்தனை கலைகளிலும் அவர் சித்தராய் விளங்கினார்.

இவரது கன்னி முயற்சியில் உருவான ''தேவாலயம்'' என்ற நாடகம் 1956லேயே அறிஞர் அண்ணா அவர்களால் பாராட்டுப் பெற்றது.

கலைவாணர் என். எஸ். கிருஷ்ணன் அவர்கள் 'தளபதி' என்ற நாடகத்தை நீண்ட நாட்கள் நடத்திக் கொண்டிருந்தார். அதற்கு அடுத்து நடத்துவதற்கு ஒரு நல்ல நாடகம் எழுதித் தருமாறு நண்பர் ஒருவர் மூலம் தென்னரசு அவர்களுக்குச் சொல்லி அனுப்பினார். கலைவாணர் கேட்டுக் கொண்டதற்-கிணங்க தென்னரசு அவர்களால் உருவாக்கப்பட்டதுதான் ''தலைநகரம்'' என்ற நாடகம். அது நூல் வடிவிலும் வெளி வந்துள்ளது.

''என் தொடர்கதைக்குக் கிடைக்கும் வரவேற்பைப் போலவே தென்னரசு எழுத்துக்கும் மக்களிடையே மரியாதை இருக்கிறது'' என்று கவியரசர் கண்ணதாசன் மனம் திறந்து பாராட்டுவார்.

எழுதுவதற்கு இவர் பிரசவ வேதனையை உண்டாக்கிக் கொள்வது கிடையாது. ஆற்றுமணலைக் கீறிக்கிளம்பும் ஊற்றுப் பெருக்கு இவரது சிந்தனை!

கவிஞர் கண்ணதாசன் திரைப்படத்துறையில் வளர்ந்து வந்த காலத்தில் திரைக்கதை அமைப்புக் கலந்துரையாடலில் தென்னரசுவுக்கு முதலிடம் தருவார்.

எப்போதும் இவரைச்சுற்றி அறிவார்ந்த கூட்டம் இருந்து கொண்டே இருக்கும். இன்றைக்கும் அது தொடர்கிறது எனில் இவருடைய அரசியல் வளர்ச்சி மட்டும் காரணமல்ல-1957 லேயே ஒரு நந்தவனம் போன்று இவரைச் சுற்றிபல்வேறு வகை நண்பர்கள் மொய்த்துக் கிடப்பர்.

பூமியில் கிடந்த தென்னரசு எனும் உலோகத்தை தங்க ஆபரணமாக உருவாக்கிய பெருமையும் - தி. மு. கழகத்தின் தூண்களில் ஒருவராக்கிய சிறப்பும் தலைவர் கலைஞர் அவர்களை மட்டுமே சேரும்.

இளைய பருவத்தில் 'சிந்தாமணி' என்ற பெயரை **தென்னரசு** எனமாற்றியவர் கலைஞர்தான். இவருக்கு **சின்ன மருது'** என்று வரலாற்றுப் பட்டத்தை வழங்கியவரும் தலைவர் கலைஞர்தான். **சிறுகதை மன்னன்** எனச் சிறப்பித்துக் கூறிய வரும் கலைஞர்தான்! இவருக்கு **இயற்செல்வம்** என்கிற பட்டத்தை வழங்கி வாழ்த்தியவரும் தலைவர் கலைஞர் அவர்கள் தான்.

பசும்பொன் மாவட்டம் திருப்பத்தூர் தொகுதியில் ஒரு நன்றி மறவாத சட்டமன்ற உறுப்பினரைத் தென்னரசு வடிவில் உண்டாக்கிக் கொடுத்த பெருமையும் தலைவர் கலைஞர் அவர்களையே சாரும்.

மாணவப் பருவத்திலிருந்து மணிவிழா வயதுவரை ஒவ்வொரு காலக் கட்டத்திலும் துளிர்விட்டுத் தழைத்த தென்னரசு அவர்களின் வளர்ச்சிக்கு கலைஞர் அவர்களின் குளிர்பார்வையும் அரவணைப்புமே காரணங்கள்.

திரு. தென்னரசு அவர்களுக்கு அறிஞர் அண்ணு குல தெய்வம்! கலைஞர் அவர்கள் குடும்ப தெய்வம்; குடும்பத்தின் காவல் தெய்வம்!

நாடக உலகின் விடிவெள்ளியாகத் திகழ்ந்த ஔவை டி. கே சண்முகம் அவர்கள் தென்னரசை அழைத்து சரித்திர நாடகம் எழுதித் தருமாறு கேட்டார். தென்னரசு அவர்களும் 'துங்கபத்திரை' என்கிற தலைப்புக் கொடுத்து நாடகத்தின் கதையை விளக்கிக் கூறினுர். கதையில் வரும் கிளைமாக்ஸ் காட்சியின் உத்தி ஔவை டி. கே. எஸ். அவர்களின் உள்ளத்தை உலுக்கி விட்டது. தென்னரசை வெகுவாகப் பாராட்டினுர். 'வெகுசீக்கிரத்தில் நாடகத்தை எழுதித் தாருங்கள், இந்த நாடகம் எங்கள் கம்பெனிக்கு வெற்றி நாடகமாக அமையும்' என்று பணித்தார்.

அந்த நேரம் 'தென்றல்' வார இதழில் இவர் எழுதிக் கொண்டிருந்த தொடர்கதையும், இயக்கப்பணியும் தொடர்ச்சியாக அமைந்து நாடகம் எழுத கால தாமதம் ஏற்பட்டது. அதன் பின்னர்தான் டி. கே. எஸ். அவர்கள் ''ராஜ ராஜசோழன்'' நாடகத்தைத் தயாரிக்கத் தொடங்கினுர் என்பது தமிழகத்திற்குச் சொல்ல வேண்டிய புதிய செய்தி!

தென்னரசு அவர்கள் கற்பனைக் கதைகளுக்கு வடிவம் கொடுப்பதைவிட நடந்த கதைகளுக்கு உயிர் கொடுப்பதையே விரும்புவார்.

வியக்கும்படியான நடந்த சம்பவங்களை நண்பர்கள் கூறினுல், செவியில் அதனை வாங்கிக் கொள்வார். அதற்குரிய முகாந்திரங்களை, தடயங்களை சிரமப்பட்டுச் சேகரிப்பார். இதில் அவருக்கு முழுத்திருப்தி ஏற்பட்டபிறகு-மூலக் கருவின் முகம் சிதையாமல் நாவல் படைப்பதில் ஆற்றல் மிகுத்தவர் தென்னரசு.

இவர் எழுதிய நாவல்களில் நூற்றுக்கு நூறு, நடந்த சம்பவங்களின் பின்னணியே மையக் கருத்தாக இருக்கும்.

சம்பவம் எந்தப்பகுதியில் நடைபெற்றதோ-அந்த மண் வாசனை சிதையாமல் வெளிப்படுத்துவது இவர் எழுத்தின் வெற்றிக்கு அடிக்கல்லாகும்.

பெண்களைக் கவரக் கூடிய கதை உத்தியும், நடையழகும், சொல்லாட்சியும், பாத்திரப்படைப்பும் இவரது நாவல்களின் வெற்றிச் சின்னங்கள்.

அந்த வரிசையில்......

மயிலாடும்பாறை, தங்கச்சிமடம், வைராக்கியம், ராஜ பவனம், மிஸ்ஸஸ்ராதா, செம்மாதுளை, சுமங்கிலியின் சுய்சரிதம், பாட்கி, ஆனந்தபைரவி, குஞ்சரத்தின்கதை, சந்தனத்தேவன், நகமும் சதையும்-ஆகியவை குறிப்பிடத்தக்கவை.

நாவல்கள், புதினங்கள் மட்டுமின்றி வரலாற்று நிகழ்ச்சி களையும் புதிய கோணத்தில் நிறையத் தந்திருக்கிறார்.

அதற்குச் சான்றாக அமைந்திருப்பது இந்த நூல்- "'பெண்ணில்லாத ஊரிலே''.

அடிநாள் தொட்டு தி. மு. கழகம் நடத்திய அத்துணை போராட்டங்களிலும் கலந்து கொண்டு சிறைத்தண்டனை அனுபவித்திருக்கிறார் தென்னரசு.

நெருக்கடி காலத்தின் நெருப்புக்குழியில் சலனமில்லாமல் சயனித்திருந்தவர்.

போராட்டம்,
கைது,
ரிமாண்ட்,
நீதிமன்றம்
தண்டனை,
சிறைக் கொடுமை,
விடுதலை!

இந்நிகழ்ச்சிகளைத் தேதி வாரியாகத் தொகுத்து, இளைய தலைமுறை உணரவும், பழைய தலைமுறை உணர்ச்சிபெறவும், கழக வரலாற்றுக் காவியத்தின் ஒரு பகுதியை வடித்துத் தந்துள்ளார் இந்நூலின் வாயிலாக!

இந்த நூலினைத் தொடர்ந்து கழகம் தோன்றிய நாள் தொட்டு இந்நாள் வரையுள்ள நிகழ்ச்சிகளை இயக்க வரலாறாகத் தொகுத்து, தென்னரசு அவர்கள் எழுதவேண்டும். எழுதுவேன் என்று உறுதி கூறியுள்ளார்.

அதற்கான அவகாசமும், ஆற்றலும், நெடிய வரலாற்றின் நினைவுக் குறிப்பும், அதனை விருப்பு, வெறுப்பின்றி எடுத்துச் சொல்லக்கூடிய திறமும் தென்னரசு அவர்களுக்கு உண்டு.

இமைப்பொழுதும் ஓய்வில்லாத-இடையருத பணிகளுக்கிடையே இந்நூலினைப்படித்து அணிந்துரை தந்து நூலின் மதிப்புக்குக் கீர்த்தி மகுடம் சூட்டியுள்ளார் தலைவர் கலைஞர் அவர்கள். கலைஞர் எழுதியுள்ள இருபது வரிகள் தென்னரசு அவர்களை இறுக அணைத்துக் கொண்டிருப்பது அறிந்து பூரித்துப்போனேன். கலைஞர் அவர்களின் தாயுள்ளத்திற்குத் தலை வணங்குகிறேன்.

பேராசிரியர் பெருந்தகை அவர்கள்-தென்னரசு அவர்களின் தியாகத் தழும்பை, அவரது எழுத்தின் சக்தியை, அவர் தலைவர் அவர்களிடம் கொண்டுள்ள நட்பின் தொன்மையை எழுதிக்காட்டியுள்ளார் என்பதைவிட, பேனு எனும் தூரிகையால் வரைந்து காட்டியுள்ளார் என்பதே பொருந்தும். அந்த இலக்கிய நெஞ்சத்திற்கு இருகரம் கூப்புகிறேன்.

"மிருதுவான வார்த்தைகளைப் பயன்படுத்து, ஆனல் வாதங்கள் கடுமையாக இருக்கட்டும்!" இவ்வாறு மேலைநாட்டு அறிஞர்களின் சிந்தனைக் குறிப்புகளோடு "பெண்ணில்லாத ஊரிலே" நூலின் சிறப்பை நாஞ்சிலாருக்கே உரிய நயமிகு, நளினமிகு சொற்களால் பாராட்டியிருக்கிருர். நாஞ்சிலார் அவர்களுக்கும், தென்னரசு அவர்களுக்கும் உள்ள நட்பின் நெருக்கத்தை எழுத்துமுத்துக்களால் மாலையாக்கி தென்னரசு கழுத்தில் அணிவித்திருக்கிருர் மரியாதைக்குரிய நாஞ்சிலார்.

'பெண்ணில்லாத ஊரிலே' வரலாற்றுக் குறிப்பை நூலாக வெளியிடுவதற்கு சகோதரர் தென்னரசு அவர்களிடம் அனுமதி கேட்டதும் அகமும் முகமும் மலர ஒப்புதல் தந்தமைக்கு நன்றி சொன்னல் அது சகோதரத்தன்மையைப் பிரித்துக் காட்டும் என்பதால் அந்தப் பெருந்தன்மையை பெருமையாகக் கருதுகிறேன்.

கலைவளத்தோடு முகப்போவியம் தீட்டித் தந்த ஓவியர் சீனிசோமு, தலைப்பு எழுத்தோவியம் வரைந்து உதவிய நண்பர் செல்லப்பன், மேலட்டையை அழகுற அச்சிட்டு வழங்கிய கனரா பிரிண்டர்ஸ் ஆகியோருக்கும்-

இந்நூல் சிறப்பாக வெளிவருவதற்கு அனைத்துவகையிலும் உடனிருந்து ஒத்துழைத்த அருமை நண்பர்களுக்கும், 'அருண் அச்சக'த்தின் சி.வி. சுப்பிரமணியம், பி. சத்தியமூர்த்தி, எஸ். மரியதாஸ் ஆகியோருக்கும் 'திருமாறன் நிலை'யத்தின் சார்பாக நன்றியினை இதயத்திலிருந்து எடுத்து வைக்கிறேன்.

அன்புடன்,

**கயல் தினகரன்**



# பெண்ணில்லாத ஊரிலே....

## 6-9-64

செப்டம்பர் திங்கள் என்றால் எனக்கு மிகவும் பிடிக்கும். பெரியார் பிறந்தது, தி. மு. க. பிறந்தது, அண்ணா பிறந்தது எல்லாமே செப்டம்பர் திங்களில்தான்! தி.மு.க. தலைமை அதே செப்டம்பர் திங்களில் அரசியல் சட்டத்தின் மொழிப்பிரிவை எரிக்க அனுமதித்தது, எனக்கு மிகுந்த உற்சாகத்தைத் தந்தது.

6-9-64 ஆம் தேதி நான் சட்டத்தை எரிக்க வேண்டிய நாள். அதற்கு ஒரு மாதத்திற்கு முன்பே எனது இல்லத்தைச் சோகம் கவ்விக் கொண்டு விட்டது. ''தம்பிக்குக் கருவாட்டுக் குழம்பு வைத்துக் கொடுங்கள்; தம்பிக்கு மீன்வருவல் செய்து போடுங்கள்; கோழிச் சூப்புப் போடுங்கள்'' என்று எனது அன்னையார் வீட்டில் உத்தரவு மேல் உத்தரவைப் பிறப்பித்துக் கொண்டுவந்தார்கள். அந்தக் கட்டத்தில் நான் சாப்பிட்ட உணவுகளை நினைத்தால் அடிக்கடி சிறைக்குப்போகலாம் போல் தோன்றியது. அடேயப்பா! என்ன சாப்பாடு, என்ன விருந்து! அதுவும் சொந்த வீட்டில்!

செப்டம்பர் 6ஆம் தேதி பகல் இரண்டு மணிக்கு திருக்கோட்டியூரை விட்டுப் புறப்பட்டேன். திருப்புத்தூர் காந்தி சிலைக்கு முன்னால் மாலை 4 மணிக்கு நான் சட்ட எரிப்பு நடத்துவதாக ஏற்பாடு. என் வீட்டில் எல்லோரும் கண்கலங்கி நின்றார்கள். எனது மனைவி அழத்தொடங்கி ஒரு கிழமையாகி விட்டது. அன்று அவளுக்கு உச்சக்கட்ட சோகம்! கையிலே ஒரு மாதக் குழந்தை! குழந்தைக்குப் பெயர் கூட வைக்காமல் போகிறேனே என்ற கோபம் வேறு! பெண்கள் எடுத்ததற்கெல்லாம் அழுததால்தான் அவர்களின் கண்ணீருக்கு மதிப்புக் குறைந்து விட்டது. கணவன் திரை கடல் தாண்டி திரவியம் திரட்டப் போனாலும் அழுது புலம்பக்கூடியவர்களாயிற்றே அவர்கள்! சிறைக்கு-அதுவும் நாள் வைத்துப் போகும் போது அழாமல் இருப்பார்களா? எனது குடும்பம் இது போன்ற 'அரசியல் ரகளை' களை அடிக்கடி மென்று விழுங்க வேண்டுமென்பதுதான் எனது ஆசை!

அரசியல் சட்டத்தின் மொழிப்பிரிவை முதன் முறையாக 1963 நவம்பரில், சென்னையில் அறிஞர் அண்ணா அவர்கள் எரிப்பதாக எங்களது திட்டம். அதன்படி அண்ணா அவர்கள் குறிப்பிட்ட தினத்தன்று கைது செய்யப்பட்டார். அதை யொட்டி தமிழ் நாட்டிலுள்ள தி.மு.க முன்னோடிகள், மாவட்டச் செயலாளர்கள் அனைவரும் 151வது பிரிவுப்படி கைது செய்யப் பட்டார்கள். அந்த நேரத்தில் காலை 8 மணியளவில் பஸ்ஸில் வந்து கொண்டிருக்கும் போது வழி மறித்து நான் கைது செய்யப்பட்டேன். கைது செய்த போலீஸ் அதிகாரி என்னை எனது இல்லத்திற்குப் போலீஸ் லாரியில் கொண்டு வந்தார். வீட்டில் பெரும் கூக்குரல்! அப்போது திருமணமான மறுமாதம்! இப்போதோ குழந்தை பிறந்த மறுமாதம்! இன்னும் இரண்டு முறை இப்படி போலீஸ் வருவதும் போவதுமாக இருந்தால், வீட்டில், பெண்களுக்கு உள்ளம் மரமரத்துப்போகும்!

நான் ஊரைவிட்டு பஸ்ஸில்தான் புறப்பட்டேன். என்னு டன் மதுரை வட்டச் செயலாளர் வழக்கறிஞர் பி. எஸ். மணியம் உட்பட பதினேழு பேர் பஸ்ஸில் ஏறினார்கள். பஸ் பாதித்தூரம் வந்ததும் எதிரே ஒரு தனிக்காரில் வந்த நண்பர்கள் மாதவன், எம் எல்.ஏ., காடு வெட்டி தியாகராசன் எம்.எல்.ஏ. இருவரும் பஸ்ஸை நிறுத்தி என்னை அவர்களது காரில் ஏற்றிக் கொண் டார்கள். இரண்டு கார்களும் முன்னும் பின்னுமாக திருப்பத் தூருக்குள் நுழைந்தன. நகரில் பலத்த போலீஸ் பாதுகாப்பு போடப்பட்டிருந்தது. காந்தி சிலையைச் சுற்றி போலீசார் முற்றுகையிட்டிருந்தனர். எனக்குக்கூட ஒரு சந்தேகம் - நாம் ச்சட்டத்தை எரிக்கப்போவதாகத்தானே அறிவித்திருக்கிறோம், காந்தி சிலையைத் தூக்கிக் கொண்டுபோகப் போவதாக அறிவிக்கவில்லையே - என்று! போலீசாரின் இதுபோன்ற ''தேவையில்லாத நடவடிக்கைகள்'' தான் சிலவேளைகளில் எதிர்க்கட்சிகளுக்குப் புகழைக் கொடுத்து விடுகின்றன!

மாலை 4 மணியளவில் நான் நகரில் ஊர்வலமாக அழைத்து வரப்பட்டேன். தோழர்கள் மாதவன் எம்.எல்.ஏ. காடு வெட்டி தியாகராசன் எம்.எல்.ஏ., உட்பட இரண்டாயிரம் தொண்டர்கள் ஊர்வலத்தில் பங்கேற்றிருந்தார்கள். நூறு சைக்கிள்கள் ஊர்வ லத்திற்கு முன்னே அணிவகுத்துச் சென்றன. தெருவில் நின்று வேடிக்கை பார்த்தவர்கள் என்னை உற்சாகப்படுத்தினார்கள். மாலைகளை அணிவித்தார்கள். உணர்ச்சி பெறாதவர்கள் என்னைப் 'பலிகடா' என்று கருதி பரிதாபமாகப் பார்த்தார்கள். அவர் களுக்காக ஊர்வலம் பரிதாபப்பட்டது! அமைதி, அடக்கம், எதற்கும் ஐயுறும் மனப்பான்மை, கொண்ட நான் அன்றைய ஊர்வலத்தில் கம்பீரமாகத்தான் நடந்தேன். அதுதான் எனக்கு

முதல் ஊர்வலம்! பல ஊர்வலங்களை ஏற்பாடு செய்திருக்கிறேன். பல ஊர்வலங்களில்-குறிப்பாக சென்னையில் கோஷம் போட்டு அணிவகுத்துப் போயிருக்கிறேன். மாலை சூட்டி நான் அழைத்து வரப்பட்ட முதல் ஊர்வலம் அதுதான்! என் கல்யாண ஊர்வலத்தைக்கூட என் குணமறிந்த என் பெற்றோர்களும், நண்பர்களும் ரத்து செய்து விட்டார்கள்.

4-20க்கு நான் காந்தி சிலைக்கு முன்னால் வந்தேன். போலீசாரால் பஸ் போக்குவரத்து தடை செய்யப்பட்டுவிட்டது. வேகமாக ஓடிவரும் ஆற்று நீரைத் தடுத்தால் எப்படித் தண்ணீர் மகிழ்ந்து உடைப்பு எடுக்குமோ அதுபோல் கூட்டம் நிறைந்து நெருக்கடியை உருவாக்கியது. தேவகோட்டையிலிருந்து மதுரைபோகும் கார்கள்-மதுரையிலிருந்து காரைக்குடி, புதுக்கோட்டை செல்லும் கார்கள் இருதிசைகளிலும் வரிசை வகுத்து நின்றன.

நான் சட்டத்தை எரிப்பதற்கு ஆயத்தமானேன். "அண்ணா வாழ்க! இந்தி ஒழிக!" என்ற உணர்ச்சி முழக்கத்திற்குப் பிறகு தீப்பெட்டியை எடுத்தேன். போலீஸ் அதிகாரிகள் தயாரானார்கள். ஒரு சர்க்கிள் இன்ஸ்பெக்டர், ஒரு சப்-இன்ஸ்பெக்டர், ஒரு வாளியில் தண்ணீருடன் ஒரு கான்ஸ்டபிள், மூவரும் என்னைச் சூழ்ந்து நின்றார்கள்.

"எதற்கு சார் தண்ணீர்?" என்று கேட்டேன்.

"நாங்கள் எரியும் சட்டத்தை எப்படி அணைப்பது? காலில் போட்டு மிதித்தால், நாங்களாவது சட்டத்தைக் கொளுத்தினோம். இந்தப் போலீஸ் அதிகாரிகள் பூட்ஸ் காலால் சட்டத்தை மிதிக்கிறார்களே அது சட்டத்திற்கு அவமதிப்பு இல்லையா" என்று உங்கள் எம்.எல்.ஏ.க்கள் சட்டசபையில் பேசுவார்களே அதற்காகத்தான் வாளியில் தண்ணீர்" என்றார் அதிகாரிகளில் ஒருவர். சட்டமன்றப் பேச்சுக்கும் ஏதோ சக்தியிருக்கிறதென்ற திருப்தி எனக்கு ஏற்பட்டது.

4-25க்கு நான் சட்டத்திற்கு நெருப்புவைத்து விட்டேன். திட்டமிட்டபடி கடமையைச் செய்தேன். போலீசாரும் அவர்களது சடங்குகளை கிடுகிடு வென்று நடத்தினார்கள். என்னிடமிருந்த மாலைகளும், ஒரு நெருப்புப் பெட்டியும், கழகக் கொடியும் அவர்களால் கைப்பற்றப்பட்டன. அப்போது சர்க்கிள் லேசாகச் சிரித்தார்.

"என்ன சிரிக்கிறீர்கள்?" என்றேன்.

"இப்படியும் தீப்பெட்டிகள் வருவதுண்டா?" என்றார் அவர்.

''இல்லை, இது சுதேசி'' என்றேன்.

''சுதேசி என்றால்—?''

''அந்தக் காலத்தில் காங்கிரஸ்காரர்கள் அயல் நாட்டுப் பொருள், சுதேசிப்பொருள் என்று சொல்லிக் கொண்டது தங்களுக்குக் கவனமில்லையா? நம் நாட்டில் நாமே தயாரித்துக் கொள்வதற்குச் சுதேசிப் பொருள் என்பது அவர்கள் கூற்று. அதுபோல் இந்தத் தீப்பெட்டி நானே தயாரித்துக் கொண்டது'' என்றேன்!

அதன்பின் அவர் அவரது குற்றச்சாட்டில், ''அண்ணாதுரையின் படம் போட்ட நெருப்புப்பெட்டி தென்னரசுவிடமிருந்து கைப்பற்றப்பட்டது' என்று குறித்துக்கொண்டார்.

தலத்திலிருந்து போலீஸ் ஸ்டேஷனுக்குக் கொண்டுவரப் பட்டேன். எனக்குப் பின்னே பெருந்திரள்! இரவு 7 மணிவரை அந்தக் கூட்டம் ஸ்டேஷனைச் சுற்றித் தேங்கி நின்றது. நேரம் செல்லச் செல்ல கூட்டம் கரைந்துவிட்டது. நான் ஸ்டேஷனிலேயே படுத்துவிட்டேன். சப்ஜெயில் நாற்றத்தை அனுபவிக்க விடாமல் என்னைப் போலீஸ் ஸ்டேஷனிலேயே தங்கவைத்த போலீசாரை நான் வாழ்த்திக் கொண்டே படுத்தேன். படுத்தேனே தவிர தூங்கவில்லை.

## 7 - 9 - 64

மறுநாள் காலை 10 மணியளவில் தேவகோட்டையிலுள்ள ஜில்லா மாஜிஸ்டிரேட் முன் என்னை ஆஜர்படுத்தினார்கள். நீதிபதி ராஜரத்தினம் (பிள்ளை) அவர்கள் 11 மணிக்கு உன்னதமான அவர் இருக்கைக்கு வந்தார். சந்தேகப்பேர்வழிகள், தெருவில் சிறுநீர் கழித்தவர்கள் முதலியவர்களையெல்லாம் நீதிபதி விடுதலை, விடுதலை என்று கட்டவிழ்த்து விட்டார். என்னைப் போலவே திருவாடானையில் அரசியல் சட்டத்தின் மொழிப் பிரிவுக்குத் தீயிட்ட நண்பர் நவமார்க்கண்டேயனை நீதிபதி விசாரித்தார். அடுத்தகணமே அவருக்கு ஒன்பது மாதக் கடுங்காவல் என்று தீர்ப்பும் கூறிவிட்டார். கூடியிருந்த கழகத் தோழர்கள் பெருமூச்சுவிடத்தான் செய்தார்கள். அதற்கு முன், மதுரை முத்து குழுவினருக்குத்தான் ஒரு வருடக் கடுங்காவல் விதிக்கப் பட்டிருந்தது. அதற்குப் பிறகு எந்த மாவட்டத்தினருக்கும் ஆறு மாதத்திற்கு மேல் தண்டனை தரப்படவில்லை. ஒன்பது மாதம் என்று வந்தது நவமார்க்கண்டேயனுக்குத்தான்.

என் முறை வந்தது. நான் எழுந்து நின்று என் வாக்குமூலத்தைச் சொன்னேன். நான் எவ்வளவு உற்சாகத்தோடு பேசினேனே அதைவிடப் பதின் மடங்கு மகிழ்ச்சியுடன் அவர்

தீர்ப்புக் கூறினர்—ஒரு வருடக் கடுங்காவல்! நீதிபதி மிகவும் நல்லவர். இரக்கமுள்ளவர். மார்க்கண்டேயனுக்கு ஒன்பது மாதம் என்ற உடனேயே நான் அருகிலிருந்த நண்பர் தா. கிருஷ்ணன், M.A., அவர்களிடம் சொன்னேன், நிச்சயமாக எனக்கு 18 மாதக் கடுங்காவலாகத்தானிருக்குமென்று! ஆனல் ஏமாந்து விட்டேன். மாதம் பன்னிரெண்டுதானே போட்டுள்ளார்! நல்லவரில்லையா? இன்னெரு வகையில் நான் அவரை மனதாரப் பாராட்டக் கடமைப் பட்டிருக்கிறேன். எனக்கு அவர் இவ்வளவு நீண்டகால தண்டனையை அளித்திராவிட்டால் கட்சியில் எனக்கென்று ஒரு இடத்தை நான் பிடித்துக் கொள்ள வேறு வாய்ப்பை எதிர்பார்த்துக் கொண்டல்லவா இருக்கவேண்டும்!

எனது தண்டனை பத்திரிக்கைகளில் வெளியானதிலிருந்து என் நிலை கொஞ்சம் உயர்ந்துதான் வந்தது என்பதை நான் ஒப்புக்கொள்வது கர்வமாகாது. கர்வம் கொள்ள வேண்டிய காரியத்தில் கர்வம் கொள்ளாமற்போனல் அரசியலில் பிள்ளைப் பூச்சிகளைப் போலாகிவிடுவோம்; கை விலங்கோடு நாம் தெருவில் போவதைப் பார்த்துச் சிரித்தவர்கள், பின்னர் நமக்கே ஆணையிடும் தம்பிரான்களாவதற்கு அரசியல் வாதிகளின் பிள்ளைப்பூச்சிக் குணம் தானே காரணம்! அரசியலில் பிள்ளைப் பூச்சிக் குணம் அறவே கூடாது.

அன்றிரவே என்னை மதுரை மத்திய சிறைச்சாலைக்குக் கொண்டு வந்து விட்டார்கள். என்னுடன் நண்பர் மார்க்கண்டேயனும் கொண்டு வரப்பட்டார். சிறைச்சாலை வாசலுக்கு வரும்போது இரவு மணி 7-30. கடைசியாக ஆசையோடு ஆளுக்கு நான்கு இட்டிலிகளைப் புட்டுப் போட்டுக் கொண்டோம் சுதந்திரம், இன்ப நினைவுகள், சுவையான சாப்பாடு, பந்தம், பாசம் எல்லாவற்றிற்கும் முழுக்குப் போட்டுவிட்டு 7-45க்கு சிறைச்சாலைக்குள் வந்து விட்டோம். சுற்றிலும் வானேக்கி வளர்ந்த மதில்சுவர்கள். ஆரம்பப் பாடசாலையைப் போல் மூலைக்கு மூலை சலசலப்பு! நாங்கள் சிறைக் கோட்டத்தின் முகப்பு வாசலில் நிற்கும்போதே சிறைக்குள்ளே எங்கள் வருகை தெரிந்துவிட்டது. பி. வகுப்பிலிருந்த பலர் எங்களை எதிர்நோக்கி இருந்தாலும் உணர்ச்சியோடும் உள்ளன்புடனும் எங்களை எதிர்பார்த்து இரண்டு ஜீவன்கள் சிறைக் கம்பிகளைப் பிடித்துக்கொண்டு நின்றன.

''வணக்கம்!''

''வருக!''

''பரிசு எவ்வளவு?''

''ஒரு வருடம்!''

''ஓ மை காட்! ஒன் இயர்!''

—டில்லி பாராளுமன்றத்தில் கம்பீரமாக ஒலிக்கும் வெண் கலக்குரல் - சிறைக்கோட்டத்திற்குள்ளிருந்து ஒலித்தது. ஆம்; நாஞ்சில் மனோகரன் எம் ஏ., எம்.பி. அவர்களும் நானும்தான் மேலே கண்டுள்ள உரையாடலை நடத்தினோம். அவருக்குப் பக்கத்தில் குமரி மாவட்ட தி.மு.க. செயலாளர் பி. எம். கண்ணு இருந்தார். அவருக்கு ஆறுமாதக் கடுங்காவல்; மனோகரனுக்கு ஆறுவாரக் கடுங்காவல்!

''நாம் எங்கிருக்கிறோம்? நாம் காண்பது கனவா, நினை வா?'' என்று சினிமாக்களில் தான் வசனம் கேட்டிருக்கிறோம். அப்போதெல்லாம் அந்தக் கட்டம் 'போர்' அடிப்பது போல் தோன்றும். ஆனால் உண்மை வாழ்க்கையில் அப்படி ஒரு கட்டம் வரும்போதுதான் அந்த வசனத்தின் உயிர் தெரிகிறது. சிறையில் ''முதல் இரவை''க் கழித்து விழிக்கும்போது எனக்கு அந்தச் சினிமா வசனம்தான் நினைவில் எழுந்தது.

## 8 - 9 - 64

காலை ஆறு மணிக்கு எழுந்தேன். அக்கம் பக்கத்திலிருந்த நண்பர்கள் என்னைச் சந்திக்க எனது அறைக்கு வந்தார்கள். அன்றையத் தேதியில் என்னைச் சேர்த்து பி. வகுப்பில் இருபது பேர்கள்தான்! அந்த இருபது பேர்களில் தி. மு. கழக அரசி யல் கைதிகளைத் தவிர மற்றவர்கள் கிரிமினல் வழக்குகளில் தண்டிக்கப் பெற்றவர்கள். அவர்களில் தோழர்கள் கந்தசாமி யும், கஜேந்திரனும் எனக்கும் நண்பர் மார்க்கண்டேயனுக்கும் ஆரம்ப உதவிகளை எந்தப் பிரதிப்பயனையும் கருதாது செய்தார் கள். கந்தசாமியும், கஜேந்திரனும் ஆயுள் தண்டனை பெற்ற வர்கள். 1957ல் நடைபெற்ற முதுகுளத்தூர் கல்வரத்தின் போது வீராம்பல் மாதாகோயில் ஷூட்டிங் வழக்கில் தண்டிக் கப்பட்டவர்கள். இவர்களின் பெயர்கள் ஒரு காலத்தில் எல்லாப் பத்திரிக்கைகளிலும் அடிபட்டன. கந்தசாமி சகோதரர்கள் முதுகுளத்தூர் தாலுக்காவில் வளமான குடும்பத்தைச் சார்ந்த வர்கள். இலஞ்சம்பனூர் என்பது அவர்களது சொந்தவூர். அப்பேர்ப்பட்ட கந்தசாமி சகோதரர்கள் சிறைக்குள் ஒரு வரம் புக்குட்பட்ட வாழ்க்கையை மேற்கொண்டிருக்கிறார்கள். அவர் களைக் கேட்டால் நாங்கள் ஈடுபட்டது ஒரு கௌரவப் போராட் டம் என்கிறார்கள். சட்டம் அதை ஏற்றுக்கொள்ள வில்லையே!

சிறை கொடியதுதான்; வெளியில் தேவைகளைப் பெருக்கி வாழ்ந்தவர்களுக்கு சிறை வாழ்க்கை நரக வாழ்க்கையாகத் தான் தெரியும். ஆனால் மனத்தில் நாம் எதற்காகச் சிறைக்கு வந்திருக்கிறோம் என்று நினைக்கும்போது உற்சாகமாகத்தான் இருக்கிறது. எந்த அரசியல் கைதிக்கும் இந்த உற்சாகம் மாறுபடாது; கிடைக்காமல் போகாது.

ரோடு எஞ்சினைப்போல் நாட்கள் மெதுவாக ஊர்ந்தன. சிலநேரங்களில் உலகத்திலுள்ள கடிகாரங்களெல்லாம் கெட்டுப் போய்விட்டனவோ என்றுகூட எண்ணத்தோன்றும். நாட்கள் நகரவே நகராது. ஒரே கொட்டடி-முப்பதடி நீளம், பதினைந்தடி அகலம்! ஒரே சாப்பாடு-காலையில் வெண்டைக்காய், மாலையில் தடியங்காய்! தூங்கி விழித்தால்-எதிரே இருபது கஜதூரத்தில் தூக்குத்தண்டனை பெற்ற கைதிகளின் முகதரிசனம்! மேலே ஒரு உலகம் இருப்பது உண்மையென்றால், கீழே ஒரு உலகம் இருப்பது உண்மைதான். அது சிறைதான்.

## 10 - 9 - 64

பி. வகுப்பு இருப்பது முதல் பிளாக்கில்! அது எட்டு அறைகள் கொண்டது. நாஞ்சில் மனோகரன் அவர்கள் முதல் அறையில் இருந்தார். நான் நாலாம் அறையில் இருந்தேன். அடிக்கடி நான் அவரைச் சந்திப்பதுண்டு. அவர் கிழக்காசியச் சுற்றுப் பயணத்தை முடித்து வந்தபின்னர் அவரைச் சந்திக்க எனக்கு வாய்ப்பே இல்லாமலிருந்தது. சிறை அந்தச் சந்திப்புக்கு பெரிதும் உதவியது. அவரது சுற்றுப் பயணத்தை விளக்கி சென்னையில் பல பொதுக்கூட்டங்களில் அவர் பேசி இருந்ததை செய்தித்தாள்களில் தான் படிக்க முடிந்தது. இன்று ஓய்வாக இருந்து அது பற்றி பேசினோம். அவரது சுற்றுப் பயணத்தில் மிக முக்கியமானது பார்மோசா போய் சியாங்கேஷேக்கைச் சந்தித்ததுதான்-இது என்கருத்து. "பார்மோசா எப்படி இருக் கிறது என்று கேட்டேன். பார்மோசா என்றால் அழகிய தீவு என்றுதான் அர்த்தம்" என்றார் மனோகரன். தொடர்ந்து அவர் கூறினார்; சியாங்கே ஷேக்கைப் பார்க்கப்போனால் உடனே பார்த்துவிட முடியாது. கொஞ்சம் காத்திருக்க வேண்டும். அவர் வருவார். வருமுன்பு, பழைய காலத்து நாடகங்களில் "ராஜ மார்த்தாண்ட, ராஜகம்பீர, ராஜ, ராஜ......" என்று பராக்குக் கூறுவதைப்போல் ஒருவன் கூவுகிறான். அதன் பின்னர்தான் ஷேக்கும் அவரது மனைவியும் வருகிறார்கள். வந்ததும் நாங்கள் ஒருவருக்கொருவர் மரியாதை செலுத்திக் கொண்டோம். நண்பர் ராஜாராம் எம். பி. அவர்களும், வல்லபாய் படேலின் மகன் தயாபாய் படேலும் சுற்றுப்பயணத்தில் இடம் பெற்றிருந்தார்கள். சோலங்கி என்னும் குஜராத்தி எம்.பி.யும் உடன் வந்திருந்தார்.

''சியாங்கே ஷேக் எடுத்ததும், ''இந்தியாவில் கம்யூனிஸ்ட் ஆதிக்கம் எப்படி இருக்கிறது'' என்று தான் கேட்டார். ''வங்கத்தில் கொஞ்சம் இருக்கிறது'' என்றார் படேல். ''ஏன் கேரளாவில் இல்லையா'' என்றார் திருமதி ஷேக். ''இருந்து உடைந்து விட்டது'' என்றேன் நான். சியாங்கே ஷேக்கிற்கு ஆங்கிலம் தெரியாது. திருமதி ஷேக் ஆங்கிலத்தை சுவைபடப் பேசினார். ''இந்தியாவில் கம்யூனிஸ்டுகளின் எதிர்காலம் எப்படி இருக்கும்?'' என்றார் திருமதி சியாங்கே ஷேக். ''ஒருபோதும் இந்திய அரசாங்கத்தை கம்யூனிஸ்டுகள் கைப்பற்ற முடியாது'' என்று திட்டவட்டமாகப் பதில் சொன்னேன். ஆமாம்; உண்மைதான். அவர்கள் இப்போது இரண்டாக உடைந்து விட்டார்கள். இல்லையா என்றார் திருமதி சியாங். ''இரண்டு என்ன, ஐந்து!'' என்றேன் நான். 'எப்படி' என்று கேட்டார் அவர். ''வலதுசாரி, இடதுசாரி, மத்தியசாரி, வலது-இடதுசாரி, இடது-வலதுசாரி'' என்று விளக்கிச் சொன்ன பிறகு அவர்களுக்கு விளங்கியது''.

மனோகரன் இப்படிச் சொல்லிக்கொண்டிருக்கும் போது நான் குறுக்கிட்டேன்.

''இந்தியாவைப் பற்றி சியாங்கே ஷேக் என்ன நினைக்கிறார்?''—நான் கேட்டேன்.

''இந்தியா சுதந்திரப் போராட்டத்தில் ஈடுபட்டிருந்த காலத்தில் சியாங்கே ஷேக் இந்தியாவின் குரலை ஆதரித்தார். கைகொடுத்தார். பிரிட்டனின் கோபத்திற்கும் பயப்படாமல் இந்தியாவை ஆதரித்தார் சியாங். ஆனால் இந்தியா பார்மோசாவின் விடுதலையை ஆதரிக்கவில்லையே என்ற கவலைதான் சியாங்கிற்கு! இதை எங்களிடம் வெளிப்படையாகவே சொன்னார்'' என்றார் மனோகரன். அத்துடன் மனோகரன் இன்னொன்றையும் குறிப்பிட்டார்.

''அப்துல் ரசாக் மலேசியாவின் துணைப்பிரதமர். அங்கு சீனர்கள்தான் இந்தியர்களைக் காட்டிலும் அதிகமாக இருக்கிறார்கள். இருந்தும், சீனர்களுக்கு அஞ்சாமல் சீனர்கள் இந்தியாவின் வடக்கு எல்லையைத் தாக்கும்போது மலேசியா இந்தியாவுக்கு ஆதரவாக சீனாவைக் கண்டித்தது. ஆனால் இந்தியா, மலேசியா-இந்தோனேசியா சிக்கலில் மலேசியாவுக்கு ஆதரவாக ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை என்று அப்துல் ரசாக் என்னிடம் இதைக் கூறும்போது அவர் முகம் கருத்துச் சிவந்து விட்டது'' என்றார் மனோகரன்.

''பார்மோசாவில் வேறு ஏதாவது சிறப்பு உண்டா?'' இது என் கேள்வி.

''பார்மோசாவிலிருந்து இருநூறு மைல்களுக்கு அப்பால் சன்மூன்லேக் என்று ஒரு ஏரி இருக்கிறது. அங்கே ஒரு புத்தர் கோயில் கட்டப்பட்டுள்ளது அந்தக் கோயிலுக்கு அருகே ஒரு கல்லறை. அந்தக் கல்லறைக்குள் சீன யாத்திரிகன் யுவான் சுவான் மண்டை ஓடு வைக்கப்பட்டுள்ளதாகச் சொல்லப்படு கிறது. அங்கே போய் அவைகளைப் பார்க்கும் வாய்ப்பைப் பெற்றோம்.'' இது மனோகரன் பதில்.

''சன்யாட்சன் மனைவி உயிரோடு இருக்கிறாரா?''

''இருக்கிறாரே! அவரது சகோதரிதான் திருமதி சியாங். இன்னொரு சகோதரி இருக்கிறார். அவர் ஒரு பேங்கரின் மனைவி யாகிவிட்டார். தமிழர் முறையில் சொன்னால் சியாங்கே ஷேக் கும், சன்யாட்சன்னும் ''சகளைகள்'' என்றார் மனோகரன்.

''ஜவஹர்லால் நேருவைப்பற்றி நீங்கள் சென்ற நாடு களில் என்ன நினைக்கிறார்கள்?''

''நேருவை மதிக்கிறார்கள்! ஆனால் இந்தியாவை மதிக்க வில்லை. இந்திய நாணயத்திற்கு எந்த நாட்டிலும் மதிப்பில்லை. விமான சர்வீஸ்களில் இந்திய நாணயத்தைக் கொடுத்தால் முகத்தைச் சுளிக்கிறார்கள். கடைகளில் (கொடுத்தால், ஸ்டர்லிங் இருக்கிறதா?, டாலர் இருக்கிறதா?'' என்று அலட்சிய மாகக் கேட்கிறார்கள். இந்திய நாணயத்திற்கு வெளி நாட்டில் தான் மதிப்பில்லை என்று இல்லை, இந்தியாவிலேயே இந்திய நாணயத்தை மதிக்காத இடம் ஒன்று இருக்கிறது. அது ஜெயில்! இங்கே காசுக்கு மதிப்பில்லை, ஷேவிங்—இரண்டு பீடிகள்! சோற்றுக்கட்டி—ஐந்து பீடிகள்! கடலை உருண்டை—மூன்று பீடிகள்!'' என்று ஒருபோடு போட்டார் மனோகரன். அவர் சொல்வது முற்றிலும் உண்மை தான். காசு இல்லாமலேயே சிறையில் பண்டமாற்றுதல் கச்சிதமாக நடைபெறுகிறது.

## 14-9-64

எனக்குச் சிறையில் பைண்டிங் வேலை தரப்பட்டது. பைண் டிங் இலாகா எட்டாம் பிளாக்கில் இருக்கிறது. மதுரைச் சிறை யிலுள்ள பிளாக்குகளில் எட்டாம் பிளாக்குத்தான் கவர்ச்சியா கவும், குளிர்ச்சியாகவும் இருக்கும். அந்த பிளாக் தொலைவிலி ருந்து பார்ப்பதற்கு அலிபாபாவின் மாயமாளிகை போல் தெரியும். வட்டவடிவமான கோட்டைச் சுவர், வாசல் மட்டும் இரண்டு பேர்களுக்கு மேல் சேர்ந்தாற் போல் நுழைய முடியாத அளவு சிறியது. அந்தப் பிளாக்கில்தான் பி. வகுப்பினர் குளிப் பதற்கு தண்ணீர்த் தொட்டியிருக்கிறது. மதுரைச் சிறையில்

தண்ணீர்ப் பஞ்சமே இல்லை. குளிப்பதற்கு வசதி அதிகம் வீட்டில் பெண்கள் குளிப்பதற்கு எவ்வளவு மறைவு வைக்கப் படுமோ அந்த அளவுக்கு சுற்றுச் சுவர் எழுப்பப்பட்டிருக்கும். நான் போன உடன் பழைய நண்பர்களிடம் கேட்டேன், ''என்ன பெண்கள் குளிக்கும் இடம் போல் தெரிகிறதே'' என்று.

''ஆமாம், நீங்கள் சொல்வது உண்மைதான். இந்த பிளாக் முதலில் தண்டிக்கப்பட்ட பெண்களுக்காகத் தான் ஒதுக் கப்பட்டிருந்தது'' என்றார் நண்பர் சந்தியாகு. சந்தியாகு யார் தெரியுமா? அதைப் பிறகு கூறுகிறேன்.

''இங்கு தான் துர்காபாய் தேஷ்முக் முன்பு வைக்கப்பட்டி ருந்தார்'' என்று கூறி எனக்கு ஒரு கூடத்தைக் காண்பித்தார் நண்பர் சந்தியாகு. அந்தக் கூடம் குளுமையான இடத்தில் அமைந்திருந்தது. வேப்பமரங்கள் முன்னுடியும் பின்னுடியும் இருந்தன.

மதுரைச் சிறையிலுள்ள தொழிற்சாலைகளில் பைண்டிங் இலாகா முக்கியமானது. மதுரை, இராமனுதபுரம் மாவட்டங் களின் அரசாங்கக் கஜானுக்களின் குறிப்பேடுகள் இங்கு தான் தயாரிக்கப்படுகின்றன. சர்க்கார் வரவு செலவுக் கணக்குகளின் வவுச்சர்களெல்லாம் இங்குதான் தொகுத்து பைண்டு செய்யப் படுகின்றன.

முன்பு பெண்கள் வைக்கப்பட்டிருந்த கூடத்தில் இப்போது காகிதக் கூடுகள் செய்யப்படுகின்றன. சர்க்கார் பணிமனை களுக்குத் தேவையான கூடுகள் இங்கு தயாரிக்கப்படுகின்றன. நாள் ஒன்றுக்கு ஆயிரம் கூடுகளைத் தயாரிக்கிறார்கள். இராமனுத புரம் மாவட்ட தி. மு. க. துணைச்செயலாளர் மாங்குடி மதியழகன் இந்த இலாகாவில் தான் பணி புரிந்தார். இராமனுதபுரம் வட்டச்செயலாளர் தோழர் மாரிமுத்து,சாத்தூர் வட்டத் துணைச் செயலாளர் வரதராஜன் இருவரும் மாங்குடிக்குப் பக்கத்தில் இருந்து தினசரி ''கவர் கட்டிங்'' பணியில் ஈடுபடுவார்கள்.

காலை 11—30 மணிவரை தொழிற்சாலையில் இருக்க வேண்டும். பள்ளி வாழ்க்கையின் பழைய, இன்ப நினைவுக ளெல்லாம் தினசரி நம் உள்ளத்தில் அலைமோதும் கட்டம் அது.

சந்தியாகு—இந்தப் பெயர் தி. மு. க. தோழர்களின் உள்ளங்களில் ரீங்காரம் செய்து கொண்டிருந்த காலம் ஒன்று இருந்தது. பத்திரிகைகளிலும், சில வேளைகளில் ரேடியோக்க ளிலும் இந்தப் பெயர் ஒலிபரப்பப்பட்டது. சந்தியாகு, ஜெக நாதன், பொன்னுச்சாமிபாண்டியன்—இம் மூன்றும் கூட்டுப்

பெயர்கள். இம் மூவரும் தூத்துக்குடி கே. வி. கே. சாமி கொலை யில் தொடர்பு கொண்டு தண்டிக்கப்பட்டவர்கள். தூக்குத் தண்டனை பெற்ற பின் சுப்ரீம் கோர்ட்டால் ஆயுள் தண்டனை வாங்கியுள்ளார்கள். மூவருமே மதுரைச் சிறையில்தான் இருக் கிறார்கள். இத்த மூவரில் சந்தியாகுதான் முதலில் எனக்கு அறிமுகமானவர். முதலில் எனக்கு அவருடன் பழகுவதற்குக் கூச்சமாகத்தான் இருந்தது. சிறையில் யாருடன் பேசுவது? எந்தப் பக்கம் திரும்பினாலும் பல்வேறு வகையான குற்றவாளிகள்தான் இருக்கிறார்கள். குற்றவாளிகள் பிறக் கிறார்களா? இல்லை. பிறவியிலேயே குற்றவாளிகளாக இருந் தால் அவர்களைத் தீண்டக்கூடாததுதான்? பேசுவது தீதுதான்? ஆனால் குற்றவாளிகளின் உற்பத்தி அப்படியல்லவே! கோபக் குறியும், சகிப்புத்தன்மை இன்மையும், வறுமையும், மான உணர்ச்சியும் தான் குற்றவாளிகள் பெருகுவதற்கு விதைகளாக அமைகின்றன.

சந்தியாகு முதலில் என்னைச் சந்தித்தபோது என்னுடன் பேசுவதற்கு வெட்கப்பட்டார் என்பதை அவரே மறுக்க மாட்டார்.

''அண்ணாச்சி என்னைப்பற்றி அருவருப்பு அடையாதீர்கள், நான் நல்லவன். சாமியின் கொலைக்கு அரசியல் காரணமல்ல; சொந்த விவகாரம். அவரது கொலை நடப்பதற்குச் சில மாதங்கள் முன் அவரது ஆட்கள் என்னை வெட்டினார்கள்! நான் காயங்களுடன் உயிர் பிழைத்து விட்டேன். அதிலிருந்து பகை துளிர் விட்டது. நான் அவரைத் தீர்த்திராவிட்டால் அவர் என்னைத் தீர்த்திருப்பார்''-சந்தியாகு என்னிடம் கூறும் போதே அவரது கோபம் தணிந்து நீண்ட நாட்கள் ஓடிவிட்டன என் பதைத் தெரிந்து கொண்டேன். அவர்து குரலில் அந்த அளவு தளர்ச்சி இருந்தது. அந்த வழக்கில் சம்பந்தப்பட்டவர்கள் தான் ஜெகநாதனும், பொன்னுச்சாமி பாண்டியனும். மூவரும் வெளி யில் வரும்போது அமைதியான பொது வாழ்க்கைக்குத் தகுதி பெற்றவர்களாக இருப்பார்கள் என்று நம்புகிறேன். இந்தி மொழிப்பயிற்சி, மெட்ரிகுலேஷன் தேர்வு என்று — இப்படி அவர்கள் படித்துக் கொண்டிருக்கிறார்கள்.

## 15 - 9 - 64

'சினிமா உலகம்' என்பதைப்போல சிறையும் ஒரு தனி உலகம் தான், கால்ஷீட், செவன்-டூ-ஒன், டூ-டூ-செவன். அவுட் டோர், இன் டோர் குளோசப், லாங்ஷாட் என்பதெல்லாம் சினிமா உலகப் பாஷைகள் ஆகும். அதுபோலவே சிறைக்

கென்று சில பாஷைகள் உண்டு. கருப்புக்குல்லா, லோலாயி, லேபர், லாக்அப், பைல், கமான், கைவிலங்கு என்பன சிறைக் குள்ளே புழங்கும் 'கலேச்சொற்கள்'.

இந்தியா விடுதலே பெற்றபின் சிறை சீர்திருத்தமடைந் திருக்குமென வெளியில் உள்ளவர்கள் நம்பியிருக்கக்கூடும். நான்கூட முதலில் அப்படித்தான் நினேத்தேன். 1962-ல் நான் விலேவாசி உயர்வு கண்டன அறப்போரில் சிறையிலிருந்த போதே பாதி புரிந்துகொண்டேன். இப்போது தான் முழுவதும் தெரிய வாய்ப்புக் கிடைத்தது. இந்தியா வெள்ளே ஏகாதிபத்தி யத்தின் கீழ் இருந்த காலத்தில் சிறை விதிகள் எப்படி இருந்ததோ அப்படியேதான் அந்த அந்நியன் போன பின்னரும் இருக்கிறது. காங்கிரஸ் தலேவர்கள் சிறையிலிருந்து அல்லற் பட்டும் அவர்கள் அதிகாரம் பெற்றபின் சிறைவிதி களேத் தளர்த்தவில்லேயே என்பதுதான் நமது கவலே.

ஜெயில் என்பது ஆங்கிலச் சொல். அதுவே வேரூன்றி விட்டது. சமுதாய ஒப்பந்தம் ஏற்பட்ட காலத்திலிருந்தே ஜெயில்' உண்டாகியிருக்க வேண்டும். இல்லாவிட்டால் மனித இரத்தத்தில் 'ஜெயில்' என்று சொல்லும்போது திகில் ஏற்படும் படியான உணர்ச்சி கலந்திருக்குமா? கடவுளுக்குப் போட்டியாக மனிதன் பூலோகத்தில் ஏற்படுத்தியிருக்கும் நரகம்தான் சிறை என்று அந்தக் காலத்தில் காங்கிரஸ்காரர்களே மேடையில் பேச நான் கேட்டிருக்கிறேன். அந்த நரகத்தைக் கொஞ்சங்கூட இன்னும் மாற்ருமல் இருக்கிருர்களே ஏன்? தங்களேப்போல் மற்றவர்களும்அனுபவிக்க வேண்டும் என்ற 'பெருநோக்கமாக' இருக்குமோ! இயந்திரம் கெட்டுப் போனுல் ஒர்க்ஷாப், அல்லது ரிப்பேர் ஷாப் எங்காவது ஒரு இடத்திற்கு அனுப்பி வைக்கிருர்கள் அல்லவா! அதுபோலத்தான் மனிதனின் உள் ளத்தில் மாசு ஏற்பட்டு அவன் வழி தவறினுல் அவனேச் சரிப் படுத்தச் சிறைக்கு அனுப்புகிருர்கள். ஆனுல் சிறை எதிர்பார்த்த படி ரிப்பேர் ஷாப்பாக இருக்கிறதா? பழுதடைந்த மனிதனேச் சீர்படுத்தி அனுப்புகிறதா? இல்லே. ஒரு உலகம் அல்லது ஒரு சிறியநாடு, அல்லது ஒரு சிற்றூர் எங்காவது கவனிப்பாரற்றுக் கிடக்கிற தென்ருல் அது சிறைதான்! இரண்டாயிரம் மூவாயிரம் பேர்கள் வாயில்லாப் பூச்சிகளேப்போல் நடமாடுகிருர்கள். கோட்டைச் சுவர்களுக்கு வெளியே இருக்கும் உலகம் இவர் களேப்பற்றிக் கவலேப்படுவதாகத் தெரியவில்லே.

குற்றவாளிகளே நீதிபதி தண்டிக்கிருர். அவர் சட்டப் புத்த கப்படி புனிதமாக நடக்கிருர். ஆனுல் தண்டிக்கப்பட்ட குற்ற வாளி எப்படி வளரப் போகிருன் என்று சிந்திக்க அவருக்கு

உரிமையில்லாமலிருக்கலாம். மூன்று மாதம் சிறையிலிருந்து விட்டு விடுதலையடைந்த அவன் மீண்டும் அதே நீதிபதி முன்பு மற்றொரு குற்றத்திற்காக நிறுத்தப்பட்டு அதிக தண்டனை பெற்று சிறைக்கு வருகிறான். அப்போதாவது நீதிபதி சிந்திக்கலாம். சிறைக்குப் போய் அவன் திருந்தவில்லை, திருந்துவதற்கு அங்கு மார்க்கமில்லை என்று அப்படி யாரும் சிந்தித்ததாகத் தெரியவில்லை. பொதுவாக எந்தச் சிறைச்சாலையை எடுத்துக்கொண்டாலும் இப்போது திருப்பித் திருப்பித்தண்டனை பெறும் பழங்குற்றவாளிகள் தான் அதிகமாக இருக்கிறார்கள். அவர்களுக்குச் சிறையில் "கருப்புக் குல்லாக்கள்" என்று பெயர். அரைக்கால் சட்டையும், குறைக் கைப் பாடியும், குரங்குக் குல்லாவுமே அவர்களது நிரந்தர உருப்புக்களாகி விடுகின்றன.

மனோதத்துவ மேதைகள் 'குற்றம் ஒரு நோய்'— என்கிறார்கள், குற்றவாளிகளின் மருத்துவச் சாலையாக இருக்க வேண்டிய சிறை பயமுறுத்தும் நரக லோகமாக புகழ் பெற்று விட்டது.

கொலைக்குத் தூக்குத் தண்டனையும் ஆயுள் தண்டனையும் இருந்தும்கூட இன்னும் கொலை வழக்குகள் குறையவில்லை. இதிலிருந்து கொடிய தண்டனைகளால் பயனில்லை என்று தெரிகிறது. குற்றவாளிகளின் உள்ளங்களைச் சீர்படுத்தும் மனோ வைத்தியம் கையாளப்படும்வரை தண்டனைகளால் குற்றவாளிகளைக் குறைத்து விடவும் முடியாது. சீர்திருத்தி விடவும் இயலாது.

சிறையில் சாதிப் பாகுபாடு இல்லை. ஒரு வேளை அவன் இன்ன சாதி. இவன் இன்ன சாதி என்று தெரிந்திருந்தால் அதுவும் தலைதூக்கலாம். ஆனால் தண்டனைக் காலத்தை ஒட்டி அந்தஸ்து உருவெடுக்கிறது. கொலைக்குற்றம் புரிந்து இருபது வருடம் தண்டனை பெற்றவன் திருட்டுக் குற்ற வாளியை ஏளனம் செய்கிறான். இது ஒரு தண்டனையா? இரண்டுவருடம், மூன்று வருடம் எல்லாம் எனக்கு வேஷ்டி துவைக்கும் நேரத்திலே ஓடிவிடும் என்று மார் தட்டுகிறான். இதனால் சிறிய தண்டனைக் காரர்கள் பெரிய தண்டனைக்காரர்களைக் கண்டால் பயந்து அவர்களுக்கு சேவகம் புரியத்தொடங்கி விடுகிறார்கள். ஆசான்-சீடன் நிலை உறுவாகி குருபக்தி வரைபோய் விடுகிறது கைதி வாழ்க்கை. இப்படிப் பழைய கைதி புதிய கைதிக்குப் பாடம் சொல்லிக்கொடுக்க ஆரம்பித்து விடுகிறான். அப்படிப் பட்ட 'வாத்தியார்களை' லோலாயி என்று சிறையில் கேவலமாகப் பேசுவார்கள். இவன் சேலம் லோலாயி, இவன் கடலூர் லோலாயி என்று தனிப்புகழ் பெற்றவர்களும் கைதிகளுக்குள்

உண்டு. கட்டுக்கு அடங்காதவர்கள், விஷமிகள், அடிக்கடி சிறைக்கு வருவோர் முதலியோரை கடலூர்ச்சிறைக்கும், சேலம் சிறைக்கும் அனுப்புவார்களாம். அதனால் தான் அப்படிப் பெயர்!

சிறைக்கைதிகள் வெறியர்கள் அல்லர். இருதயமில்லாதவர்கள் அல்லர். அவர்களும் மனிதர்கள் தான். பூக்களைப்பார்த்து மகிழ்கிறார்கள்; யாராவது அதிகாரி வீட்டுக்குழந்தை உள்ளேவர நேர்ந்தால் அதை வாரி எடுத்து முத்தம் கொடுக்கிறார்கள். சினிமா பாட்டுக்களைக்கேட்டு களிக்கிறார்கள். அந்த உள்ளங்களை பக்குவப் படுத்த வகையில்லாமற் போனதுதான் பெருங்குறை!

சிறையில் பொழுது போகாது. ஒரு நாளைக்கு ஐம்பது மணி நேரமோ என்றுகூட எண்ணத் தோன்றும். இந்த நிலையில் நிம்மதி, உற்சாகம் எப்படி இருக்கும். உற்சாகமும், உரிமையும் இல்லாமல் வெளி உலகில் இருந்ததையே காந்தியார் அடிமை வாழ்க்கை என்று கூறவில்லையா? சிறை வாழ்க்கையைப்பற்றி சொல்ல வேண்டுமா? கைதி பூச்செடிக்குத் தண்ணீர் விடவேண்டும்! ஆனால் அதிலிருந்து ஒரு மலரைக்கூட கொய்யக் கூடாது. கொய்யாமரத்திற்கு வேலிகட்ட வேண்டும். அதிலிருந்து ஒரு பிஞ்சைத் தொட்டால் அவனுக்குக் கைவிலங்கு! உரிமை இல்லாதபோது உபதேசம் ஏறுமோ?

தண்டிக்கப்பட்டவுடன் அரசியல் வாதிகள்கூட உரிமையை இழந்து விடுகிறார்கள். உண்ண, உறங்க, உட்கார, அதிகாரிகளின் உத்திரவை எதிர்பார்த்தே செய்யவேண்டும். சிறையின் கோட்டை வாசலுக்குப் போனவுடனேயே அவனது வழக்கமான உடைகள் பறிமுதல் செய்யப்படுகின்றன. உடனே உரிமை இழந்த மனிதன் என்று பறை சாற்றும் சிறை உடை கொடுக்கப்படுகிறது. அத்துடன் நின்று விடுகிறதா? அந்தகோட்டை வாசலோடு அவனது பெயரும் மறைந்து விடுகிறது. அவனுக்கு "நம்பர்" கொடுத்துவிடுகிறார்கள். முதல்நாளே மனிதன் உரு மாறி நம்பராகி விடுகிறான். உடை இழந்து, உரியவர்கள் வைத்த பெயரையும் இழந்த பிறகு அவனுக்கு உரிமையை எங்கே சிறையில் தரப்போகிறார்கள்? பாடும் குயிலின், சிறகை ஒடித்துப் போட்டால் பாடுவதற்குப் பதிலாக வேதனையுடன் கதறுகிறது. அதுபோலத்தான் மனிதர்களும் - சிறைக்கைதிகளும்! திருந்துவதற்குப் பதிலாக பெருங்குற்றவாளிகளாவதற்குத் துணிச்சலைப் பெற்று வெளியேறுகிறார்கள். இது யார் குற்றம்? இப்படிப்பட்ட குற்றங்கள் எப்போதுதான் களையப்படுமோ தெரியவில்லை. சிறையில் ஒவ்வொரு நாளும் அமைதியான இரவு நேரத்தில் இதுபற்றியெல்லாம் சிந்திக்காமல் ஒரு எழுத்தாளனால்-ஒரு அரசியல் வாதியால் இருக்க முடியாது.

## 16-10-64

அக்டோபர் 8-ம் தேதி மனோகரன் விடுதலையானார். அவர் போனபிறகு எனக்குச் சிறிது கவலையாகத்தானிருந்தது. சிறையின் முகப்புவரை நான் மனோகரனோடு அனுமதிக்கப்பட்டேன். வெளியில் வாழ்த்தொலியும், கரகோஷமும் விண்ணைப் பிளந்தன. N. V. நடராஜன் அவர்களும், மதியழகன் அவர்களும் மனோகரனை வரவேற்க வெளியில் இருப்பதாகச் செய்திகள் காற்றில் மிதந்து வந்தன. நான் கோட்டைக்குள்ளே! அவர் கோட்டைக்கு வெளியே! மனோகரன் சிறைக் கூடத்தை விட்டு வெளியேறி பதினைந்து நிமிடங்கள் வரை கோஷங்கள் அடங்கவில்லை. நமது உறவினர்களும், நண்பர்களும் நம்மை விட்டுப்போய்க் கொண்டிருப்பது போன்ற ஏக்கம், எனக்கும் உள்ளே இருந்த மற்ற தோழர்களுக்கும் ஏற்பட்டது. அந்த ஏக்கம் நிலைத்திருக்கவில்லை. மழைபோல் சிறிதுநேரம் பெய்து ஓய்ந்துவிட்டது. அந்த மாதத்தில் மிக முக்கியமான நிகழ்ச்சிகள் நடைபெற்றன. இங்கிலாந்து பொதுத் தேர்தலில் கன்ஷர்வேடிவ் கட்சியை ஐந்து வாக்கு வித்தியாசத்தில் தொழிற்கட்சி தோற்கடித்தது.

கோயம்புத்தூரில் மாஜி சப்இன்ஸ்பெக்டர் அர்ச்சுனன் சுட்டுக் கொல்லப்பட்டார்.

ரஷ்யத்தலைமைப் பீடத்திலிருந்து குருச்சேவ் தூக்கி எறியப்பட்டார்.

எந்தச் செய்திக்கும் சம்பவத்திற்கும் சிறையில் பரபரப்பு ஏற்படுவதில்லை. தன்னைப்பற்றி, தன் குடும்பத்தைப்பற்றி நினைக்காதவர்கள் இருந்தால் தானே பொது நிகழ்ச்சியில் அக்கறை ஏற்படும்! விடிந்தால், எழுந்தால் தலையில் கையை வைத்துக் கொண்டு பெருமூச்சு விடுபவர்கள்தானே சிறையில் அதிகம் இருக்கிறார்கள். நான் மட்டும், அர்ச்சுணன் படுகொலை, இங்கிலாந்தில் கன்சர்வேடிவ் கட்சி கவிழ்ந்தது, குருச்சேவுக்கு அஞ்ஞாதவாசம் என்று கதறி என்ன பயன்? யாருக்காவது அது பற்றிக் கவலை இருக்கவேண்டுமே!! கொஞ்சம் கூடஇல்லை, எறும்புகளைப்போல் சாரை சாரையாகக் குளிக்கப் போவதற்கும் வரிசைக்கும் நின்று குருபூஜைக்கு வரும் பரதேசிகளைப்போல் சோறு வாங்குவதற்கும், மணியடித்தால் மல்லாந்து படுத்து மனைவி மக்களை நினைப்பதற்கும்தானே நேரம் சரியாக இருக்கிறது.

இந்தக்கட்டத்தில்தான் நண்பர் மலைக்கண்ணன் பி.ஏ., அவர்கள் என் அறைக்குக் குடி புகுந்தார். அவர் அதுவரை சி. வகுப்பில் இருந்தார். மலைக்கண்ணன் அமைதியான குணம்

படைத்தவர். கண்ணியமான அரசியல்வாதி. அவருடன்தான் வெளிநாட்டு அரசியலைப்பற்றிப் பேசுவது வழக்கம். அவர் சர்க்கார் அலுவலராகப் பல இடங்களில் பணி புரிந்து, பின் விலகி, பொது வாழ்க்கைக்கு வந்தவராகையால் எதையும் சிந்தித்துப் பேசப் பழகியிருந்தார். அரைகுறை விவரத்தைவைத்துக்கொண்டு ஆர்ப்பாட்டம் செய்யமாட்டார். அவர் எங்கள் அறைக்கு வந்ததும் அங்குள்ள ஆயுள் தண்டனை கைதிகளுக்கு ஆங்கில ஆசானாகிவிட்டார். தோழர் மலைக்கண்ணனை எல்லோரும் வாத்தியார் என்று அழைக்க ஆரம்பித்தனர். நான்தான் அவருக்கு அந்தப் பட்டத்தைக் கொடுத்தவன்.

அந்த மாதத்தில் நடந்த முக்கியமான சம்பவம் சென்னை மந்திரிசபை மீது தி.மு.க. கொண்டுவந்த நம்பிக்கையில்லாத் தீர்மானம். நம்பிக்கையில்லாத் தீர்மானத்தை முன் மொழிந்து தோழர் மதியழகன் சமர்ப்பித்த காரணங்கள் பிரமிக்கத்தக்கதாக இருந்தன. அதைவிட கலைஞர் அவர்கள் சட்ட மன்றத்தில் புகைப் படங்களைக் காட்டி சர்க்காரின் ஊழல்களை நிரூபித்தது கழகத்திற்கு பெருமைதரக் கூடியதாக இருந்தது. இந்தியாவிலுள்ள மாநில மந்திரி சபைகளில் சென்னை மந்திரி சபைதான் ஊழலே இல்லாதது என்று இருந்த போலிக் கௌரவத்தை உடைத்து விட்ட கீர்த்தியை தி. மு க. தட்டிக்கொண்டு போய் விட்டது. இது வடநாட்டுக்கு அவ்வளவாகத் தெரிந்திருக்காது. ஏனெனில் ஆங்கிலப் பத்திரிகைகள் கட்டுப்பாடாக கலைஞர், மதியழகன் சொற்பொழிவுகளின் உயிர்க் கருத்துக்களை சிதைத்து வெறும் துண்டுச் செய்தியாக வெளியிட்டுவிட்டன. 'கரண்ட்', 'பிளிட்ஸ்' போன்ற ஆங்கில இதழ்களுக்கு கலைஞர் காட்டிய புகைப் படங்களும், மதியழகன் காட்டிய ஊழல் குறிப்புகளும் கிடைத்திருந்தால் இந்தியாவில் ''கெய்ரோனிசத்தின்'' கிளை ஸ்தாபனம் சென்னையில்தான் முளை விட்டிருக்கிறது என்பதை உலகம்உணர்ந்திருக்கும். வெளியில் இருந்த பொறுப்புமிக்கவர்கள் இதைச் செய்யாமல் போனது காங்கிரஸ்காரர்களின் பேரதிர்ஷ்டம்தான்.

பகல் இரண்டு மணி! ஜெயிலரின் ஆடர்லி வந்தான். ''உங்களை ஐயா கூட்டிவரச்சொல்கிறார்'' என்றான்.

''ஏன்?''

''யாரோ உங்களைப் பார்க்க வந்திருக்கிறார்கள்!''

''யார் வந்திருப்பது? பெயர் தெரியாதா? மனுப்போட்டிருப்பார்களே!''

''காரில் உட்கார்ந்து இருக்கிறார்கள். மனு இண்டர்வியூ ஜெயிலரிடம் இருக்கிறது! பில்லப்பன் என்பவர் இங்குதான் இருக்கிறாரா? ஆர்டர்லி கேட்டார். ஆர்டர்லி என்றால் பியூன் போல் ஒரு பணியாள்-அவரும் கைதிதான். சிறையில் அதிகாரிகளுக்கு ஆர்டர்லிகளாக இருப்பவர்கள் அனைவரும் கிராம அதிகாரிகள் தான்'' கையாடல் வழக்கில் தண்டிக்கப்பட்டவர்கள்.

இண்டர்வியூவுக்குப் போகும்போது சிறை உடைகள்தான் அணியவேண்டும் முழுக்கை சட்டை, முழுக்கால் சட்டை அணிந்துகொண்டு தலையில் குல்லாயுடன் ஜெயிலர் அறைக்குப் போனேன். நான் கொஞ்சங்கூட எதிர்பார்க்கவில்லை—அறிஞர் அண்ணா அங்கு உட்கார்ந்திருந்தார்.

''வணக்கம் அண்ணா''

''நலமாக இருக்கிறாயா?

''உற்சாகமாக இருக்கிறேன்''

''உன்னைத்தான் அதிகநாள் தண்டித்து விட்டார்கள்!''—வருத்தத்துடன் சொன்னார் அண்ணா.

''பரவாயில்லை! எதிர்காலத்திற்கு இது ஒரு பயிற்சிதானே!''

அண்ணா அவர்களுடன் நான்ஒருநாளும் இப்படிப் பேசியதில்லை.

''பில்லப்பனும் மாதவனும் புதுக்கோட்டைச் சிறையில் இருக்கிறார்கள்.''

''மாதவன் புதுக்கோட்டையில் இருப்பது தெரியும். ஆனால் பில்லப்பன் உன்னுடன் இருப்பதாகச் சொன்னார்கள்!''

''உள்ளே நமது தோழர்கள் நிறையப்பேர் இருக்கிறார்கள். அவர்களையும் பார்த்தால் உற்சாகமாகயிருப்பார்கள். ஏற்பாடு செய்யட்டுமா?'' என்றேன்.

''உன்னைப் பார்த்தால் போதும்! நீ அவர்களுக்கு எடுத்துச் சொல்லு!'' என்றார். பெரிய பிரச்சனைகளை மிகச் சாதாரணமாக முடிவுகட்டுவது அண்ணாவின் சுபாவம்! ஆனால் அண்ணாவின் மீது உயிரையே வைத்திருக்கும் கட்சித் தோழர்களுக்கு என் உரை சாந்தியாயிருக்குமா?

அண்ணா, வாழைப் பழங்களும், திராட்சைப் பழங்களும் எனக்காக வாங்கி வந்திருந்தார். அவை அழுகக் கூடிய பொருளாக இல்லாமல் இருந்தால் நானும் சாப்பிடாமல் இருந்திருப்பேன் அண்ணா தந்தவை அல்லவா!

அண்ணு பேச்சைத் தொடர்ந்தார். ''வீட்டில் எல்லோரும் வந்தார்களா?

''வரவேண்டாம் என்று சொல்லியிருந்தேன்; கேட்கவில்லை நேற்றுதான் வந்து போஞர்கள்.''

''பிறந்திருப்பது பெண் குழந்தைதானே!''

''நீங்கள் தலைமை தாங்கினல் பெண்தான் பிறக்குமென்று நீங்களே ஒருமுறை சொன்னதாக நினைவு! இளங்கோவுக்குக் கூடப் பெண்தானே!''

''பில்லப்பனுக்கு ஆண் குழந்தைதானே!''

''ஆம்; பெயர் உடையப்பன்!''

''உன் குழந்தைக்கு என்ன பெயர்!''

''இளவரசி!....... கைவலி எப்படி இருக்கிறது அண்ணு?''

''பூரண குணம்! ..................... கீழக்கரைக்கு எப்படிப் போகவேண்டும்?''

''ஒரே வழிதான்...................மாஞமதுரை, பரமக்குடி, இராமஞதபுரம், கீழக்கரை!''

''இந்த முறை இராமநாதபுரத்தில் ஒரு கூட்டம் பேசினல் நல்லது அண்ணு!''

''நல்லதுதான்; இயலாதே! மறுநாள் நான் ஆரணியில் இருக்கவேண்டும்! முன்பொருமுறை வருத்தம். இப்பவும் வருத்தம்!''

அண்ணுவுடன் செழியன் M. P. வந்திருந்தார்.

அண்ணு விடை பெற்றுக்கொண்டார். எனக்குக் கண் கலங்கியது. யாருடைய கட்டளையைக்காக்க—ஒரு ஆண்டு தண்டனை பெற்றேனே. அவரே என்னைப் பார்க்க வந்திருக்கும் போது உணர்ச்சி கொப்பளிக்காமல் இருக்குமா? வெறும் படங்களில், புத்தகங்களில் மட்டுமே அண்ணுவைப் பார்த்துவிட்டு உணர்ச்சிப் பிழம்பாக ஆயிரக்கணக்காஞேர் வடிவெடுத்திருக்கும் போது அவரைப் பார்த்து, பழகி, பேசி, நெருங்கிய எனக்கு எப்படி இருக்கும்?

என் நினைவு திரும்பிப் பார்த்தது :

1947-ல் முதன் முறையாக அண்ணு அவர்களைப் பார்த்தேன். சிவகங்கைக்கு இராமச்சந்திரன் நினைவுப் பூங்காவைத் திறந்து வைப்பதற்காக வந்தார். வழியில் காரைக்குடி ரயில்

நிலையத்தில், மாணவர்களாகிய நாங்கள் அவரைச் சந்தித்து மாலையணிவித்து மரியாதை செய்தோம். அன்று இரவு முதன் முறையாக சிவகங்கையில் அவரது சொற்பொழிவைக் கேட்டேன். ''ஜனநாயகம்'' என்ற தலைப்பில் மூன்று மணி நேரம் பேசினார்.

அதன் பிறகு 1948-ல் மதுரையில் பார்த்தேன். பெரிய பொதுக்கூட்டத்தில் பேசினார். மறுநாள் காலை டாக்டர் அருணசலம் அவர்கள் இல்லத்தில் தங்கியிருந்த அண்ணாவைப் பார்ப்பதற்காகப் போனேன். அவரைத் தொட்டுப் பார்க்க வேண்டும் என்று எனக்கு ஆசை! அங்கே அண்ணா அப்போது முகச்சவரம் செய்து கொள்வதற்கு ஆயத்தமாக இருந்தார். ஒரு வணக்கம் போட்டு விட்டு வந்தேன்.

1952-ல் நான் சென்னைக்குக் குடிபுகுந்தேன். அண்ணாவை வாரம் ஒருமுறை பார்க்கும் வாய்ப்பு, பேசும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. 1953-ல் அண்ணாவிடமே பணிபுரியும் அரிய வாய்ப்பைப் பெற்றேன். அண்ணாவின் உள்ளம் ஒரு தேன்கூடு அதில் நூற்றுக்கணக்கான அறைகள் உண்டு. அவற்றில் நமக்கும் ஒரு அறை கிடைக்காதா என்று ஏங்குவோர்தான் கட்சியில் அதிகம் பேர். எனக்குக் கூட அந்தப் பேராசை உண்டு. பணத்தால், செருக்கால், ஏமாற்று வித்தைகளால், நடிப்பால் யாரும் அண்ணாவின் அன்பைப் பெற முடியாது. கன்னியமான பொது வாழ்க்கையையும், தூய்மையான தியாகத்தையும் மேற்கொள்வோரை அண்ணா மதிக்கத் தவறமாட்டார். எனக்கு இதில் அசையாத நம்பிக்கை உண்டு. எந்தக்காரியத்தையும் நான் அவருடைய யோசனை கேட்டுத்தான் செய்வேன். சொந்த விஷயங்களில்கூட அந்த நிலை தான்! நான் நினைத்தபடி-எதிர்பார்த்தபடி-கனவு கண்டபடி-அவர் என் மனதில் பூரணமாக நிறைந்துவிட்டார். என் பெயர் சொல்லி அவர் அடிக்கடி கூப்பிடுவார். சொர்க்கம் போவதற்கு ஊசிமுனையில் தவமிருந்து வெற்றி பெற்றவனைப்போல் என் மனம் குளிர்ந்தது.

## 4 - 11 - 64

சிறையில் ஒரு மருத்துவமனை இருக்கிறது. அதில் பதினைந்து படுக்கைகள் இருக்கின்றன. இரண்டு டாக்டர்கள்; இரண்டு கம்பவுண்டர்கள், வேலை செய்கிறார்கள். அலமாரிகளில் நிறையப் புட்டிகள் அடுக்கி வைக்கப்பட்டிருக்கின்றன. எல்லாவற்றிலும் மருந்து நிறைந்தே இருக்கும். ஒன்றில் கடல் தண்ணீர், மற்றொன்றில் கிணற்றுத்தண்ணீர், வேறொன்றில்

சோடாவாட்டர்—இவைகள் தான் மருந்துகள். ஒரு நாள் விளையாட்டாக கம்பவுண்டரிடம் கேட்டேன். உடனே அவர் அப்ரூவராகி விட்டார்.

"ஏன் கேட்கிறீர்கள்! வெளியில் சொன்னால் வெட்கம்! வருடத்திற்கு இரண்டாயிரம் ரூபாய்க்கு மருந்து வருகிறது. எப்படிச் செலவாகிறதென்றே தெரியவில்லை. நான் வந்ததிலிருந்து இந்தத் தண்ணீர்தான் இங்கே இருக்கிறது" என்றார் அவர்.

இன்னொரு கம்பவுண்டரைக் கேட்டால் அவரது வாக்குமூலம் முன்னதற்கு நேர் விரோதமாக இருந்தது.

"என்னசார் மருந்து! இங்கே சிறையில் அஜீரணம்-வாயு இந்த இரண்டு வியாதிகளைத் தவிர வேறு எந்த வியாதியும் வராது. அதற்குத் தேவையான மருந்து இங்கே இருக்கிறது. இதற்கு மேலே என்ன மருந்து வேணும்? கைதிகள் தானே, இவர்களுக்கு வடமலையானும், லெட்சுமண சுவாமி முதலியாருமாவரணும்!" என்றார். இந்த நேரத்தில் எங்கள் மாவட்ட அவைத்தலைவர் சிவ. சண்முகசுந்தரனும், அருப்புக்கோட்டைத் தோழர் நடராசனும் அவுட்குவாரன்டைனிலிருந்து மருத்துவ மனைக்கு வந்தார்கள்.

"உடம்புக்கு என்ன?" என்றேன்.

"ஒன்றுமில்லை; லேசா உடம்புவலி; நடராசனுக்கு அஜீரணம்" என்றார் தலைவர்.

"டாக்டரிடம் காண்பிக்க வேண்டாமா?"

"நேற்றே காண்பித்துவிட்டோம் .......... மனச்சாந்திக்குத்தான் இப்படி வந்தோம். இங்கே என்ன வைத்தியமா நடைபெறுகிறது! டாக்டருக்கோ, கம்பவுண்டருக்கோ நோயாளிகளிடம் அன்பு இல்லை. எல்லாரையும் 'டா' பட்டம் தான் போடுகிறார்கள். நேற்று இரவு நமது வட்டச் செயலாளர் ஒருவர் என்னிடம் கண்கலங்கச் சொன்னார். கம்பவுண்டர்-அவரையே 'டேய்' உங்களுக்கெல்லாம் என்னடா வைத்தியம்! பச்சை மூங்கில்வெட்ட வேண்டியது தான்டா!" என்றாராம். எனக்கு உடல் கொதித்தது.

டாக்டரின் அன்பே நோயாளிக்கு ஒரு மருத்துவம் என்பார்கள். சிறை மருத்துமனையில் மருந்தும் இல்லை; அன்பும் இல்லை. நோய் எப்படிக் குணமாகும்?

அவைத்தலைவர் விடவில்லை- ''இன்னொரு கதையைக் கேட்டீர்களா?'' என்றார்.

''என்ன, சொல்லுங்கள்!''

''நேற்று நானும் நடராசனும் வந்தோம், டாக்டர் மருந்து எழுதிக் கொடுத்து கண்பவுண்டரிடம் போங்கள் என்றார். போனோம். இரண்டு பேரும் சீட்டைக்கொடுத்தோம். கம்பவுண்டர் சீட்டுக்களை வாங்கி மேஜையில் வைத்துவிட்டு அறைக்குள் போய்விட்டு வந்தார். வந்ததும் எனக்கு ஒரு அவுன்ஸ் வெள்ளைத் தண்ணீர் கொடுத்தார். நான் குடித்தேன். ஒன்றும் சுவை தெரியவில்லை.

''யாருக்கு உடம்புவலி?'' கம்பவுண்டர் கேட்டார் ''எனக்குத்தான்'' என்றேன்.

''அப்படியா! அஜீரணத்திற்குத் தரவேண்டிய மருந்தை உங்களுக்குக் கொடுத்துவிட்டேன். பரவாயில்லை. இந்தாங்க அஜீரணம், நீங்க இந்த மஞ்சத் தண்ணீரைக் குடியுங்கள்' என்று நடராசனுக்கு ஒரு அவுன்ஸ் மஞ்சள் தண்ணீர் கொடுத்தார் கம்பவுண்டர். எனக்கு ஒன்றும் புரியவில்லை. கம்பவுண்டர் சிரித்தார். ''என்ன யோசிக்கிறீர்கள். கவலைப் படாதீங்க. ஒன்னும் ஆகாது ஜெயில்லே காது வலிக்கு கொடுக்கிற மருந்தை கண்ணுக்கும் ஊத்தலாம். ஒன்னும் செய்யாது. ஏன்னா ஒன்னு வெல் வாட்டர்! இன்னொன்று சீ வாட்டர்! எப்படி சிறை மருத்துவமனை பார்த்தீர்களா?'' என்றார்.

அரசியல் கைதிகளுக்குக் கூடவா இப்படி என்று நினைக்கத் தோன்றும்.

முதலில் கைதிகளை மனிதர்கள் என்று அவர்கள் நினைத்தால்தானே அவர்களில் யார் அரசியல், யார் கிரிமினல் என்று பிரிக்க மனம் வரும்! எடுக்கு முன்னாலேயே பலரை ''கைதி நாயே!'' என்று டிகிரியோடு தானே அங்கே அழைக்கிறார்கள்.

நோயாளிகளுக்கும் அங்கே இருக்கும் கம்பவுண்டர்களுக்கும் இடையில் உரையாடல்களைக் கேளுங்கள்.

''அய்யா எனக்குக் கழுத்துவலி''

''கழுத்து இருந்தா வலிக்கத்தானே செய்யும்! அதுக்கு நாங்க என்ன செய்ய முடியும்!''

''எனக்கு நெஞ்சுவலி!''

''நெஞ்சுவலியா? எந்தப்பக்கம் வலிக்கிறது!''

"வலது பக்கம்!''

''இல்லை நீ பொய் சொல்லுகிறாய்! வலது பக்கம் வலித்தால் உன்னை இங்கே அனுப்பமாட்டார்களே, தத்தநேரிக்குத் (சுடு காடு) தானே அனுப்புவார்கள்!''

"டாக்டர் எனக்கு மிக்சர் கொடுக்கச் சொன்னாரய்யா!''

"மறதியாகச் சொல்லியிருப்பார். ஒரே வியாதிக்கு மிக்சர் கொடுப்பதில்லை. உனக்கு இன்னும் இ ர ண் டு வியாதிகள் சேர்ந்து வரட்டும் மூன்று மருந்தையும் கலக்கித்தர்றேன். அது தான் மிக்சர்! போ!

''ஐயா வர வர எனக்கு எடை குறைகிறது!''

''குறையட்டுமே! எடை குறைந்தால் தான் பதவி உயரும்! லால் பகதூர் எடை என்ன தெரியுமா? உன் எடையில் பாதிதான்!''

இதுதான் சிறைச்சாலையில் உள்ள மருத்துவ மனையின் நிலை. மதுரைச் சிறையில்தான் இப்படி என்று இல்லை. எல்லாச் சிறைச்சாலைகளிலுமே நிலைமை இப்படித்தான்.

பெயருக்கு இரண்டு டாக்டர்கள். நான்கு கம்பவுண்டர்கள் 'ஹாஸ்பிடல்' என்று ஒரு பெரிய பெயர்ப்பலகை!—நோய்க்குத் தான் மருந்தில்லை; நோயாளிகளிடம் காட்ட பரிவுகூடவா இல்லாமல் போய்விடும்!

## 10 - 11 - 64

சிறையில் ஞாயிறுதோறும் உபன்யாசம் நடைபெறும். சங்கராச்சாரியார் பக்தர்கள் ஒருபுறம், பாதிரிகள் வேறொரு புரம்—போதனை நடத்துவார்கள். கோயில்களில் கொள்ளை நடத்தி வந்திருப்பவர்கள்கூட அங்கே அந்தப் பரமபக்தர்களின் கூட்டத்தில் அங்கம் பெற்றிருப்பார்கள்.

பொன்னுச்சாமித் தேவர்-கே.வி.கே.சாமி கொலை வழக்கில் ஆயுள்தண்டனை பெற்றவர்—என்னிடம் வந்தார்.

''உங்களுக்குக் குன்றக்குடி அடிகளார் நல்ல அறிமுக மாமே!'' என்றார்.

''தெரியும்!'' என்றேன்.

''ஒருநாளைக்கு இங்கே வந்து உபன்யாசம் செய்ய எற்பாடு பண்ணுங்களேன்! அவர் பிரமாதமாகப் பேசுவாராமே! கடிதம்

எழுதுங்களேன்!'' என்று வற்புறுத்தினர். சரி என்று சொல்லி அவருக்கு இசைவு தெரிவித்தேன். அதன்படி அடிகளாருக்கும் கடிதம் எழுதினேன்.

## 7 - 11 - 64

அடிகளாரிடமிருந்து பதில் வந்தது. விரைவில் இந்த மாதத் திலேயே ஒரு ஞாயிறன்று வருவதாக எழுதியிருந்தார். சிறை சூப்ரெண்டெண்ட் அவர்கட்கும் என் விருப்பத்தை சுட்டிக்காண பித்து அடிகளார் கடிதம் எழுதியிருந்தார். இந்த எனது ஏற்பாடு சிறை அதிகாரிகளுக்கு ஒரு சிக்கலை ஏற்படுத்திவிட்டது. வாதப் பிரதி வாதங்களையும், கட்சிமாச்சரியத்தையும் என் முயற்சி ஏற் படுத்தி விட்டது.

சைவ மதத்திற்கும் இந்து மதத்திற்கும் ஏழாம் பொருத்தம் என்பது நாடறிந்த உண்மை. இந்த ''பொருத்தம்'' சிறையில் வேலைசெய்யத் தொடங்கியது. சிறை நிர்வாகத்திலுள்ள பார்ப்பன நண்பர்களும், சங்கராச்சாரியார் மீது பற்றுக் கொண்ட ''பணக்காரக் குற்றவாளிகள்'' சில பேரும் அடிகளார் வருகை குறித்து ஐயப்பாடு கொண்டு விட்டார்கள். ''அடிகளார் நாத்தீகராமே? தென்னரசு அழைத்ததும் வருபவர் தி.மு.க. வாகத்தானே இருப்பார். சிவமதம், இந்து மதத்திற்கு பரம விரோதியல்லவா?'' என்ற பிரச்சாரத் துணுக்குகள் சிறைக்குள் தூவிவிடப்பட்டன.

அதிகார பீடத்தில்—பொறுப்பு மிகப்பெற்றவர்கள் வேறு ஒரு கட்டத்திலிருந்து இந்தப் பிரச்னையை நோக்கினர்கள். ஒரு அரசியல் கைதியின் விருப்பப்படி நாம் ஒரு கூட்டத்தைச் சிறை யில் நடத்தினல் பின்னல் சர்க்காருக்குப் பதில் சொல்ல நேரிடுமே!'' என்பதே அவர்களுக்குச் சிக்கல்.

## 14 - 11 - 64

சிறையில் மேல்மட்டத்திலிருந்து அடிகளாருக்குக் கடிதம் புறப்பட்டது.

''நீங்கள் எந்தத் தலைப்பில் பேசப்போகிறீர்கள்? உங்களுக்கு பிற்பகல் 3-30 முதல் 4-30 வரை நேரம் ஒதுக்கப்பட்டுள்ளது''. இதுதான் சிறை நிர்வாகம் அடிகளாருக்கு எழுதிய கடிதத்தின் சாரம்.

கடிதத்திற்கு அடிகளார் பதிலும் எழுதிவிட்டார். ''நான் பேசப்போகும் தலைப்பு—'வாழ்வுக் கலை' 22—11—64 ஆம் தேதி

சிறைக்கு ஒதுக்கியுள்ளேன். குறித்த நேரத்தில் வந்து கலந்து கொள்கிறேன்.'' இதுதான் அடிகளார் கடிதத்தின் உள்ளடக்கம்.

## 16 - 11 - 64

சிறை மானேஜர் — அதாவது வரவு செலவுத் தணிக்கை சம்பந்தப்பட்ட பொறுப்பாளர் என்னை அழைத்திருந்தார். நான் சிறை உடையில்போனேன். அவர் சிரித்துக்கொண்டே பேசினர்.

''அடிகளார் 22—11—64-ம் தேதி மாலை வருகிறார். அவருக்கு மாலை போடுவதும், அவரோடு நீங்கள் சுமுகமாக உறையாடுவதும் தடுக்கப்பட்டிருக்கிறது. நீங்கள் ஒரு கௌரவ மான அரசியல் கைதியாகத்தான் நடந்துகொள்ள வேண்டும். இது எங்கள் நிலை. இப்படி ஒரு கட்டுப்பாட்டை நாங்கள் உங்களுக்கு விதிக்கவேண்டிய நிலைக்காக வருந்துகிறோம்'' என்றார் மானேஜர்.

நான் எந்தக் கட்டுப்பாட்டுக்கும் எந்தக் காலத்திலும் கட்டுப்பட்டு வந்தவனல்ல. இருந்தாலும் சிறை அதிகாரி நமக்குக் கட்டுப்பாடு விதித்திருக்கிறார் என்பதையே மனதில் கொள்ளாமல் ஒரு பார்வையாளராக இருந்துவிட்டால் என்ன? என்று கூட எனக்குத் தோன்றியது. நடக்கப்போவது கட்சிக்கூட்டமா? இல்லையே? ஏதோ ஒரு பிரச்சாரம்! அதில் நமக்கு ஏன் முக்கி-யத்துவம்-இப்படித்தான் எடுத்த எடுப்பில் நினைத்தேன். நான் நினைத்ததுதான் சரியும் கூட.

## 21 - 11 - 64

தோழர் பொன்னுச்சாமியிடம் ''அடிகளார் கூட்டத்திற்கு ஒலிபெருக்கி ஏற்பாடுகளெல்லாம் செய்துவிட்டீர்களா?'' என்று கேட்டேன்.

சங்கராச்சாரியார் வாங்கிக்கொடுத்த ஒலிப்பெருக்கி இருக்கிறது. ஏற்பாடு செய்து கொள்வோம் என்றார்.

உற்சாகமாகத்தரன் இருக்கிறேன். மாலைக்குப் பதிலாக சிறையில் எங்கள் பிளாக்கில் உள்ள ரோஜாச்செடியில் ஒரு மலரைப் பறித்து அடிகளார் கையில் கொடுத்தால் போதும் என்ற முடிவுடன் இருந்தேன்.

## 22 - 11 - 64

பொழுது விடிந்து விட்டது. பொன்னுச்சாமி என் அறைக்கு வந்தார்.

''கேட்டீங்களா சேதியை! ஒலிபெருக்கி கெட்டுப்போய் விட்டதாம்!'' என்ருர்.

''வேறு என்ன செய்வது?''

''அதுதான் எனக்கும் ஒன்றும் புரியவில்லை. சங்கராச்சாரி யார் ஆட்கள் திட்டமிட்டுத்தான், இந்த வேலையைச் செய்து விட்டார்கள். நாங்கள் சிறைக்குள் இருக்கிரேம். எங்களுக்கு எந்த மதமாக இருந்தால் என்ன? பக்திதானே பிரதானம்'' என்ருர் பொன்னுச்சாமித்தேவர்.

''நீங்கள் உணர்ந்தால் சரி. இந்துமதம் ஒரு பெரிய விலாங்கு. அது சிறிய மீன்களைக் கபளீகரம் செய்யத்தான் வந்தது'' என்றேன்.

''அண்ணுச்சி நீங்கள் பொடிவைத்துப் பேசுவதில் சூரர். விஷயத்திற்கு வாருங்கள் ஒலிபெருக்கி வேண்டுமே?''

இருவரும் ஒரு ஏற்பாடு செய்தோம். வெளியிலுள்ள ஒரு நண்பரின் அன்பளிப்பாக உள்ளே ஒலிபெருக்கி ஏற்பாட்டை முடித்துக் கொண்டோம்.

மாலையில் வரவேற்பு ஏற்பாடு, மாலையின்றி நடைபெறக் காத்திருந்தது. அடிகளார் சரியாக 3-30-க்கு உள்ளே நுழைந் தார். பி. வகுப்பு கிரிமினல் கைதிகள் அனைவரும் சிறை உள் வாசலில் நின்று அவரை வரவேற்ருர்கள்.

நான் உள்ளே கொஞ்சதூரம் தள்ளி நின்று வரவேற்று வணக்கம் கூறினேன். அவர் பொலிவுடன் காணப்பட்டார். உற்சாகமாக என்னிடம் பேச விரும்பினர். ஆனல் எனக்கு விதிக்கப்பட்டுள்ள நிபந்தனை அவருக்குத் தெரியாதல்லவா? நான் பட்டும் படாமலும் பேசினேன்.

நேராக ஒன்பதாம் பிளாக்கிலுள்ள அரங்கத்திற்குச் சென் ேறாம். 1500 கைதி நண்பர்களும் அங்கே அமைதியாக அமர்த் திருந்தார்கள்.

அடிகளார் பேசினர். ''எனது அருமை நண்பரின் வேண்டு கோளுக்கிணங்க இங்கே வந்தேன்'' என்று என் பெயரைக் குறிப்பிடாமல் சொல்லி விட்டுப் பேச்சைத் தொடங்கினர்.

தோழர் அருச்சுணத் தேவர் அவர்கள் வரவேற்புரை நிகழ்த்தினர். அவர் ஒரு பக்திமான். முதுகுளத்தூர் கலவர வழக்கில் ஆயுள் தண்டனை பெற்றவர். கம்பீரமான உருவம்.

ஆறடி இரண்டு அங்குல உயரம்! தேவாரம், திருவாசகம் என்றால் அவருக்குச் சுவைக்கரும்பு அவர் அடிகளாரை வரவேற்றுப் பேசும்போது 'திருப்பாற்கடலைக் கடைந்த' என்பதைக் குறிப்பிட்டார். அடிகளார் ஒரு புரட்சிச்சாமியார். அன்று அடிகளார் பேசும் போது சில புதுமைக் கருத்துக்களை வினயமாகவும், கிண்டலாகவும் குறிப்பிட்டார்.

நண்பர் 'திருப்பாற்கடல்' என்றார். நான் அட்லாசைப் பல முறை பார்த்திருக்கிறேன். வங்காளக்குடாக்கடல், அரபிக் கடல், இந்துமகாக்கடல் என்று தென்படுகிறதே தவிர திருப் பாற் கடலைக்காணமுடியவில்லை என்றார். மேடையிலிருந்த மதாபிமானிகளுக்குச் 'சுருக்' என்றது. பின்னர் அடிகளார் அதற்கு விளக்கம் தந்தார். திருப்பாற்கடல் என்பது அவரவர் மனக்கடல்தான் என்றார். அடிகளார் இன்னொரு கருத்தைச் சுவைபடச் சொன்னார்.

''கடவுள்கள் இப்போது தமிழகத்தில் கைக்கு எட்டாத அம்புலிபோல் தோன்றுவதாகக் கருதப்படுகிறது. ஏன் அந்த நிலை உருவாயிற்று? பக்தர்கள், கடைவீதியில் வாங்கவேண்டியதை எல்லாம் கோயிலில் ஆண்டவனிடத்தில் கேட்கிறார்கள். வக்கீல்களிடமும், டாக்டர்களிடமும் முறையிடவேண்டிய விஷயங்களை கோயிலில் சாமியிடம் முறையிடுகிறார்கள். கொலை செய்தவன் தன்னை வழக்கில் விடுதலை பெறச் செய்ய வேண்டுகிறான். கொலை செய்யப்பட்டவன் குடும்பமும் அதேசாமியிடம் கொலைகாரனைத் தண்டிக்க வேண்டுகிறது. வாதியும் வேண்டுகிறான். பிரதிவாதியும் வேண்டுகிறான். இதெல்லாம் கடவுளிடம் எதிர்பார்க்கலாமா?'' இப்படிச் சில அரிய கருத்துக்களை அடிகளார் தூவினார். ஏற்கனவே அடிகளாரின் வருகையை எதிர்த்தவர்கள் மேற்கொண்டு ஆத்திரமடைந்தார்கள்.

கூட்டம் 4-20-க்கு முடிவடைந்தது. அடிகளார் என்னிடம் விடைபெற்றுக்கொண்டார்.

## 26-11-64

இலட்சிய நடிகர் எஸ். எஸ். இராஜேந்திரன் அவர்கள் சிறைக்கு வந்தார். மாங்குடி மதியழகன், மார்க்கண்டேயன், கண்ணு, நான் நால்வரும் அவரைப் பார்க்கப்போனோம். இந்த நால்வருக்கும்தான் அவர் மனுப்போட்டிருந்தார்.

நான் அவரைப் பார்த்ததும் 'பூம்புகார்' படத்தின் வெற்றிக்காக மகிழ்ச்சி தெரிவித்தேன்.

''உங்கள் கடிதம் கிடைத்தது. விஜயகுமாரியும் உங்கள் கடிதத்தைப்பார்த்து மகிழ்ந்தாள்'' என்ருர் எஸ். எஸ். ஆர்.

''தேவர் சிலேத் திறப்புவிழா! இளேயாங்குடியில் நாடகத் தலேமை!''

''தேவர் சிலேத்திறப்புக்கு உங்களே யார் அழைத்தது?''

''சசிவர்ணத்தேவர்! நமக்கு யாராக இருந்தால் என்ன, தேவரின் காங்கிரஸ் எதிர்ப்பு உணர்ச்சியும், அவரது வீரமுழக்கமும் இவைகளேப்பற்றித் தானே நாம் பேசப் போகிருேம்...... உங்களுக்கு ஏதாவது பணம் கட்டட்டுமா?'' என்ருர்.

''வேண்டாம்; நான் ஏற்கனவே பணம் கட்டியிருக்கிறேன். பின்னுடி பார்த்துக்கொள்ளலாம் என்றேன்.

திரு. இராஜேந்திரன் அவர்களுடன் தோழர் தெட்சிணுமூர்த்தி வந்திருந்தார். மதியழகன் உடை அவருக்குச் சிறிது கலக்கத்தைக் கொடுத்தது. நண்பர் மதியழகன் சி. வகுப்பில் வைக்கப்பட்டிருந்தார்.

திரு. இராஜேந்திரன் அவர்கள் விடைபெறு முன்—நான் இரண்டு வேண்டுகோள்களேச் சமர்ப்பித்தேன். மதுரைச் சிறையில் 'பூம்புகார்' படத்தைப் போட்டுக் காண்பிக்கவேண்டும் என்பதை வலியுறுத்தினேன். பல நூற்றுக்கணக்கான கைதிகளின் வேண்டுகோளே நான் தீர்மான வடிவில் சொன்னேன். இன்னென்று மதுரைச்சிறைக்கு ஒரு ரேடியோ வாங்கிவைக்க வேண்டும் என்பது. இரண்டையும் இலட்சிய நடிகர் அவர்கள் நிறைவேற்றுவதாகச் சொன்னுர். அவருக்கு கவனப்படுத்திஞல் நிச்சயமாகச் செயல்படும் சுபாவமுள்ளவர்.

இலட்சிய நடிகர் வந்துபோனபிறகு சிறையில் சில குழப்பங்களே ஏற்படுத்திஞர்கள் சில குழப்பவாதிகள்.

''எஸ்.எஸ் ஆர். வந்தாரே உங்களே ஏன் பார்க்கவில்லே?'! என்று, யார் யாரை எஸ்.எஸ்.ஆர். பார்க்கவில்லேயோ அவர்களிடமெல்லாம் போய் விஷமூட்டிஞர்கள் சில ஆயுள் தண்டனேக் கைதிகள். இதுபோலவே அண்ணு வந்துவிட்டுப்போன பொழுதும் 'கத்தரிக்கோல்' போட்டார்கள்.

''டாங்கே வந்தார். பூபேஷ் குப்தா வந்தார். மோகன் குமாரமங்கலம் வந்தார், கம்யூனிஸ்டுக் கைதிகள் அனேவரையும் அழைத்துப் பார்த்தார்கள். என்ன இருந்தாலும் கம்யூனிஸ்டுகள் கட்டுப்பாடு அலாதிதான்'' என்ருர் ஒரு காங்கிரஸ் கைதி!

''ஏன் நீங்கள் அந்தக் கட்சிக்குப் போய்விடுவது தானே!'' என்றார் மார்க்கண்டேயன்.

''கொள்கை? அது ஒன்று இருக்கிறதல்லவா!'' என்றார் காங்கிரஸ் கைதி.

''அந்தக் கொள்கைப் பிடிப்புத்தான் எங்களுக்கும்! நாங்களும் ஒரு குறிக்கோளுக்காக வந்திருக்கிறோம்'' என்றார் மார்க்கண்டேயன். காங்கிரசும், கம்யூனிஸ்டும், தி.மு.க.வை வீழ்த்துவதற்குச் சிறையில் இணைபிரியாக் கூட்டுச் சேர்ந்திருக்கிறார்கள். வெளியில்கூட இப்படிக்கூட்டு இல்லை. கம்யூனிஸ்டுகள், காங்கிரசுகள் என்று நான் கூறுவது-சிறையில் அவர்கள் அரசியல் காரியத்திற்காக வந்தவர்கள் அல்லர். சிறைக்கு வந்தபிறகு அப்படி ஆனவர்கள். கொலைக் குற்றம் புரிந்து கொஞ்சகாலத்திற்குள்ளாக விடுதலை பெற்றுவிட வேண்டுமென்பதற்காகச் சிலர் 'காங்கிரஸ்' ஆகியிருக்கிறார்கள். அதுபோலவே கம்யூனிஸ்டுகளும்! வெளியிலிருக்கும்போது அவர்களுக்கு எந்த இசமும் தெரியாது. கம்பிக்குள் வந்தபிறகுதான் 'கம்யூனிசம்' படிக்கிறார்கள். பேசுகிறார்கள்.

## 3 - 12 - 64

இராமநாதபுரம், முதுகுளத்தூர், பரமக்குடி வட்டத் தோழர்கள் விடுதலையானார்கள். நானும் மதியழகனும் அவர்களை வழியனுப்பிவிட்டு அறைக்கு வந்தோம். சற்று நேரத்திற்குப் பின்னர் சசிவர்ணத் தேவர் அவர்கள் பார்க்க வந்திருப்பதாகச் சொன்னார்கள். நானும் மதியழகனும் போனோம். சட்டசபைத் தொகுதிப் பிரிவினைபற்றி கலந்து பேசினோம். 21-12-64-ல் கன்னியாகுமரியில் கூடும் தொகுதி நிர்ணயக் கமிஷனுக்கு போகப் போவதாக சசிவர்ணத் தேவர் சொன்னார். அங்கே வலியுறுத்தப்படவேண்டிய இரண்டு முக்கிய திருத்தங்களை நான் கூறினேன். சசிவர்ணத் தேவர் போய் அரைமணி நேரத்திற்குப் பின்னால் சிறைக்குள் ஒரு செய்தி பரவியது. கலைஞர் வந்திருக்கிறார் வெளியில் காரில் உட்கார்ந்திருக்கிறார் என்று பேசிக்கொண்டார்கள். நான் வெகு நாட்களாக அவரை எதிர் பார்த்துக் கொண்டிருந்தேன். ஆகையால் கலைஞர் வந்திருக்கிறார் என்ற தகவல் எனக்கு இன்பமளித்தது. அடுத்து இன்னொரு தகவல் வந்தது. தென்னரசு, மதியழகன் இருவரையும் தவிர மற்றவர்களுக்குத்தான் கலைஞர் அவர்களைப் பார்க்க அனுமதி கிடைத்திருக்கிறது என்று அதிகாரப்பூர்வமான செய்தி வந்தது. கலைஞரிடம் நிறையப் பேசவேண்டும் என்றிருந்தேன். இது எனக்கு ஒரு பெரிய ஏமாற்றமே! எனது அறையிலிருந்து தோழர் மார்க்கண்டேயன் கலைஞரைப் பார்க்கப் போயிருந்தார், விவரங்களைக் கேட்டுக் கொண்டேன்.

''உங்களைப் பார்க்க முடியவில்லையே என்று கலைஞர் மிகவும் வேதனைப்பட்டார். விடுதலையாகும் தோழர்களை வரவேற்பதற்கு கலைஞர் வந்துவிட வேண்டுமென்று அவசரமாகத்தான் புதுக் கோட்டையிலிருந்து வந்தாராம். அதற்குள் நம் தோழர்கள் விடுதலையடைந்து போய்விட்டார்களே; எப்படியும் தோழர்களை மதுரை மாவட்ட தி.மு.க. அலுவலகத்திலாவது சந்தித்து வாழ்த்திவிட்டுப் போகிறேன் என்று கலைஞர் உங்களிடம் தெரி விக்கச் சொன்னார்'' என்றார் மார்க்கண்டேயன்.

அதுபோலவே மாலையில் ஒரு நல்லசேதி கிடைத்தது. கலைஞர் அவர்கள் விடுதலையடைந்த தோழர்களைச் சந்தித்து அவர்களுடன் புகைப்படம் எடுத்துக் கொண்டாராம் எனக்கு மனம் குளிர்ந்தது.

## 8-12-64

மாவட்ட அவைத்தலைவர் சிவ. சண்முக சுந்தரனார் அவர் களும் அருப்புக்கோட்டை வட்டத் தோழர்களும் விடுதலை யானார்கள். மூன்று மாதங்கள்வரை என்னோடு பழகி உடனி ருந்து உணவருந்தி குதூகலமாக இருந்து வந்த அருப்புக் கோட்டைப் பெரியவர் என்னிடம் விடைபெறும் போது எனக் குத்துக்கம் தொண்டையை அடைத்தது அவர்களை வரவேற்க திரு. என்.வி. நடராசன் அவர்களும், கே. ஆர். ராமசாமி அவர் களும் வந்திருப்பதாகச் சொன்னார்கள். சிறை புகுந்தவர்க ளுக்கு உடனடியாகக் கிடைக்கக் கூடிய உற்சாகம் இந்த வரவேற்பு ஒன்றுதானே? தி.மு.க. மேலிடம் இந்தப் பணியைக் கூடுமானவரை சீரியமுறையில் நிறைவேற்றி வைத்தது.

அருப்புக்கோட்டைத் தோழர்கள் விடுதலையான நாளிலி ருந்து மேலதிகாரிகளைச் சந்திக்கும் படலம் ஆரம்பமாயிற்று நான்கு மாதத்தண்டனை பெற்றிருந்த மாங்குடி மதியழகன், மலைக்கண்ணன் பி.ஏ., இராமேசுவரம் ச. மாரிமுத்து, மம்சா புரம் சங்கையா ஆகிய நால்வரின் விடுதலைத் தேதியை அறி வதற்காகத் தினசரி சிறை அதிகாரியைச் சந்திக்க வேண்டிய தாயிற்று. எனக்குத் திரை உலகத் தொடர்பு கொஞ்சம் உண்டு. அதில்தான் ''மூடு'' (மன நிலை) என்று அடிக்கடி சொல் வார்கள். கதாசிரியருக்கு இன்று 'மூடு' சரியில்லை; பாடலாசிரி யருக்கு 'மூடு' சரியில்லை என்பார்கள். அதுபோலச் சிறையிலும் சொன்னார்கள். காலையில் ஜெயிலர் (சிறை அதிகாரி) நன்றாகப் பேசுவார். பகலில் கடுகடுப்பாகப் பேசுவார். மாலையில் சிரிப் பார். பக்கத்திலுள்ள குமாஸ்தாவிடம் கேட்டால் இன்றைக்கு ஜெயிலருக்கு 'மூடு' சரியில்லை. நீங்கள் கவலைப்படாதீர்கள்!

என்பார்கள். பிளாட்டிங் பேப்பர்—காகிதத்திலுள்ள மையைத் தான் உறிஞ்சும். ஆனால் இந்தக் காக்கிச்சட்டை-நெஞ்சிலுள்ள ஈரத்தையே உறிஞ்சி எடுத்து விடுகிறது. கைதிகள் விடுதலையாகும் தேதியைத் தெரிவிப்பதென்றால் அதிகாரிகளுக்கு நஞ்சாக இருக்கிறது. இருபது தடவை நடந்தபிறகு 16-12 64-ல் மதியழகன் அணியினர் விடுதலை என்று தெரிந்து கொண்டேன்.

கலைஞர் அவர்கள், மதுரைக்கு வருவதாகக் கேள்விப்பட்டேன். டிசம்பர் 15-ம் தேதியுடன் மதுரைமுத்து அணியினர் கைதாகி ஓராண்டு முடிவடைவதையொட்டி மதுரையில் ஒரு பாராட்டுக்கூட்டம் நடத்தப்போவதாகவும் அதில் கலைஞர் பேசப்போவதாயும் திரு.பி. எஸ் மணியம் தகவல் தெரிவித்தார். அதையொட்டி 16-12-64-ம் தேதியன்று சிறை வாயிலில் மாங்குடி மதியழகனை வரவேற்க கலைஞர் அவர்களை வருகைதரும்படி கேட்டுக்கொண்டேன். அவர்களும் இசைவளித்தார்கள்.

## 16 - 12 - 64

டிசம்பர் 16-ம் நாள் வந்தது. சிறை அதிகாரி, நண்பர்களை காலை 8 மணிக்குள் விடுவித்தால்தான், கலைஞர் அவர்கள் தோழர்களை வரவேற்க முடியும் என்றநிலை உருவாகியிருந்தது பகல் 12 மணியளவில் நெல்லை நகராட்சியில் அறிஞர் அண்ணா அவர்களின் படத்தைத் திறந்துவைப்பதற்கு கலைஞர் அவர்கள் இசைவளித்திருக்கிறார். ஆகையால் கலைஞர் அவர்கள் காலையில் நெல்லைபோய் விட்டார். இராமநாதபுரம், மதுரை மாவட்டத் தோழர்கள் மதியழகன் குழுவினரை வரவேற்றார்கள் என்று தெரிய வந்தது. அன்று மாலை மானாமதுரை பொதுக் கூட்டத்தில் கலைஞர், மதியழகன் மற்றும் அனைவரும் கலந்து கொண்டதாக மறுநாள் செய்தி கிடைத்தது மகிழ்ச்சிதான் எனக்கு.

## 17 - 12 - 64

மாங்குடி மதியழகனுடன் விடுதலையடைந்தவர்களில் மலைக் கண்ணன் பி.ஏ. அவர்களும் ஒருவர். அவரை வரவேற்பதில் பரமக்குடி நகர தி. மு. க. வும், வட்ட தி. மு. க வும் போட்டியிட்டுக் கொண்டு அதனால் ஆத்திரமடைந்த பரமக்குடி நகர தி.மு.க. தோழர்கள் மலைக்கண்ணனுக்கு கருப்புக்கொடி காண்பித்ததாக உடன்தகவல் வந்தது. இதைவிடக் கொடுமையான தகவலை வாழ்நாளில் நான் கேட்டதே இல்லை. நான் சிறையில் இருந்து கொண்டு எனக்கு வரும் கோபத்தை யாரிடம் காண்பிக்க

முடியும்! கோபத்தை அடக்குவதற்கு மலைக்கண்ணனின் பொறுமையையும், அவரது அடக்கத்தையும் எண்ணிக் கொண்டு ஆறுதலடைந்தேன். வெளியார் தினசரிகளில் மாறி மாறி அறிக்கைகள் வந்தன. அந்த அறிக்கைகளையும் பார்த்தேன். நானே ஏதும் செய்யமுடியாத நிலையில் இருக்கி றேன். மாவட்டப் பொறுப்புக்குழு எல்லாவற்றையும் சீர் செய்துவிடும் என்ற நம்பிக்கை எனக்கு மேலோங்கியிருந்தது. பரமக்குடி சம்பவத்தைத் தொடர்ந்து எனக்கு மூன்று நாட்கள் நிம்மதியில்லை.

## 20 - 12 - 64

அன்று இரவு 7-30 மணிக்கு அற்புதமான நாதசுர இசை வானொலியிலிருந்து தெரித்து மிதந்து வந்தது. நீண்ட நாட் களுக்குப் பின்னர் அன்று தான் நாதசுர ஓசையை நான் கேட் கிறேன். யாரோ வாசித்தார்கள். பைரவி ராகம்! என்னைத் தூங்கவைத்துவிட்டது. வாசிப்பது யாராக இருக்கும்? காருக் குறிச்சியாக இருக்காது! அது ஒரு விதமான சந்தம்! திருமெய் ஞானம் நடராச சுந்தரமும் இல்லை-அவரது வாத்தியம் நிரடா னது. வேறு யார் இப்படி வாசிப்பது? புல்லாங்குழல் போல் இருக்கிறதே என்று பெருமூச்சு விட்டேன். கச்சேரி முடிவில்தான் தெரிந்தது, வாசித்தது ஷேக் சின்ன மௌலானா என்று! தவில் வாசித்தவர் வலங்கைமான் சண்முகசுந்தரம். நாதம் அவருடன் பேசுவது போல் எனக்குப்பட்டது. கிளியின் பேச்சு, புலியின் கர்ஜனை எல்லாமே அந்தத் தவிலிலிருந்து கிளம்பின. இசை தான் எவ்வளவு மகத்தானது. எவ்வளவு சக்தி! அந்த சக்தியை உருவாக்கும் கலைஞர்களிடம் தான் எவ்வளவுதிறமை! இசையை அனுபவிப்பவர்களுக்குத்தான் அதன் மகிமை புரியும்.

ஷேக்சின்னமௌலானாவின் நாதசுரக் கச்சேரியை முதன் முறை நண்பர் முரசொலி மாறனின் திருமணத்தில் கேட்டேன். அன்று ராகவப் பிள்ளை தவில் வாசித்தார். இப்போது அவர் இல்லை. இசையுலகின் துர்பாக்கியம் அவர் மறைந்துவிட்டார். முன் வரிசையில் உட்கார்ந்து கச்சேரி கேட்டேன். எனக்கு அடுத்த குரிச்சியில் அறிஞர் அண்ணா அவர்களும், அவருக்கு அடுத்த குரிச்சியில் மந்திரி மன்ருடியாரும் உட்கார்ந்து கச்சேரி கேட்டார்கள்.

வித்துவான் சின்னமௌலானா கதர் உடுத்தி கிராப்புத் தலையுடன் மேடைக்கு வந்தார். பார்ப்பதற்கு காங்கிரஸ் சட்ட மன்ற உறுப்பினர்போல் இருந்தது. நாயனத்தை அவர்பிடித்து வாசிக்கத் தொடங்கினார். நாதசுரக் கலையின் நுணுக்கங்களை

அறிந்த ஒருவர், ''இவர் நாயனத்தைப் பிடிப்பதிலேயே ஒரு மாற்றம் இருக்கிறதே? ராஜரத்தினம், காருக்குறிச்சி எல்லோரும் வலக்கரத்தை மேலே வைத்து வாசிப்பார்கள் இவர் இடக்கரத்தை மேலே வைத்து வாசிக்கிருர்'' என்ருர். பக்கத்தில் உட்கார்ந்திருந்த இன்னெருவருக்கு ஏதாவது பதில் சொல்ல வேண்டும் போல் தோன்றியது. உடனே சொன்னர், ''வாசிப்பது சின்னமௌலாஞ அல்லவா! எதிர்மதம் தானே?'' என்ருர். சங்கீதம் கேட்கவந்த என் போன்ரேருக்கு இந்தச் சர்ச்சை மிகுந்த வேதனையைத் தந்தது. சங்கீதக்கச்சேரிகளில் எழும் இது போன்ற சர்ச்சைக் கச்சேரிகள் சண்டையில் கொண்டுபோய் விடுவதுமுண்டு! எல்லாத்துறைகளிலும் முட்டி மோதிச் சண்டையிடும் தென்னகம் ஒரு காலத்தில் சங்கீதத் துறையிலும் மோதிக்கொண்டிருக்கிறது. அன்று சிறையில் எனக்கு இந்த நினைவுகளெல்லாம் தலைதூக்கி எழுந்தன.

## 22 - 12 - 64

காலைக் கதிரொளி கொலைபாதகச் செய்திகளுடன் என் அறையுள் நுழைந்தது. தனுஷ்கோடியில் கடல் கொந்தளித்து ஐநூறுக்கு மேற்பட்டவர்கள் பலியாஞர்கள் என்ற செய்தி சிறையிலுள்ளோர் அனைவரின் உள்ளங்களையும் கவ்விக் கொண்டது. ஒரு சிற்றூரில் ஒரே நாளில் இரண்டு பேர் இறந்தாலே நமக்கு வியப்பாகவும் வேதனையாகவும் தோன்றும்! ஐநூறு பேர்! புகழ் பெற்ற பாம்பன் பாலம் தகர்ந்தது! தனுஷ்கோடி ரயில் நிலையத்தைக்காணவில்லை! பிரயாணிகள் ரயிலொன்று பாம்பனுக்கும் தனுஷ்கோடிக்கும் இடையில் கவிழ்ந்து கிடக்கிறது! அதில் சுற்றுலாப்போன மாணவர் குழு இருந்தது! அவர்களின் கதி தெரியவில்லை. இப்படியெல்லாம் செய்திகள் வானெலியிலும், பத்திரிகைகளிலும் ஒலித்த வண்ணமாயிருந்தன. 1939 - ல் இரண்டாவது உலகப் போர் காலத்தில் போலந்தின் மீது, ஹிட்லரின் மின்னல் தாக்குதல் ஏற்பட்ட போது கூட இப்படி அடுக்கடுக்கான தகவல்களை நாம் கேட்டதில்லை. கள்ளத் தோணி ஏறுபவன், கயிற்றில் தொங்குபவன், கையில் சட்டியேந்திப் பிச்சை எடுப்பவன் இவர்கள் மட்டும் தமிழர்களல்லர். கடலுக்குள் மூழ்கி கண்களை மூடுபவனும் இந்தஉலகில் தமிழன் தான் என்று முடிவாகி விட்டது. காமராஜர் விமானத்திலிருந்து பார்த்துவிட்டு நமக்கு ஆறுதல் கூறியிருக்கிருர்! சாவு அதிகமில்லை! என்று அவரது பேச்சைப் படித்ததும் பொதுத் தேர்தல் நினைவுக்கு வந்தது! ''தி. மு. க. வா? ஐம்பது பேர் தானே! பரவாயில்லை! கம்யூனிஸ்டா நான்கு பேர்கள் தானே! என்ன பிரமாதம்! காங்கிரஸ் 138 அல்லவா! என்று காமராஜர் தேர்தல் முடிவுகளைப் பற்றிப் பேசினர். அதுபோலவே

இப்பொழுதும் பேசிவிட்டார் ''சாவு கொஞ்சம் தான்'' என்று சிரிப்பதா? அழுவதா? என்று தெரியவில்லை.

சில பத்திரிகைகள் தாங்கள் எழுதுவது சுத்தப் பொய் என்று தெரிந்தும் துணிச்சலாகப் பொய்களை எழுதுகின்றன. தினசரிகளில் செய்திகளைப் புனைந்து வைத்தால் கேட்க நாதி யில்லை என்று ஆகிவிட்டது தமிழகத்தில் பிரபல்சினிமா நடிகர் ஜெமினி கணேசனும், சாவித்திரியும் இராமேஸ்வரத்தில் சிக்கித் தவிப்பதாகவும், தங்களது நிருபர் நேற்று அவர்களைப் பேட்டிக் கண்டதாகவும் ஒரு பத்திரிகை 25 - 12 - 64ம் தேதி எழுதியது. எனக்கு அவர்களது நிலை வருத்தத்தைக் கொடுத்தது. ஆனால் அவர்கள் 23-12-64ம் தேதியே மதுரை வந்து அன்றே விமான மூலம் சென்னை போய் விட்டார்களாம். பிற்பாடுதான் இந்த உண்மை நாட்டுக்குத் தெரிந்தது.

தீப்பிடித்த வீடுகளில் அக்கம் பக்கத்திலுள்ளவர்கள் சாமான் களைத் திருடுவதுபோல் நெருக்கடி நேரத்தில் சில தினசரிகள் இப்படிச் செய்திகளைத் திரித்து வெளியிடுகின்றன. இதுவும் ஒருவகையான திருட்டுத்தானே? கை கால்களை நிதானமின்றிப் பயன் படுத்தினல் சுளுக்கிக் கொள்கிறதல்லவா? அதுபோல் பொய் சொன்னல் நாக்குச் சுளுக்கிக்கொள்ளக் கூடாதா? பொய் யாக எழுதினல் விரல்கள் வீங்கிவிடக்கூடாதா? பொய் சொல்-வது மாபாதகம் என்று கூறிவிட் டு பொய் சொல்வதற்கு அவய-வங்களை இயங்க விடலாமா? இது படைத்தவன் குற்றமா-பயன் படுத்துபவன் குற்றமா?

## 1 - 1 - 65

புதுவருடம் பிறந்தது. செய்தி இதழ்களெல்லாம் புத்தாண் டைப்பற்றியே சோதிடங்களை வெளியிட்டிருந்தன. 'தமிழ்நாடு' இதழ் மட்டும் கடந்த ஆண்டு நடைபெற்ற அரசியல் சம்பவங் களை விரிவாகக் குறிப்பிட்டிருந்தது. அதிலும் தி. மு. க. வின் இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியை வெகு தெளிவாக எழுதியிருந்தது. இந்தியைக் கண்டிப்பதில் கருமுத்து தியாகராசன் செட்டியார் அவர்கள் நமக்குத் தோள் கொடுத்தவர்; இன்னும் துணை நிற்பவர், ஆகையால் அவரது வாளாக 'தமிழ்நாடு' நாளிதழ் இயங்குவது வியப்புக்குரியதாகாது.

இந்தியை எதிர்ப்பதில் தி. மு. க. வின் குறிக்கோள் நிலை யானது என்பது நாடறிந்த உண்மை. 1938லிருந்து அண்ணு அவர்கள் இந்தியை எதிர்த்து வருகிருர். இப்போது 1965 நடக் கிறது. இருபத்திஏழு ஆண்டுகாலமாக இந்த மொழிப்

போராட்டம் நடந்து வருகிறது. ஆமாம் இந்தி எதிர்ப்புச் சரித்திரம் இருபத்தி ஏழு ஆண்டு காலமாகக் கொஞ்சங்கொஞ்சமாக எழுதப்பட்டு வருகிறது. புதுப்புது ஆட்கள் - தலைவர்கள் இந்தி எதிர்ப்பு அணியில் சேர்ந்து வருகிறார்கள். ஆச்சாரியரும் அவர்களில் ஒருவர்.

1—1—65ம் தேதிய இதழ்களில் சில இதைக் குறிப்பிட்டிருந்தன. அந்த மகிழ்ச்சியில் நான் படுக்கைக்குப் போனேன்.

என் அறைக்கு எதிரே ஒரு சிறிய பிளாக் இருக்கிறது. அதில் ஆறு அறைகள் இருக்கின்றன. தூக்குத் தண்டனைக் கைதிகள் அதிகமாகிவிட்டால் அந்த அறைக்குள் தள்ளி வைப்பார்கள்.

சென்னை உயர்நீதிமன்றத்தில் டிசம்பர் 15-க்கு மேல் எடுத்துக் கொள்ளப்பட்ட கொலை வழக்குகளில் பெரும்பாலானவை தூக்குத் தண்டனையைக் குறைத்து ஆயுள் தண்டனை விதித்துத் தீர்ப்பளிக்கப்பட்டவை. இதனால் இருபதுக்கு மேற்பட்ட தூக்குக்கைதிகள் ஆயுள் தண்டனை—ஏழு வருடம்—இப்படித்தண்டனை பெற்று இறங்கினார்கள். இதனால் என் எதிரே இருந்த பிளாக் காலியாகி விட்டது.

ஆனால் அன்று இரவு திடீரென்று எதிர்பிளாக்கிலிருந்து பாட்டொலி வந்தது.

"அமுதும் தேனும் எதற்கு - நீ
அருகினில் இருக்கையிலே—எனக்கு!"

—என்ற குரல் கேட்டு எழுந்து எதிர் பிளாக்கைக் கூர்ந்து கவனித்தேன். நிர்வாணமாக ஒருவன் உள்ளே நின்று கொண்டிருந்தான்.

காலையில் எழுந்ததும் அவனைப் பார்க்கலாம் என்று இருந்தேன். ஆனால் நான் பார்க்கப் போகுமுன் அவனே என்னையும் மற்றவர்களையும் எழுப்பிவிட்டுவிட்டான்.

காலையில் வார்டர்களெல்லாம் 'திடுதிடு' என்று ஓடும் சத்தம் கேட்டு விழித்தேன். "ஆறும் பிளாக் செல்லில் இருந்து மெண்டல் பயல் ஓடிவிட்டான்! பிடியுங்கள்! பிடியுங்கள்" என்று சத்தம் போட்டார்கள். கால்மணி நேரத்திற்குள்ளாக அவன் பிடிபட்டுவிட்டான். சிறையில் தவறு செய்யாதிருக்கும் போதே அடிப்பார்கள். தவறு செய்துவிட்டால் தோலையே உறித்து விடுவார்களே. பாவம் அந்தப் பைத்தியக்காரனை

மொழிக்கு? மொழி அடித்தார்கள். தெருவில் யாராவது அடித்தால் நாம் சமாதானம் கூறலாம். சிறையில் என்ன செய்வது கண்களை மூடிக்கொள்ளலாம். அதுதான் நம்மால் சிறையில் செய்யக்கூடிய உதவி.

தடியடி தர்பார் முடிந்ததும் ஒரு வார்டரைக் கேட்டேன். அவன் யார்? என்று. அவர் சொன்ன பதில் எனக்குத் திகைப் பூட்டியது. அந்தப் பைத்தியக்காரன் ஒரு என்ஜினியர். ஆனந்தன் அவன் பெயர். அவனது பெற்றோர்களே அவனை உள்ளே அனுப்பி வைத்திருக்கிறார்கள். அவனை அடிக்கும்போது அய்யா, அய்யா, அடிக்காதீங்க அய்யா! நீங்க சொல்றபடி கேட்கிறேன்! என்று அழுதுகொண்டே சொன்னான். அவன் பைத்தியம் சார், இன்ஜினியர் சார் என்று சொல்லிக்கொண்டே அடிக்கிறார்கள். அடித்தால் பைத்தியம் போய்விடுமா? அடித்து நொறுக்கிவிட்டு என்னிடம் வந்து அடியாட்கள் சொன்னார்கள், ''அவன் புத்திசாலி; கெட்டிக்காரன் சார்; இங்கிலீஷ் தலைகீழ் பாடம்; புத்தி பேதலிச்சுப் போச்சு?''.

''இவ்வளவு தெரிந்தும் ஏன் அவனை அடிக்கிறீர்கள்'' என்று கேட்டேன்.

''அடிக்கிறது தானே எங்களுக்கு வேலை, அடிக்கிற வேலை இல்லையின்னா சிறையிலே எதுக்கு வார்டர் உத்தியோகம்?'' என்றார் வார்டர்.

இதற்கு நான் என்ன பதில் சொல்லுவது!

இதிலிருந்து பாடம் தெரிந்து கொண்டேன். சுதந்திர உணர்ச்சி என்பது பைத்தியத்தையும் மிஞ்சக்கூடியது. பைத்தியம் ஏன் ஓடுகிறான்?

## 11-1-65

அதிகாலையில் ஒரு வார்டர் என் அறைக்கு வந்தார். ''சார் இன்று எம். ஜி. ஆர். உங்களைப் பார்க்க வரப்போகிறார். இப் போதுதான் போனில் பேசி நேரம் முடிவு செய்தார்கள். அன்பில் தர்மலிங்கம் தான் போனில் பேசினார்'' என்றார் அந்த வார்டர். இந்தச் செய்தி காட்டுத் தீ போல் சிறை முழுவதும் பரவி விட்டது. நானும் அவர் வருவார். என்று எதிர்பார்த்தேன். இராமேஸ்வரத்திற்குப் போய் இருப்பதாகப் பத்திரிகையில் பார்த்ததும் மதுரைச் சிறைக்கு வருவாரென்று எதிர்பார்த்தேன்.

செய்தி கேள்விப்பட்டதிலிருந்து எனக்கு நேரம் போவது கடினமாக இருந்தது. வழக்கம் போல் 9 மணிக்கு வேலைக்கு போனேன். சரியாக 10-30க்கு என்னைக் கூப்பிட்டு அனுப்பினார்கள். எம் ஜி ஆர். அவர்களிடம் பேசவேண்டியதை எல்லாம் குறிப்பெடுத்துக் கொண்டு போனேன். ஆனால் அங்கே வியப்பளிக்கக்கூடிய காட்சியைக் கண்டேன். எம் ஜி.ஆர். வரவில்லை. மற்றும் எதிர்பாராவகையில் கலைஞர் வந்திருந்தார். கலைஞரைத் தான் எம். ஜி. ஆர். என்று வார்டர் சொல்லிவிட்டார் என்று நினைத்துவிட்டு கலைஞருடன் பேசிக்கொண்டு இருந்தேன். வெளியில் மூன்று கார்கள் இருந்தன. என்னுடைய நண்பர்கள் பி. எஸ். மணியம், கு. திருப்பதி, நீ. அன்புச்செழியன், திருச்சி காமாட்சி, கவிஞர் அருளானந்தம், நத்தம் மீரான் முதலானோர் கலைஞருடன் வந்திருந்தார்கள். கால்மணி நேரம் கலைஞர் இருந்தார். பின் விடைபெற்றுக் கொண்டார். அவர் போகும் போது தான் அன்பில் விவரத்தைச் சொன்னார். M.G.R. தான் முதலில் தங்களைச் சந்திக்க ஏற்பாடு செய்து இருந்தார். அதற்குள்ளாக சாத்தூரிலிருந்து கலைஞர் வந்து மனுப்போட்டு விட்டார் என்றார். அதன் பிறகு நானும் அன்பிலும் ஜெயில் அதிகாரியை சந்தித்து M. G. R. அவர்களுக்கு ஸ்பெஷல் இண்டர்வியூ தரும்படி வாதாடினோம். அதன்படி அடுத்தவார இண்டர்வியூவை ரத்து செய்துவிட்டு அன்றே எம். ஜி. ஆரையும் பார்த்தேன்.

18—1—65 செ. கந்தப்பன் M.P. வந்தார். நெடுநேரம் பேசிக்கொண்டு இருந்தேன். தர்மபுரி இடைத்தேர்தல் பற்றிச் சொன்னார். நூற்றுக்கு நூற்றுப்பத்து நாம் தான் வெற்றி பெறுவோம் என்றார். சிறையிலுள்ளவர்களுக்கு மகிழ்வூட்டும் சேதிகள் தான் தேவை. குழப்பம், மனக்கவலை தரும் தகவல்களைக் கைதிகளுக்கு—அதுவும் அரசியல் கைதிகளுக்குச் சொல்லுவது விவேகமாகாது. அப்படிச் சொல்வதற்கென்றே சிலர் இருக்கிறார்கள். எனக்கும் அப்படிப்பட்ட சோதனைகள் ஏற்பட்டன. இன்பச்சேதி கிடைக்கும் வரை முதலில் கிடைத்த துன்பத்தகவல்கள் துளைத்துக் கொண்டிருக்கும். ஆனால் ஒன்று வெளியில் இருக்கும் போது ஏற்படும் துன்பங்களைவிட, சிறையில் இருக்கும் போது ஏற்படும் துன்பம் சதவிகிதத்தில் சாதகமானதுதான். வெளியில் கோபப்பட்டால் பதிலுக்கு ஏதாவது செய்யக்கிளம்புவோம். உள்ளே இருக்கும் போது பதிலுக்குச் செய்ய முடியாதல்லவா? அது நமக்கு நல்லதுதானே? இவையெல்லாம் சேர்த்துத்தான் தியாகம் என்கிறார்களோ? துன்பத்தைத் தாங்கிக் கொள்வது கோபத்தை விழுங்கிக்கொள்வது, பார்க்கக் கூடியவர்களைப் பார்க்க முடியாமல் திணறுவது—சுவையில்லாத சாப்பாட்டை சாப்பிடுவது—இவற்றின் கூட்டுத் தொகைதான் தியாகம்!

## 22 - 1 - 65

பத்திரிகைகளில் திடுக்கிடும் தகவல்கள் வந்தன. 18—1—65 லிருந்து நடந்துவரும் சட்டமன்ற தொடர் கூட்டத்தில் தி.மு.க. உறுப்பினர்களுக்கும், ஆளுங்கட்சித் தோழர்களுக்கும் வாக்கு வாதம் நடந்து கொண்டிருந்தது குடியரசு தினத்தன்று, தி.முக. வினர் செயற்குழு தீர்மானப்படி வீடுகளில், கட்சிக் காரியால யங்களில் கருப்புக்கொடி கட்டுவது பற்றி சட்டமன்றத்தில் பிரச்சனை வந்தது முதலமைச்சர் பக்தவத்சலம் முச்சந்திப் போக் கிரியைப்போல் மூர்க்கதனமாகப் பேசியிருந்தார். குடியரசு தினத்தன்று கருப்புக்கொடி கட்டினால் பொதுமக்கள் ஆத்திர மடைவர் கலகம் ஏற்படும் ஆனால் போலீஸ் பாதுகாப்பு இருக்காதென்றார் முதலமைச்சர். அவர் பலவீனமடைந்து விட்டார் என்பதை அவரது கோப உணர்ச்சி எடுத்துக் காட்டி யது. அதுபோல 23—1—65 வரை சட்டசபையில் பேசினார்.

## 25 - 1 - 65

சென்னையில் அறிஞர் அண்ணா அவர்களும், மதுரையில் நாவலர் அவர்களும், கரூரில் கலைஞர் அவர்களும், அது போலவே பேராசிரியர், மனோகரன், மதியழகன், முதலானோர் கைது செய்யப்பட்டு சிறையில் அடைக்கப்பட்டு விட்டார்கள்.

நாவலர் மதுரைச் சிறைக்கு கொண்டு வரப்பட்டார். ஆனால் நான் சந்திக்க வாய்ப்பில்லை. வெளிக்கொட்டடியில் அவரையும், அவருடன் வந்திருந்த பி. எஸ் மணியம், காவேரி, திருப்பதி, மற்றவர்களையும் வைத்திருந்தார்கள். அவர்கள் வைக்கப்பட்டிருந்த பகுதி-சிறைக்குள்ளேயே ஒருகுட்டிச்சிறை.

இரண்டு நாட்களுக்குப்பிறகு நாவலர் குழுவினர் சிறை மருத்துவ மனையில் அனுமதிக்கப்பட்டிருந்தார்கள். அதன் பிறகு அவர்களைச் சந்திக்க எனக்கு வாய்ப்புக் கிடைத்தது ரயிலில். முந்திய ஸ்டேஷனில் ஏறி இடம் பிடித்துக்கொண்டவன் பின்னடி வரும் ஸ்டேஷனில் காணுபவர்களைத் தடுக்க ரயிலில் உரிமை பாராட்டிப் பேசுவதைப் போல் சிறையில் நாவலர் குழு வினர்களுக்கு வேண்டியவற்றைச் செய்து கொடுத்தேன். அறு சுவை உண்டியா? இல்லை. தேவைப்படும்போது கடுங்காபி, சோளம் கலக்காத தோசை, தயிர் இவைகள் தான்! ஒருவாரம் நாவலர் இருந்தார். அதற்குள் நான், அடிஷனல் சூப்பரின் டெண்ட் என்ற பட்டமும் பெற்றேன் நாவலர் அவர்களிடம்! நாவலர் குழுவினர் தங்கியிருந்த அந்தக்கிழமை எனக்குச் சிறை யாகவே தோன்றவில்லை, நாவலர் பழங்கதைகளை யெல்லாம்

சொன்னார். நான் எப்போதும் அவரிடம் சுமுகமாகவும், சரளமாகவும் பேசக்கூடியவன். நாவலர் நமக்குக் கிடைத்தப் புதையல் கலயம்! எப்படி என்கிறீர்களா?

நாவலர் முதன் முதலில் படித்துப்பட்டம் பெற்றவுடன் விருதுநகர்க் கல்லூரிக்கு விரிவுரையாளராகப் பணிபுரிய விண்ணப்பித்துக் கொண்டார். அது கிடைக்கவில்லை. அதன் பின்னர் அதே பணிக்கு மதுரை தியாகராசர் கல்லூரிக்கு விண்ணப்பித்தார். அங்கேயும் கிடைக்கவில்லை. ஆனால் காலம் அவரைக் கோபுரத்தில் ஏற்றி வைத்தது. அதன் பின்னர் பல கல்லூரிகள் அவரை வருந்தியழைத்தன. எல்லாவற்றிற்கும் மேலாக, காசி சர்வகலாசாலையிலிருந்து கூட தமிழ்ப் பிரிவில் பணி புரிய அழைப்பு வந்தது. நாவலர் இணங்கவில்லை, ஒப்பவே இல்லை. மதுரை கருமுத்து தியாகராசன் செட்டியார் அவர்கள் அவரது தமிழ்நாடு இதழுக்கு ஆசிரியராக இருக்கும்படி கேட்டுக் கொண்டார். நாவலர் அதற்கும் இணங்கவில்லை. நாவலர் அவர்களது மனைவியாரே ஒருமுறை தனது கணவர் சிறை செல்லுவதை நினைத்து வருந்தி சிறை புகாத, பொது வாழ்க்கையை மேற்கொள்ளும்படி மன்றாடினார். நாவலரை விரும்பி வெவ்வேறு துறைக்கு அழைத்தவர்களுக்கெல்லாம் அவர்களுக்குப் பதிலளிக்கும் பொறுப்பு அண்ணாவைச் சார்ந்தது என்று ஒரே வரியில் கூறிவிட்டார் நாவலர்.

''தம்பி நெடுஞ்செழியன் என்னிடமிருப்பது ஜெயிலிலும் மிஞ்சிய நேரத்தில் ரயிலிலும் இருப்பதற்காகவே தவிர தொட்டிலை ஆட்டுவதற்கும் வட்டிலில் போடுவதை சாப்பிடுவதற்குமல்ல'' என்று அண்ணா அவர்கள் ஒரே வாக்கியத்தில் பதில் தந்து எல்லோரையும் பிரமிக்க வைத்தார்.

அந்த நாவலர் என்னோடு இருப்பதை நினைத்துப் பெருமிதமடைந்தேன். எனக்கு இன்னொரு மகிழ்ச்சி, மதுரை வழக்கறிஞர்கள் மூவரும் நாவலருடன் கைதாகியிருந்ததுதான். அவர்களும் மதுரை மாவட்டச் செயலாளரும்தான் எனக்கு. வெளியில் இருக்கும் போது அவர்களை வாரம் ஒருமுறை சந்திக்காவிட்டால் எனக்குக் காய்ச்சல் வந்துவிடும்!

மனிதன் யாரிடமாவது நம்பிக்கையோடு அவனது ரகசியங்களையும், மனச்சுமைகளையும் சொல்லித்தான் தீரவேண்டும். இல்லாவிட்டால் அவனுக்குப் பைத்தியம் பிடித்து விடும். எனக்கு அவ்வாறு பைத்தியம் பிடிக்காமல் பாதுகாப்பவர்கள் மதுரை நண்பர்கள்தான்.

இந்தப் பாழும் சர்க்கார் அவர்களை என்னோடு நீண்ட நாள் வைத்தால் என்ன? வைக்கவில்லை! திடீரென்று விடுதலை செய்து விட்டார்கள். போலீசார் ஒருவகையில் நல்லவர்கள். அடிக்கடி பொதுமக்கள் மத்தியில் பீதியை உண்டாக்கி எதிர்க்கட்சிக் காரர்களைத் திடீர், திடீரென்று கைது செய்து ஆளுங்கட்சிக்குக் கெட்ட பெயரை உண்டாக்குவது போலீஸ் இலாகாதானே? வெள்ளையர் காலத்திலேயும் அப்படித்தானே நடந்தது. தெலுங்குச் சீமை சஞ்சீவிரெட்டி எப்படித் தலைவரானார்? சிறை பிடிப்பார்கள்; மறுவாரம் திறந்து விடுவார்கள்; முதல் வாசலில் விடுதலையாகி தலைவாசலுக்கு வருவதற்குள் அவரை இன்னொரு போலீஸ் வேனில் ஏற்றி விடுவார்கள்! அந்த 'டிராஜடிகளெல்லாம் இந்த காங்கிரசார் ஆட்சியில் பிச்சை வாங்க வேண்டும் போல் வந்து விட்டதே நிலைமை!

இதற்கிடையில் 25—2—65ல் தமிழ் நாடெங்கும் உள்ள மாணவர்கள் இந்தி ஆட்சிமொழியாவதை எதிர்த்து கண்டண ஊர்வலம் நடத்தத் தொடங்கினார்கள். மதுரையிலும் அந்த ஊர்வல ஏற்பாடு இருந்தது, ஊர்வலம் வடக்குமாசி வீதிக்குள் வந்து கொண்டிருந்தபோது வழியில் இருந்த காங்கிரஸ்காரியாலயத்திற்குள்ளிருந்து சிலர் அரிவாள்களுடனும், கத்திகளுடனும் வெளிக்கிளம்பி மாணவர்களைத் தாக்கியும் வெட்டியும் கல்லெறிந்தும் அராஜகம் விளைவித்தார்கள். மாணவர்கள் காங்கிரஸ் ரவுடிகளால் தாக்கப்பட்டதை திட்டமிட்ட வெறிச் செயல் என்று தமிழ்நாட்டுப் பத்திரிகைகளெல்லாம் எழுதிக்குவித்தன. ஏனெனில் ஊர்வலத்திற்கு இரண்டு தினங்களுக்கு முன்பே மதுரை இளைஞர் காங்கிரஸ் தளபதி வீரய்யா என்பவர் ''இந்தி ஆட்சிமொழியாவதை எதிர்த்து துக்கதினம் கொண்டாடினால், ஊர்வலம் நடத்தினால் வெட்டுவோம், குத்துவோம், என்று வெளிப்படையாக பத்திரிகைகளில் அறிக்கை வெளியிட்டிருந்தார். அவர் சொன்னபடி திறமை (?) யாகச் செய்து முடித்தார். அன்றைய நிகழ்ச்சியில் கத்தியைத் தூக்கி வந்த காங்கிரஸ் தளபதிகளில் அவரும் ஒருவர் என்று மறுநாள் பத்திரிகைகளில் செய்தி வெளியாகி இருந்தது. உயிருக்கு மன்றாடும் போது கோழையும் புலியாகி விடுவது வழக்கமல்லவா? மாணவர்கள் சினந்தெழுந்தார்கள்! தீ! வடக்குமாசி வீதி எங்கும் தீ! ஜீப் எரிந்தது, பந்தல்கள் சாம்பலாயின! கார்கள் நொருங்கின' என்றெல்லாம் பத்திரிகைகளில் செய்திகள் வந்தன.

சங்கம் வளர்த்த மதுரை இட்ட தீ மாநிலமெங்கும் பரவியது. சிற்றூர், பேரூர், பட்டி, தொட்டி, எங்கும் மொழிப் போர் தொடங்கி விட்டது. எங்கும் தீ பரவி விட்டது. ரயில் பெட்டி, ரயில்வே ஸ்டேஷன், சர்க்கார் பஸ்கள், பணிமனைகள்

இவைகளுக்கு மட்டுமா தீ! தங்களுக்குத்தானே தீ வைத்துக் கொண்டு சிலர் மாண்டு போனார்கள். கோடம்பாக்கத்தில் இருவர், கோவை மாவட்டத்தில் ஒருவர் - அவர் விவசாயி. திருச்சி மாவட்டத்தில் ஒருவர்-அவர் ஒரு தலைமை ஆசிரியர்! இந்தத் தியாகத் தீக்குளிப்புக் கேட்டு பிரதமர் லால்பகதூர் அதிர்ச்சியடைந்து விட்டதாக ரேடியோச் செய்தி அறிவித்தது.

அன்று மதுரையில் தியாகராசர் கல்லூரியைச் சேர்ந்த காமராசன், காளிமுத்தன் என்ற இரண்டு மாணவச்செல்வங்கள் ஆட்சிமொழிச் சட்டத்தை தீயிட்டுக் கொளுத்திச் சிறை புகுந்தார்கள்-இல்லை சிறைக்குள் வந்தார்கள் நான் வரவேற்றேன். நான்தானே மதுரைச் சிறையில் பிரதம வரவேற்பாளன்.

## 27 - 1 - 65

சிறையில் துப்புரவு வேலைகள் மும்முரமாக நடைபெற்றன. பூச்செடிச்சாடிகள், திண்ணைகளிலெல்லாம் திடீர் திடீர் என்று உட்கார வைக்கப் பட்டன. "ஏன்" என்று கேட்டேன். "கலெக்டர், செசன்ஸ்ஜட்ஜ், ஜெயில் விசிட்டர்கள்—எல்லோரும் வருகிறார்கள்" என்றார்கள்.

இராமனாதபுரம் கலெக்டர் எம். எம் ரஜேந்திரன், மற்ற அதிகாரிகள் எல்லோரும் சிறையைச் சுற்றிப் பார்க்க மாலை 5 மணிக்கு வந்தார்கள். நான் எதிர் பார்க்கவேயில்லை—அவர்கள் அனைவரும் எனது அறைக்கே வந்து விட்டார்கள்.

"உங்களுக்குவேண்டியதெல்லாம் சரியாகக் கிடைக்கிறதா?" கலெக்டர் கேட்டார்.

"இவர் உங்கள் ஜில்லாக்காரர்தான்" என்று சூப்ரண்டெண்ட் என்னைக் கலெக்டருக்கு அறிமுகப் படுத்தினார்.

"நீங்கள் எந்த ஊர்?"—கலெக்டர்.

"திருக்கோட்டியூர்—திருப்பத்தூர் தாலுகா"—நான்.

"உங்கள் பெயர்?"

"தென்னரசு!"

"ஓ! நீங்கள் தானா? அடிக்கடி பத்திரிகைகளில் பெயர் வரும்! எவ்வளவு தண்டனை?"

"இவருக்குத்தான் அதிகத் தண்டனை—ஒரு வருடம்!" சூப்ரண்டெண்ட் குறிப்பிட்டார்.

"இந்த இடத்தில் சிறைவிசிட்டர் மனோரஞ்சிதத்தம்மையார் கேட்டார்கள், "எதற்காக ஒரு வருடம்?"

''அரசியல் சட்டத்தின் மொழிப்பிரிவை எரித்தேன்; அதற்காக!''

''நல்ல காரியம் செய்தீர்கள்! மெத்தச் சந்தோசம்'' என்றுரே பார்க்கலாம் அந்த அம்மையார். சுற்றியிருந்தவர்கள் அனைவரும் சிரிக்க முயன்றார்கள்; ஆனால் சிரிக்க முடியவில்லை; எல்லோரும் கெஜட்டெட் அதிகாரிகளல்லவா! சிரிக்கலாமா? கலெக்டர் தங்கமானவர்; கைதிகளிடம் அதிகம் பரிவு காட்டினார்.

ஒரு வாரம் தமிழகத்து அரசியல் 'எக்ஸ்பிரஸ்' வேகத்தில் ஓடியது. ஆனால் எக்ஸ்பிரஸ் ரெயில்கள், எக்ஸ்பிரஸ் பஸ்கள் எல்லாம் மொழிக் கிளர்ச்சியின் காரணமாக நிறுத்தப்பட்டன. கல்லூரிகள், பள்ளிகள் அனைத்தும் காலவரையின்றி மூடப் பட்டன.

காங்கிரஸ்காரர்கள் ஆகஸ்ட் கிளர்ச்சியைப் பிரமாதமாகப் பீற்றிக்கொள்வதுண்டு. ஆனால் அந்தக் கிளர்ச்சி மாணவர்கள் எழுப்பிய இந்தி மொழிக்கிளர்ச்சியின் கால்தூசு பெறுது என்று காங்கிரஸ்காரர்களே ஒப்புக்கொள்ளும் அளவுக்குத் தென்னாட்டு மாணவர்கள் புகழ்பெற்று விட்டார்கள்.

ரேடியோவைத் திருப்பினால், ''இன்று சென்னையில் மாணவர்கள் போராட்டக் கூட்டம் நடைபெற்றது; காரியக் கமிட்டி அமைக்கப்பட்டது; ஒரு குழு முதலமைச்சரைச் சந்தித்தது'' என்று செய்திகள் கேட்கும். இந்தக் காலத்தில் பர்மாவில் அவுங்சான் போராட்டத் திட்டம் போட்டு பிரகடனப் படுத்தியதைப் போல் தமிழ் மாணவர்கள் அவர்களது கிளர்ச் சிக்கு வெற்றி முத்திரை கொடுத்து விட்டார்கள். முப்பதாண்டு காலப் போராட்டம், சிறைவாசம்—எதுவுமே சர்க்காரின் உள்ளத்தைத் தொடவில்லை. மாணவர்களின் இருபது நாள் புரட்சி சர்க்காருக்குப் பொறையேற்றி விட்டது.

கழகத் தோழர்கள் இருவர், தென்வியட்நாம் போராட்டத் தைப்போல், அரங்கநாதன், சிவலிங்கம் தீக்குளித்து விட்டார்கள். இரண்டு சப் - இன்ஸ்பெக்டர்களைச் சிலர் தீக் குளிக்க வைத்து விட்டார்கள்.

நாடெங்குமுள்ள தி.மு.க. தலைவர்கள், எம். எல். ஏக்கள், செயலாளர்கள் கைது செய்யப்பட்டார்கள். மாணவர் கிளர்ச் சிக்கும் தி. மு க. வுக்கும் ஏதாவது தொடர்பு இருக்குமென சர்க்கார் பயந்தது. இது பைத்தியக்காரத்தனம். தி.மு.க. நினைத்தால் எதையும் செய்யலாம். சக்தி அதற்கு இருக்கிறது.

ஆனல் செய்யக்கூடாததை—செய்யத் தகாததை அது ஒரு போதும் செய்ததில்லை; செய்யவும் விரும்பாது.

மதுரையில் பத்துவயதுப் பாலகர்கள் போராட்டத்தில் ஈடு பட்டிருந்தார்கள். கூட்டங் கூட்டமாகப்போய் கார்களை நிறுத்தி ஞர்கள். காரில் வருகிறவர்கள் கல்லுக்கும் மண்ணுக்கும் பயந்து 'இந்தி ஒழிக' என்று சொன்ஞர்களாம். டி. வி எஸ் கம்பெனி களில் 'இந்தி ஒழிக' என்ற வில்லையை அச்சடித்து அவர்களா-கவே கார்களில் ஒட்டிக்கொண்டார்களாம். இந்த நேரத்தில் சிறையில் ஒரு வேடிக்கை நடந்தது. சிறையின் தலைவாசலில் 'கேட்கீப்பர்' என்ற ஒரு பொறுப்பான அதிகாரி எப்போதும் உட்கார்ந்திருப்பார். அன்று அவருக்குப் பதிலாக ரிசர்வ் ஹெட்வார்டர் உட்கார்ந்திருந்தார். போன் மணி அடித்தது. உடனே ரிசர்வ் ஹெட்வார்டர் போனை எடுத்திருக்கிருர்.

"சென்ட்ரல் ஜெயில் மதுரை!"

"தெரிஞ்சுதான் கூப்பிடுகிறேம்; நீங்கயாரு?"

"நான் ரிசர்வ் ஹெட் வார்டர்!" பயந்து கொண்டே பேசிஞர்.

"இந்தி ஒழிக என்று சொல்லுங்கள்! சொல்றீங்களா; உதைக்கட்டுமா?"

ரிசர்வ் ஹெட் வார்டர் போனை வைத்து விட்டார்.

மீண்டும் மணி அடித்தது. அவர்போனை எடுக்கவில்லை. மணி மறுபடியும் தொடர்ந்து அடித்தது. அவர் போனை எடுக்க வில்லை. கால் மணி நேரம் கழித்து ஜெயில் சூப்ரண்டெண்ட் வந்தார். அவர் வீடு சிறைக்கு அருகில்தான் இருக்கிறது. அவர்முகம் கடுகடுப்பாக இருந்தது.

"ஏய்யா நீ தூங்கினியா? காது என்னசெவிடா? கால்மணி நேரமா போன் ரிங் பண்ணினேனே எங்கே போயிருந்தே?" சூப்ரண்டெண்ட் எரிந்து விழுந்தார்.

சூப்ரண்டெண்டுக்கு சிறை அகராதியில் 'துரை' என்று சொல்லுவார்கள். துரைக்கு முன்ஞல் பயந்து ரிசர்வ் ஹெட் வார்டர் ஒன்றும் பேசாமல் நின்றுவிட்டார். அதனுல் ரிசர்வ் ஹெட்வார்டருக்கு ஒரு நாள் விடுமுறை ரத்து செய்யப்பட்டது.

மதுரைச்சிறைச்சாலையில் நூற்றுக்கு மேற்பட்ட வார்டர்கள் வேலை செய்கிருர்கள். அவர்கள் குடியிருக்கும் வீட்டுக் கக்கூசுகளில் இந்தி எதிர்ப்புக் கோஷங்கள் எழுதப்பட்டன.

உள்ளே இருக்கும் எனக்கு அவ்வாறு எழுதப்பட்ட வாசகங்களில் சிலவற்றை வார்டர்கள் சொன்னார்கள்.

''கக்கா! மாணவர்கள் என்ன கொக்கா?''

''பக்தவத்சலக் குரங்கு! பதவியைவிட்டு இறங்கு!''

''நந்தா! மாணவர்கள் என்ன பந்தா?''

''லால்பகதூர்சாஸ்திரி; நீர் என்ன மேஸ்திரியா?''

கடுமையான சொற்களைத்தான் மாணவர்கள் கோர்த்திருக்கிறார்கள். என்ன செய்வார்கள் அந்த நேரத்து மனநிலை அப்படி!

கடைசியாகப் பார்த்தால் சிறை வார்டர்களின் பிள்ளைகள் தான் இப்படி எழுதினார்கள் என்று தெரியவந்தது. சூப்ரண்டெண்டுக்கு தகவல் எட்டியது. வார்டர்களை விட்டே அவைகளை அழிக்க உத்தரவிட்டார். அழித்தார்கள் எழுதியவர்கள் அல்ல —அவர்களின் பெற்றோர்கள்!

## 13-2-65

கிளர்ச்சிகள் தொடர்ந்து நடைபெற்றன. மதுரை மாவட்டம், கூடலூரிலும் நடைபெற்றது. தோழர் ராஜாங்கம் M.L.A. அவர்கள்தான் கூடலூர் கிளர்ச்சிக்குக்காரணம் என்று போலீசார் கருதினார்கள். காயம்பட்டவர்களுக்கு முதல் உதவி அளித்துக்கொண்டிருந்த ராஜாங்கம் திடீரென்று கைதுசெய்யப் பட்டார். அதோடு மட்டுமல்ல; அவரை ஒரு அறையில் போட்டு முதுகில் மின் இயக்கத்தைச் சாடவைத்து போலீசார் வேதனைப் படுத்தியிருக்கிறார்கள். ராஜாங்கம் வெறும் பிரஜைமட்டுமல்ல; ஒரு சட்ட மன்ற உறுப்பினர். அவருக்கே இந்தக்கதி என்றால் மற்றவர்களைப்பற்றிக் கேட்க வேண்டுமா?

''ஏண்டா ராஜாங்கம், நூறு வருஷம் போராடினாலும் இந்தியை ஒழிக்கமுடியுமா உங்களால்'' போலீஸ் அதிகாரியின் கேள்வி இது.

''ஆயிரம் ஆண்டுகளானாலும் இந்தியை எதிர்த்தே சாவோமே தவிர அதை ஏற்றுக்கொள்ள மாட்டோம்'' இது ராஜாங்கத்தின் பதில். இப்படியும் வாக்குவாதம் நடந்திருக்கிறது.

இதுபோல் நூற்றுக்கணக்கானவரை போலீசாரும் இராணுவத்தினரும் தொல்லைப்படுத்தியிருக்கிறார்கள்.

''தி.மு.க. தான் இந்தக் கிளர்ச்சியைத் தூண்டிவிட்டது'' என்று சொன்னால் விட்டு விடுவதாகப் போலீசார் அவர்களை

யெல்லாம் மிரட்டியிருக்கிறுர்கள். ராஜாங்கம் என்ன சிறு பிள்ளையா? அடிக்குப் பயந்து புதிதாக எதையாவது சொல்லு வதற்கு?

இராஜாங்கத்தோடு கைதான 200-க்கு மேற்பட்டவர்கள் போலீசாரால் கடுமையாகத் தாக்கப்பட்டிருந்தார்கள். வலை பின்னியதுபோல் முதுகெல்லாம் பிரம்படி. சதை கயிறு கயிருகப் பிய்ந்திருந்தது. ராஜாங்கத்தின் அண்ணன் பாண்டித் தேவரும் கூடலூர் ஊராட்சித் தலைவர் கருப்பணத் தேவரும்கூடத் தாக்கப்பட்டிருந்தார்கள். ஊராட்சித்தலைவர் கைகளில் அணிந் திருந்த ஆறு மோதிரங்கள் போலீசாரால் கையாடப்பட்டன. விலை உயர்ந்த கைக்கடிகாரம் ஒன்று, காது கேட்பதற்காக வைத்துக்கொள்ளும் இயந்திரம் ஒன்று, விலை மதிப்பு ஆறு நூறு ரூபாய் - எல்லாம் உடைத்துத் தவிடாக்கப்பட்டுவிட்டன, எல்லோரையும் போலீசார் லாரியில் ஏற்றும்போது "போங்கடா வரும்போது கையோட மூட்டைப்பூச்சி மருந்தும் வாங்கிவாங்க; இங்கே வந்ததும் உங்க பெண்சாதி புள்ளைகளைப் பார்த்ததும் நீங்க தற்கொலை பண்ணிக்கவேண்டியதுதான்'' என்று போலீசார் கொக்கரித்து அனுப்பியிருக்கிறுர்கள். அதை நினைத்து நினைத்து ஒவ்வொருவரும் கண்ணீர் வடித்தார்கள். ராஜாங்கத்தை தினசரி பார்ப்பேன். காலை "பெட் காபி'' அவருக்கு என் அறையில்தான் தயாராகும். ''முரசொலி'', ''நம்நாடு'' இதழ்களும் இங்கிருந்து நான்தான் அனுப்புவேன். அவர் வெளிக் கொட்டடியில் இருந்தார், நான் உள்ளே இருந்தேன்.

## 17-2-65

திடீரென்று கலைஞர் (எம் எல்.ஏ.) அவர்கள் சென்னையில் கைதானதாகக் கேள்விப்பட்டேன். முழு விவரம் தெரியவில்லை. வானொலியில் தெரிவித்தார்கள், ''திரு. கருணாநிதி பாரதப் பாதுகாப்புச் சட்டப்படி கைதானுர்'' என்று.

இரண்டாண்டுகளுக்கு முன் சாத்தூரில் நடைபெற்ற இளைஞர் காங்கிரஸ் மாநாட்டில் காமராசர் தெரிவித்தார்— ''நாட்டுப்பிரிவினைபற்றிப் பேசும் அண்ணாத்துரையையும் அவரது தம்பிமார்களையும் ஷேக் அப்துல்லாவைப் போல் பிடித்துப் போட்டால் என்ன செய்வார்கள்?'' என்று. அதை இப்போது செயல்படுத்தத் தொடங்கியிருக்கிறுர்களோ என்று நான் நினைத்தேன்.

''கலைஞர் ஏன் கைதானுர்?'' இதற்குப் பலர் பலவிதமாகச் சொன்னுர்கள்.

''அவரது எழுத்தும் பேச்சும்தான் காரணம்'' என்றூர் சிலர்.

''சட்டசபை மார்ச்சில் கூடப்போகிறது, அவர் இருந்தால் அமைச்சர்களைப் பிடித்து வளைத்துப் பேசுவார்'' என்பதற்காகத் தான் என்றூர்கள் வேறு சிலர்.

''தர்மபுரி தேர்தலை முன்னிட்டுக் கைதாகியிருக்கலாம்''— இப்படிச் சிலர்.

கைதுக்குக் காரணம் எதுவாக இருந்தாலும் மொத்தத்தில் சர்க்கார் அவரை வெளியில் விட்டு வைத்தால் தங்களுக்கு அனர்த்தம் என்று கருதியிருப்பது மட்டும் உண்மையாகி விட்டது.

இரவு 6-30 மணிக்கு நான் லாக்கப்புக்குப் போனேன். சிறை சூப்ரன்டெண்ட், ஜெயிலர், ஹெட்வார்டர் முதலானோர் பரபரப்பாக இருந்தார்கள். சிறையில் எல்லாமே மர்மமாகத் தான் இருக்கும்.

இரண்டு கைதிகள்—ஒருவர் மெத்தையையும், அடுத்தவர் கட்டிலையும் தூக்கிக்கொண்டு வெளிக் கொட்டடிக்குப் போனார்கள். அப்போது மணி எட்டு!

''யாரும் புதிதாக பி· வகுப்புக்கு வருகிறூர்களா?'' என்று அறைக்குள்ளிருந்தபடியே கேட்டேன்.

''யாரோ முக்கியமானவர் வருகிறூராம்! மில் முதலாளி-யாம்!'' என்றூர் அந்தக் கைதி—மெத்தையை தலையில் வைத்த படி.

எனக்குக் கொஞ்சம் திருப்தியாக இருந்தது — ஏனெனில் மில் முதலாளி என்றதும் கருமுத்து தியாகராசன் செட்டியா-ராகத்தானிருக்கும் என்று நான் நினைத்தேன். அவர் கைதானல் தமிழகத்திற்கு லாபம்தான்! பணக்காரரின் கோபம் ஐந்து அக்கிரமக்காரர்களையாவது வீழ்த்தாதோ? காங்கிரசுக்கு தலை ஆடிவிட்டது என்று நினைத்து நான் மகிழ்ந்தேன்.

இப்போது இரவு 9 மணி. சிறைவாசல் பக்கமாக இருந்து ஒருவார்டர் வந்தார். ''ஏதாவது தகவல் தெரியுமா?'' என்று கேட்டேன்.

''கப் சிப் என்று இருங்கள். டி.எம்.ஒ., டி.எஸ்.பி., வயர்-லஸ், ஆம்புலன்ஸ் எல்லாம்............ சிறை வாசலில்'' என்றூர்.

''என்ன இருந்தாலும் பணக்காரர் என்ருல் சர்க்காரே பயப்படத்தான் செய்கிறது'' என்று நினைத்தேன்.

இப்போது மணி 9-30. இன்னொரு வார்டர் என் அறைப் பக்கமாக வந்தார்.

''சார், முத்துராமலிங்கத் தேவருக்குக் கூட இவ்வளவு கெடுபிடி கிடையாது சார்! அடேயப்பா சிறையைச் சுற்றி ஆயுதம் தாங்கிய போலீசை நிறுத்தியிருக்கிருர்கள். போலீஸ் எக்கச்சக்கம்!'' என்ருர் வார்டர்.

''பெரிய பணக்காரரல்லவா!'' என்றேன்.

''பணக்காரரா? எவ்வளவு தேரும்? ஒரு பத்து லட்சம் தேருமா?''

''இலட்சமா? எந்த மூலைக்கு? அவர் கோடீஸ்வரன்!'' என்றேன்.

''கதை எழுதினல் கோடிக் கணக்கிலா கொடுப்பார்கள்?'' என்ருர் வார்டர்.

''கதையா? தியாகராஜன் செட்டியாருக்கு அது கூடத் தெரியுமா?'' என்றேன்.

''என்ன சார்! வந்திருப்பது யாருன்னு இன்னும் தெரியாதா? நம்ம கலைஞர் சார் வந்திருக்காரு!'' வார்டர் உரிமையோடு சொன்ஞர். என்ஞல் நம்பவே முடியவில்லை. நேற்று இரவு சென்னையில் கைது செய்து இன்று இரவு மதுரைச் சிறைக்குக் கொண்டுவரக் காரணம்? எனக்குச் சுயநலம் — கலைஞரைப் பாதுகாப்புக் கைதியாக இங்கேதான் வைக்கப் போகிருர்கள்; நமக்கு நல்ல வாய்ப்புதான் என்று மகிழ்ந்தேன்.

இப்போது மணி பத்து! வெளிக் கொட்டடியிலிருந்த நண்பர் ராஜாங்கம் எம். எல். ஏ. அவர்களை ஒரு சந்து வழியாக பாதுகாப்புடன் ரகசியமாக சிறை ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போஞர்கள். எனக்கு ஒரே குழப்பம்! கையில்லாத ஊமையினைப் போல் கம்பியைப் பிடித்துக் கொண்டே இரவு 12 மணி வரை நின்றேன்.

**19-2-65**

பொழுது விடிந்தது. காலை 5-30 மணிக்கு என் அறையைத் திறந்த வார்டர் ஒரு திடுக்கிடும் தகவலைச் சொன்ஞர். ''காலையிலேயே கலைஞரை பாளையங்கோட்டைக்குக் கொண்டுபோய் விட்டார்கள்'' என்ருர் எதை நம்புவது?

காலை எட்டு மணிக்குமேல்தான் சில விவரங்கள் எனக்குக் கிடைத்தன.

கலைஞர் வந்ததும் அவரை, முன்கூட்டியே ஏற்பாடு செய்தபடி மாமரத்துக் கொட்டடிக்குக் கூட்டிப்போயிருக்கிறார்கள். ஒரு பெட்டி, ஒரு ஜமுக்காளம் தலையணை இவற்றுடன் கலைஞர் வந்தாராம்! மிகவும் பலவீனமடைந்து இருந்தாராம் வரும் வழியிலேயே திண்டுக்கல் மருத்துவமனையில் கொஞ்சம் தங்கி விட்டுத்தான் வந்திருக்கிறார். மதுரைக்கு வந்ததும் மதுரை சர்க்கார் மருத்துவமனை டாக்டர்களுக்குத் தகவல் தெரிவிக்கப்பட்டிருக்கிறது

கலைஞர் அவர்களுக்கு ஏற்பாடு செய்திருந்த இடத்தில் "அதிகமாக மூட்டைப் பூச்சி இருப்பதால் நான் இங்கே படுக்க முடியாது" என்று சொல்லியிருக்கிறார். சிறை நிர்வாகம் விசித்திரமான சுபாவம் கொண்டது. நாம் கெஞ்சினால் அது மிஞ்சும் நாம் மிஞ்சினால் அது கெஞ்சும்! எல்லாச் சிறைகளிலும் இந்த நாடகத்தைப் பார்க்கலாம்.

கலைஞர் விடவில்லை. 'தென்னரசு இருக்கும் இடத்திற்கு என்னைக் கொண்டு போங்கள்' என்று கேட்டிருக்கிறார்.

"அவர் தண்டிக்கப்பட்டவர்; நீங்கள் அங்கு போகக் கூடாதே!" என்றாராம் சூப்ரன்டெண்ட்.

"அப்படியானால் தென்னரசை இங்கே கொண்டு வாருங்கள்" என்று கலைஞர் அடம்பிடிக்கத் தொடங்கியிருக்கிறார்.

சூப்ரெண்டெண்டுக்கு ஆட்டம் கண்டுவிட்டது. உடனே அவர் ராஜாங்கம் இருந்த கொட்டடிக்குப் போய், "என்ன மிஸ்டர் ராஜாங்கம் உங்களுக்கு தலைவலி என்றீர்களே! வேண்டுமானால் இன்று ஆஸ்பத்திரி வார்டில் படுத்துக்கொள்ளுங்கள்" என்று அன்பாகப் பேசுவதுபோல் அவரிடம் பேசி கோட்டைச் சுவர் ஓரமாக இருட்டில் ராஜாங்கத்தைச் சிறை மருத்துவமனைக்கு அனுப்பிவிட்டு அந்த அறைக்கு கலைஞரை இன்னொரு முக்கிய வழியாக அழைத்துப் போனார்களாம். கலைஞருக்குக் கோபம் வந்திருக்கிறது. உங்களுக்கு ஏன் இவ்வளவு சிரமம்? ஏதாவது மருந்தைக் கொடுத்து என்னைக் கொன்றுவிடுங்களேன்!" என்றாராம். அவ்வளவுதான் அதிகாரிகள் அதிர்ந்து விட்டார்கள்.

ராஜாங்கம் அறையில் ஆப்பிள், பிஸ்கட் எல்லாம் ஏற்கனவே வைக்கப்பட்டிருந்தனவாம்!

அன்றிரவு கலைஞர் அங்கு தூங்கினர். இல்லை. தூக்க மாத்திரை கொடுத்து தூங்கவைத்துவிட்டார்கள் டாக்டர்கள். இரண்டு பெரிய டாக்டர்கள் அன்று சிறையிலேயே தங்கி கலைஞரைக் கண்காணித்தார்கள்.

## 20 - 2 - 65

காலை 4-30 மணிக்கு கலைஞர் எழுப்பப்பட்டிருக்கிறார்.

''என்னய்யா இது! நீங்கதான் தூங்கச்சொல்லி தூக்க மாத்திரை கொடுத்தீர்கள்; இப்ப என்னைத் தூங்கவிடாமல் எழுப்புறீங்களே,'' என்று கடிந்தாராம் கலைஞர்.

டாக்டர்கள், ''நாங்கள் என்ன செய்வது. சர்க்கார் உத்தரவு! காலை 8 மணிக்குள் நீங்கள் பாளையங்கோட்டைச் சிறைக்குப் போய்விடவேண்டுமாம்,'' என்றார்களாம்.

காலை 7 மணிக்கு ராஜாங்கம் அவரது அறைக்கு வந்த பிறகுதான்-கலைஞர்அவர்கள் நேற்று இரவு மதுரை வந்தது, தனது அறையில்தங்கியது, அதற்காகத்தான் தன்னை மருத்துவ மனைக்கு வஞ்சகமாக அழைத்துப் போனது — எல்லாமே அவருக்குத் தெரிய வந்திருக்கின்றன.

## 1 - 3 - 65

மதுரை முத்து அவர்கள் விடுதலையாகிவிட்டதாகப் பத்திரிகையில் செய்திபார்த்தேன். அவரை வழி அனுப்பி வைத்த நான் வரவேற்கவில்லையே என்ற கவலை எனக்கு. திரு. முத்து அவர்களோடு சென்றிருந்த பி. திருஞானசம்பந்தம் எனக்கு சகோதரர் முறை. இயக்கத்தால் நண்பர்களானோம்; குடும்ப உறவால் சகோதரர்களானோம்.

திரு. முத்து அவர்களுக்கு 3—3—65ல் மதுரையில் வர வேற்பு என்று கேள்விப்பட்டேன். எனக்கு உற்சாகம் பிறந்தது. அவர் மதுரை வந்ததும் என்னைப் பார்ப்பாறென்ற உற்சாகம் தான் அது. நானும் அவரும் பேச உட்கார்ந்தால் எங்கள் நாக்கில் அடிபடாத விஷயமே மிஞ்சாது. அரசியலும், சினிமா வும்தான் எங்களுக்குத்தீனி! சிறை வாழ்க்கையில் நான் இல்லாத குறைதான் அவருக்கு! முத்து அவர்களைப் பற்றி நான் நன்கு உணர்ந்தவன். எதிரிகளுக்கு அவர் மலைப்பாம்பு; இயக்கத்தினருக்கு அவர் மலர்ச்செண்டு!

## 3 - 3 - 65

நான் எதிர்பார்த்தபடி திரு. முத்து அவர்கள் சிறைக்கு வந்தார். என்னையும், திரு. ராஜாங்கத்தையும் பார்த்தார்.

பதினைந்து நிமிடங்கள் பேசிக்கொண்டிருந்தோம். முத்து அவர்களோடு பி. எஸ். மணியம், பி. திருஞானம், மைனர் மோசஸ் எழுகடல் இராமநாதன் முதலானோர் வந்தார்கள்.

முத்துவைப் பார்த்ததும் எனக்கு ஒரு புத்துணர்ச்சி பூத்தது.

அன்று மாலை ராஜாங்கம் என்னை ஆஸ்பத்திரியில் சந்தித்தார்.

''சார் இன்றுதான் எனக்கு தைரியம் வந்தது!'' என்றார்.

''ஏன் ஏதாவது டானிக் சாப்பிட்டீர்களா?'' என்றேன்.

''முத்துவைப் பார்த்தபிறகு எனக்கு தெம்பு வந்துவிட்டது''! என்றார்.

அப்போது நான் அதை ஆச்சரியத்துடன் கேட்கவில்லை. திரு. முத்து அவர்களின் பேச்சு ஒரு வீரக்குரல்; அவரது நடவடிக்கைகள் அலெக்ஸாண்டரின் செய்கைகளுக்கு ஈடானவை என்று ஏற்கெனவே நான் ஏற்றுக்கொண்டவை.

**20-3-65**

எனக்குக் காதுவலி வந்திருந்தது. பெரிய ஆஸ்பத்திரிக்குப் போய் பெரிய டாக்டரிடம் காண்பிக்க வேண்டுமென்று எண்ணினேன். சிறை அதிகாரி அனுமதியளித்தார்.

காலை 9 மணிக்கு நான் பெரிய ஆஸ்பத்திரிக்குப் போனேன் காது, கண், தொண்டை முதலிய கோளாறுகளுக்கு 'ஸ்பெஷலிஸ்ட்'டாக இருப்பவர் நாவலர் சோமசுந்தர பாரதியாரின் மருமகன்—காமேசுவரன் அவர் பெயர். நோயாளிகளிடம் அன்புடன் பேசி ஆதரவு காட்டுவதில் காமேசுவரனுக்கு இணையானவர் அவர்தான்.

அன்று மருத்துவமனைக்கு பி.எஸ். மணியம், தா. கிருஷ்ணன் மு. தர்மன், எழுகடல் இராமனுதன், திருஞானம் மற்றும் ஏராளமான நண்பர்கள் வந்திருந்தார்கள். நண்பர் மணியம், ''அறிஞர் அண்ணா அவர்கள் 25—3—65 ம் தேதி உங்களைப் பார்க்க மதுரை வருகிறார்; அதன்பின்னர் பாளையங்கோட்டைக்குப் போகிறார் கலைஞரைப் பார்ப்பதற்காக! இண்டர்வியூவுக்கு ஏற்பாடு செய்து கொள்ளுங்கள்'' என்றார். அண்ணாவின் வருகையை எதிர்பார்த்திருந்தேன். இந்தத் தகவலை நண்பர் ராஜாங்கத்திடமும் சொல்லியிருந்தேன்.

**25-3-65**

காலை 11 மணியளவில் அறிஞர் அண்ணா அவர்களும், மதுரைமுத்து அவர்களும் சிறைவாயிலுக்கு வந்து விட்டதாக

தகவல் வந்தது. நானும் நண்பர்களும் சிறைச் சீருடையுடன் போனோம். ஆனால் அண்ணா கோபமாகப் போய்விட்டதாக ஒரு சிறை அதிகாரி சொன்னார். விவரம் கேட்டோம்.

''பி. வகுப்புக் கைதிகளைக் கம்பிக்கு வெளியில் நின்றுதான் பார்க்க வேண்டுமென இப்போது புது உத்தரவு வந்திருக்கிறது. அந்த விவரத்தைச் சொன்னோம். அப்படிப்பார்க்க விரும்பவில்லை யென்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்'' என்றார் சிறை அதிகாரி.

அதன் பிறகு "அண்ணா அவர்கள் எங்களைப் பார்க்கவில்லை என்ற கவலைபோய், தரமானவர்களைக் கூட இந்தத் தரங்கெட்ட சர்க்கார் மதிக்கமறுக்கிறதே'' என்ற கோபம் மேலோங்கி விட்டது. அண்ணாவைச் சந்திக்க முடியாமற்போன கவலை மடிய நெடுநாட்களாகிவிட்டன.

## 26 - 3 - 65

அண்ணா அவர்கள் திரும்பிப்போன தகவலை விரிவாக சட்ட மன்ற எதிர்க்கட்சித்தலைவருக்கு எழுதினேன். பி. வகுப்புக் கைதிகளை மிருகங்களைப் போல் கூண்டுக்குள் அடைத்து வைத்துக் காண்பிக்கும் அநாகரீகத்தை நீக்குவதற்கான நடவடிக்கைகளை மேற்கொள்ளும்படி வற்புறுத்தி எழுதினேன். சிறையிலிருந்த மற்ற பி. வகுப்புக் கைதிகளும், பொதுவுடமைக் கட்சியைச் சார்ந்த பி. வகுப்புக் கைதிகளும் என்னிடம் இது பற்றி அடிக்கடி கவனப் படுத்திக் கொண்டே இருந்தார்கள். நான் நமது நாவலர் அவர்களுக்கு இரண்டு நாட்களுக்கு ஒரு கடிதம் வீதம் எழுதி நினைவு படுத்தினேன்.

## 1 - 4 - 65

காலை 8 மணிக்கு நான் வேலைக்குப் போனேன். மதுரைச் சிறையில் பார்ப்பதற்கு வனப்புள்ளதாக அமைந்திருந்தது எட்டாம் பிளாக் ஒன்றுதான். சிறைக்குள்ளே அதைப் 'பிருந்தா வனம்' என்றுதான் அழைப்பார்கள். அங்குதான் எனக்கு வேலை. அங்கு பொழுது போவதே தெரியாது. வெளியூர்களி-லிருந்தெல்லாம் அங்குதான் புத்தகம் வரும்-பைண்டிங் செய்-வதற்கு! சர்க்கார் வரவு செலவுப் பேரேடுகள், லைப்ரரி புத்தகங்கள்-இப்படிப் பலவகை!

ஒன்பது அடித்து சில நிமிடங்களுக்கெல்லாம் பெரிய டாக்டர் ராமானுஜம் அவர்களும் கம்பவுண்டர் தாவூத்தும் எட்டாம் பிளாக்கிற்கு வந்தார்கள். இருவருக்கும் வியர்த்துக் கொட்டி

யிருந்தது. என்னோடு வேலைபார்த்துக் கொண்டிருந்த நாற்பது பேரும் திகைத்துப் போய் எழுந்து நின்றார்கள். டாக்டர் என்றால் சிறையில் அதிக மரியாதை உண்டு! சூப்ரெண்டெண்டுக்கு அடுத்த பொறுப்பு டாக்டர் பொறுப்பு! சிலநேரங்களில் சூப்ரெண்டெண்டுக்கே டாக்டர் தயவு தேவைப்படும்!

டாக்டர் வந்ததும் ''எங்கே தென்னரசு?'' என்றார்.

''வணக்கம்!'' என்றேன். எப்போதும் அவருடன் நான் சரளமாகப் பேசுவதுண்டு.

''கொண்டுவாங்க பார்ப்போம்! எந்த இடத்தில் கடிச்சுது? எத்தனை மணிக்கு நடந்தது?'' டாக்டர் இப்படி அடுக்கிக் கொண்டே போனார்.

எனக்கு எதுவும் புரியவில்லை. சிரித்தேன்.

''என்னசார்! யாரோ உங்களை ஏமாற்றப் பார்த்திருக் கிறார்களா?'' என்றேன்.

''கணபதிதானே சொன்னார்?''

''என்ன சொன்னார் சார்?'' கேட்டேன் நான்.

''தென்னரசுக்கு பாம்பு கடித்துவிட்டது. மயங்கி மயங்கி உட்காருகிறார். இங்கேயே இருங்கள் என்று சொன்னேன். மறுத்து விட்டுப் போய்விட்டார் என்று சொன்னார். நான் ஓடி வந்தேன்'' என்றார்.

எல்லோருக்கும் பேரதிர்ச்சியாய் போய்விட்டது. இதெல்-லாம் ஒரு விளையாட்டா என்று கூட நான் நினைத்தேன். கணபதி அவர்களும் ஒரு டாக்டர். ஒரு டாக்டர் இன்னொரு டாக்டரிடம் அதுவும் என் பெயரைப் பயன்படுத்தி விளையாடலாமா?

வேலைவிட்டு அறைக்கு வரும் வழியில் என்னைச் சந்தித்த வர்களெல்லாம் கேட்டார்கள், கவலையுடன் கேட்டார்கள்- ''என்னங்க பாம்பு கடித்துவிட்டதாமே!'' என்று. எனக்கு வெட்கமாகக் கூடப்போய்விட்டது. பாம்பு கடித்த செய்தி பரவிவிட்டது. சிறையில் பரபரப்பே ஏற்பட்டு விட்டது.

சூப்பரெண்டெண்ட், டாக்டர் கணபதி அவர்களை இது பற்றிக் கேட்டார். டாக்டர் கணபதி குளுமையாகப் பதில் சொன்னார். ''இன்று ஏப்ரல் முதல் தேதி சார்!. மிஸ்டர் ராமா னுசத்தை 'ஏப்ரல்பூல்' ஆக்கிப் பார்த்தேன்.''

சூப்ரெண்டெண்ட் இதுகேட்டு பலமாகச்சிரித்தார். அதற்கு முன் சூப்ரெண்டெண்ட் ஒரு போதும் அப்படிச் சிரித்ததில்லை என்று டாக்டர் கணபதி என்னிடம் சொன்னார்.

''என்ன டாக்டர், நான்தானு அகப்பட்டேன்; அதுவும் எனக்குப் பாம்பா கடிக்க வேண்டும்'' என்றேன்.

''உங்களைச் சொன்னால்தான் டாக்டர் துடிப்பார்; உங்களைச் சொல்லாவிட்டால் சிறையில் இவ்வளவு பரபரப்பு, சூப்ரெண்டெண்ட் வரை போகுமா?'' என்ருர் டாக்டர்.

## 5 - 4 - 65

அறிஞர் அண்ணு அவர்கள் மதுரை மாவட்டச் சுற்றுப் பயணத்தை மேற்கொண்டிருந்தார். முதல் நாள் மதுரை கூட்டத்தை முடித்துக்கொண்டார். சிறையில் கம்பிக்கு வெளியே நின்றுதான் பார்க்க வேண்டியிருக்கிறது என்பதால் திரு. N. V. நடராஜன், ப. உ. சண்முகம், மதுரைமுத்து முதலானோரை அனுப்பி எங்களைச் சந்திக்கச்செய்திருந்தார். நான் முதன்முதல் கேட்டது இண்டர்வியூ விவகாரம் பற்றித்தான்.

''சிறை ஐ.ஜியை நாவலர் சந்தித்துக் கூறியிருக்கிருர். விரைவில் முதலமைச்சரையும் சந்திக்க இருக்கிருர்'' என்ருர் N. V. நடராஜன். அது எனக்கு ஆறுதலாக இருந்தது. இன்னெரு இனிய தகவலை அவர் என்னிடம் தெரிவித்தார். அண்ணு அவர்கள் இன்று திருக்கோட்டியூர் போய் உங்களது குழந்தையைப் பார்க்கப் போகிருர்கள் என்ருர். எனக்கு உச்சி குளிர்ந்தது. இதற்குமேல் இனிய தகவல்வேறு என்ன வேண்டும்.

## 7 - 4 - 65

மாலை 5 மணியளவில் இலட்சிய நடிகர் திரு. எஸ். எஸ். ஆர்., திரு. சிட்டிபாபு M. C. வந்திருப்பதாகத் தகவல் கிடைத்தது. ஆனல் எனக்கு அனுமதியில்லை. திங்கட்கிழமைதானே நான் பார்த்தேன்.

திரு. எஸ். எஸ். ஆர். அவர்கள் ராஜாங்கத்தை மட்டும் பார்த்து எனது நலனை விசாரித்துப் போயிருக்கிருர். இன்று எஸ். எஸ். ஆர். அவர்களை உள்ளே அனுமதித்துப் பார்ககச் சொன்னதாகத் தெரிந்தது. விவரம் புரியவில்லை. ஒருவேளை நடிகர் என்பதற்காக உள்ளே அனுமதித்திருக்கலாம் என்று நினைத்தேன். உண்மை மறுநாள் தெரிந்தது. பி. வகுப்புக் கைதிகளையும் கம்பிக்கு வெளியில் இருந்துதான் பார்க்க வேண்டும் என்றிருந்த இடைக்கால உத்தரவை அரசாங்கம் ரத்து செய்து விட்டது. அந்த உத்தரவு திரு. S.S.R. வருவதற்கு சற்றுமுன்புதான் வந்திருக்கிறது. என்மனம் மனதார நமது நாவலரை வாழ்த்தியது. சிறையில் இருந்த மற்ற பி. வகுப்புக்

கைதிகள் அண்ணாவையே வாழ்த்தினார்கள். அண்ணாவுக்கு முதலில் அனுமதியில்லை என்று சொன்னதால்தான் அவரது முயற்சியால் புது உத்தரவு ரத்தாகியிருக்கிறது என்பது அவர்களது எண்ணம். அதுதான் சரியான எண்ணமும் கூட!

## 9 - 4 - 65

என் தம்பியிடமிருந்து கடிதம் வந்தது. 5—4—65 மாலை அண்ணா அவர்கள் எனது இல்லத்திற்கு வந்ததாகவும், எனது குழந்தை இளவரசியுடன் படம் எடுத்துக்கொண்டதாகவும் அதில் எழுதியிருந்தான். ஊரில் பெருங்கூட்டம் கூடியிருந்த தாகவும், பலத்த போலீஸ் பந்தோபஸ்து போட்டிருந்ததாகவும் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தான்.

## 12 - 4 - 65

மாதவன், பில்லப்பன் முதலானோர் என்னைச் சந்தித்துப் பேசினார்கள்.

## 16 - 4 - 65

ரேடியோவில் மகிழ்ச்சிகரமான செய்தி ஒன்று ஒலித்தது. கலைஞர் விடுதலையாகி விட்டார். தர்மபுரி தேர்தலில் தி. மு. க. வெற்றிபெறும் என்ற நம்பிக்கையில் வாங்கி வைத்திருந்த மிட்டாய்களை கலைஞர் விடுதலைக்காகச் சிறையில் வழங்கினேன்.

## 17 - 4 - 65

சாத்தூர் வரதராசன் விடுதலையானார். அவரை வரவேற்க தோழர் மாதவன் M. L. A. அருப்புக்கோட்டை சிவ. சண்முக சுந்தரம், விருதுநகர் சங்கர பாண்டியன் முதலியோர் வெளியில் காத்திருப்பதாகச் சொன்னார்கள்.

நான் நண்பர் வரதராசனை கோட்டை வாசல்வரை சென்று வழியனுப்பிவைத்தேன். எனக்கும் வெளியில் நின்ற நமது நண்பர்களுக்கும் இடையில் பத்தடி தூரம் தான் இருக்கும். இருந்தாலும் நான் கோட்டைக்கு உள்ளே சுவர் ஓரத்தில் மிக அருகில் வந்து வழியனுப்புவது அவர்களுக்குத் தெரியாது. இடையில் மதில்! இதற்குப் பெயர்தான் சிறை.

## 18 - 4 - 65

ஊராட்சித் தலைவர்கள் தேர்தல் தொடங்கின. அதன் முடிவுகளைப் பத்திரிகைகளில் பார்த்துக் கொண்டிருப்பதிலேயே நேரம் போய்க் கொண்டிருந்தது. சிறை ஒரு விநோதமான

வாழ்க்கை முறையைக் கொண்டது. ஒரு வாரம் சோகமயமாக இருக்கும். இதற்குக் காரணம் சிறை நிர்வாகம் தான். துரை (சூப்ரெண்டெண்ட்) கோபமாக இருந்தால் கெடுபிடி அதிகமாக இருக்கும். அதனுல் சிறையில் சவுக்கடி தர்பார்கள்; கண்கசியும். துரை குதுகலமாக இருந்தால் கைதிகளுக்கு அதிக கட்டுப்பாடு இராது. அப்படிப்பட்ட நேரங்களில் சடுகுடு விளையாடுவார்கள்.

## 21-4-65

விஜயன் என்ற ஆயுள் கைதி ஏசுவையும் மிஞ்சி ஒரு காரியத்தைச் செய்து கொண்டான்.

விஜயன் அருப்புக்கோட்டை தாலூகாவைச் சார்ந்தவன். கோயம்புத்தூரில் மனைவியுடன் மில்லில் வேலை பார்த்து வந்தான். அவனுக்கு மூன்று குழந்தைகள்.

அவன் கோவையில் இருக்கும்போதே அவன் தலைக்குள் ஊரல் ஏற்பட்டிருந்தது. மருத்துவம் பார்த்திருக்கிருன்; பலன் கிடைக்கவில்லை. கடைசியாக அவனும் அவன் மனைவியும் வேலையை விட்டு விலகி சேமிப்புப் பணம் ரூ 4000-துடன் சொந்த ஊருக்குத் திரும்பினுர்கள். ரூபாயைச் செலவு செய்து மருத்துவம் பார்த்தான். பணம் அழிந்ததே தவிர வியாதி தீரவில்லை. கடைசியாக மனைவியின் ஒப்புதலுடன் எல்லோரும் குடும்பத்துடன் செத்து விடுவது என்று முடிவு செய்தார்கள். முதலில் குழந்தைகளை கிணற்றில் தூக்கிப்போடுவது, பின்னர் தாங்கள் இருவரும் சாவது என்ற முடிவுடன் ஒரு பாழுங் கிணற்றுக்குப் போய் அந்தக் குழந்தையை தூக்கிப் போடும் போது மனைவி கதறி விட்டாள், விஜயன் பிடிபட்டான். தூக்குத் தண்டனை கிடைக்குமென்று எதிர்பார்த்தான். ஆயுள் தண்டனை தான் கிடைத்தது.

சிறையில் அவனுல் தலையில் இருந்த அரிப்பைத் தாங்க முடியவில்லை. டாக்டர்கள் புகைப்படம் எடுத்துப்பார்த்து ஒன்றுமில்லை என்று சொல்லி விட்டார்கள். ஆனுல் விஜயனே தன் தலையில் புழு ஊரிக் கொண்டிருக்கிறதென்ருன். அன்று மாலை 3 மணியளவில் விஜயன் தன் நெற்றியில் ஆணி ஒன்றை அடித்துக் கொண்டு விட்டான். ஆணி முழுதும் தலைக்குள் போய்விட்டது—ஆனுல், ஒரு சொட்டு ரத்தம்கூட வரவில்லை. பெரிய ஆயுதங்களைக் கொண்டு இரண்டுபேர் பிடுங்கினுர்கள். அப்போதும் அவர் கலங்கவில்லை. "என் தலையில் சுத்தியலைக் கொண்டு அடித்துப் பாருங்கள் டாக்டர்; எனக்கு வலிக்காது" என்ருன். டாக்டர் விளையாட்டாக நீ விஜயனல்ல; வீரவிஜயன் என்ருர். அதிலிருந்து அவனுக்கு வீ ர வி ஜ ய ன் என்று பெயராயிற்று.

## 27 - 4 - 65

திருவாடானை வட்டச் செயலாளர் இன்று விடுதலையானார். அவர் என்னை விட்டுப் பிரியும் போது எனக்குச் சஞ்சலமாகத் தானிருந்தது.

தோழர்கள் எஸ். முத்து, பி. எஸ். மணியம், தா. கிருஷ்ணன் காவேரி, திருப்பதி மற்றும் ஏராளமான நண்பர்கள் அவரை வரவேற்கக் காத்திருந்தார்கள். வழக்கம்போல் கோட்டை வாசல்வரை சென்று வழி அனுப்பி வந்தேன். வெளியில் நிற்போருக்கு அது தெரியாது.

## 28 - 4 - 65

புரட்சி நடிகர் எம். ஜி. ஆர். அவர்கள் மதுரை, விருதுநகர், நெல்லை முதலிய நகரங்களுக்கு வரப்போவதாகச் செய்தித்தாள் களில் செய்திகள் படித்தேன். நிச்சயமாக மதுரைச் சிறைக்கு வருவார் என்று எதிர்பார்த்தேன். அதன்படியே காலை 11 மணி யளவில் வந்தார்.

நானும் ராஜாங்கமும் அவரைப் பார்த்தோம். புரட்சி நடிகர் உற்சாகமாகவும், மகிழ்ச்சியாகவும் தென்பட்டார். நிறையப் பழங்கள் வாங்கி வந்தார். இருவரும் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தோம்.

''உங்களுக்கு என்ன வேண்டும்?'' என்றார்.

''எனது பத்திரிகையை நிலை நாட்டத்தான் துடிக்கிறேன்'' என்றேன்.

''நீங்கள் வெளியில் வந்ததும் ஏற்பாடு செய்கிறேன்'' என்றார்.

''நண்பர் ராஜாங்கத்திற்குத் தைரியம் சொல்லுங்கள் என்றேன்''

''ராஜாங்கத்திற்கு இது ஒரு நல்லகாலம். நல்லவர்களுக்கு வரும் துன்பம் அவர்களது வளர்ச்சிக்கு ஒரு முன்னறிவிப்பு. எனக்குக் கால் முறிந்த கட்டத்திற்குப் பிறகுதான் நல்லகாலம் தொடங்கியது. எப்போதுமே நியாயமும் உண்மையும் உள்ள வர்களுக்கு இப்படி ஒரு கட்டம் வந்தே தீரும். வந்தால்தான் அவர்களது வாழ்வு சிறக்கும்'' என்றார்.

எம். ஜி. ஆர். அவர்கள் ஏறத்தாழ அரைமணி நேரம் இருந்தார். என்னிடமிருந்த மப்ளரை அவருக்கு அணி வித்தேன். சிறையில் வெளியில் பெருங்கூட்டம் கூடியிருந்தது. எம். ஜி. ஆர். அவர்களிடமிருந்து மீண்டு போகப் பெரும்பாடு பட்டார்.

## 29—4—65

இலட்சிய நடிகர் திரு. எஸ். எஸ். ஆர். அவர்களிடமிருந்து எனக்குக் கடிதம் வந்தது. நண்பர் ராஜாங்கத்திற்கு அடிக்கடி தைரியம் கூறும்படி எழுதியிருந்தார்.

ராஜாங்கத்திற்கா தைரியம் கூறவேண்டும்? அவர் கலங்கா உள்ளத்தினர். எந்தத் துயரத்தையும் சிரித்துக்கொண்டே கழித்துப் பழக்கப்பட்டவர். எப்போதுமே அவர் குமிழ்ச் சிரிப்புடன்தான் காணப்படுவார். ''தி. மு. க. ஒரு தற்காப்புமிகுந்த இயக்கம். விரும்புவோரை அது அணைக்கும்; ஒதுங்குவோரைக் கண்டால் ஒதுக்கும். ஆனால், யாராவது அதை அழித்துவிட நினைத்தால் அவர்களை அது ஒழிக்காமல் விடாது,'' என்று ராஜாங்கம் அடிக்கடி சொல்லுவார். ஆனால், ராஜாங்கத்தை நான் எப்போதாவதுதான் மருத்துவ மனைக்கு வரும்போது சந்திப்பேன்.

## 1—5—65

கலைஞர் மதுரை மாவட்டச் சுற்றுப்பயணம் என்று கேள்வி பட்டேன். ஆகையால் வருவார் என்று எதிர்பார்த்தேன். அதன்படியே காலை 10 மணிக்கே வந்து விட்டார். அவருடன் டி. பி. அழகுமுத்து, மதுரை முத்து, வழக்கறிஞர் பி. எஸ். ஆர். ஆகியோர் வந்தார்கள். நானும் ராஜாங்கமும் அவர்களோடு நெடுநேரம் பேசிக்கொண்டு இருந்தோம். கலைஞரை—விடு தலைக்குப் பின்னர் முதல் தடவையாக நான் பார்த்ததால் அவருக்கு ரத்த ஊட்டம் தரும் டானிக் ஒன்று கொடுத்து கைத்தறி ஆடையும் அணிவித்தேன். கலைஞர் எங்களுக்கு பிஸ்கட் பாக்கெட்டுகள் வாங்கி வந்தார்.

## 8—5—65

மதுரை முத்து, பி. எஸ். மணியம், எழுகடல் இராமனுதன் முதலியோர் என்னைச் சந்தித்தார்கள். பஞ்சாயத்து யூனியன் வெற்றி தோல்விகளைப் பற்றிப் பேசினோம்.

## 10—5—65

வழக்கறிஞர் பி.எஸ். ராமசுப்ரமணியம் என்னைச்சந்தித்தார் கலைஞர், மாறன் ஆகியோர் வழக்குகள் பற்றிப்பேசினோம்.

சற்று நேரத்திற்குப் பிறகு நாகர்கோயிலிலிருந்து N. V. நடராஜன் அவர்கள் வந்தார். ஆனால் பார்க்க அனுமதி கிடைக்கவில்லை. நண்பர் ராஜாங்கம் M. L. A. அவர்களை மட்டும் பார்த்துச் சென்றார்.

## 20 - 5 - 65

மாதவன் M.L.A. அவர்கள் வந்தார். என்னைப் பார்க்க அனுமதி கிடைக்கவில்லை.

## 24 - 5 - 65

எனது தம்பிகள் அருணாசலம், திருஞானம், திருப்பதி, தங்கை, மருமகள் மீனா, மருமகள் மங்கையற்செல்வி, மருமகன் செந்தாமரை முதலானோர் வந்து சந்தித்தார்கள்.

## 26 - 5 - 65

''கட்சியில் தேர்தல் வரப்போகிறது யார் பொதுச் செயலாளராக வருவதை விரும்புகிறீர்கள்?'' என்றார் முத்து. இன்னும் பத்து ஆண்டுகளுக்கு அண்ணா அவர்கள் தான் தொடர்ந்து அந்தப் பதவியை வகிக்க வேண்டும் என்றேன் நான். அவர் அதை வரவேற்பாரா, இல்லையா என்பதை என்னால் அறியமுடியவில்லை. எஸ். முத்து, பி. எஸ். மணியம் இருவரும் என்னைச் சந்தித்து எனது விடுதலை பற்றிப் பேசினார்கள். விடுதலைக்கு அண்ணாவும், கலைஞரும் வருவதாகவும் சொன்னார்கள்.

## 27 -5 - 65

நேருவின் நினைவுநாள். சென்ற ஆண்டு இதே தினத்தில் நான் எனது மாமனார் வீட்டுக்குப்போய்க் கொண்டிருந்தேன். பாதிவழியில் நேரு இறந்த செய்தி கேட்டு திரும்பவும் ஊருக்கு வந்தது நன்றாக நினைவு இருக்கிறது. இப்போது நான் சிறையில் இருக்கிறேன். நான் நேருவைப் பலமுறை பார்த்திருக்கிறேன். எனக்கு நினைவு தெரிந்த நாள் முதல் நேரு ஒரே மாதிரிதான் இருக்கிறார். அதே கோட்டு! அதே ஷெர்வானி! அதேபுன்னகை! அவர் ஒரு விந்தையான தலைவர். ஜனநாயகவாதிகள் மத்தியில் ஜனநாயகவாதியாகவே வாழ்ந்தார். ஆனால் பிரபுக்-களும், சக்கரவர்த்திகளும் அவரைத் தங்கள் இனத்தில் சேர்த்துக்கொண்டிருந்தார்கள். சக்கரவர்த்திகளும் சர்வாதிகாரிகளும் எப்போதும் ஜனநாயகவாதிகளை மதிக்கமாட்டார்கள். ஆனால் நேருவை மதித்தார்கள். உலக சரித்திரத்தில் இது ஒரு பெரிய அதிசயமான சம்பவமல்லவா!

## 28 - 5 - 65

நான் பைண்டிங் இலாகாவில் இருந்தேன். சூப்ரெண்-டெண்ட் திடீரென்று நுழைந்தார். ''என்னய்யா உங்கதலைவர்

இரண்டு வருஷத்திற்குப் போராட்டமே இல்லை என்று சொல்லி விட்டாரே அதனால் எங்களுக்குத்தான் சிரமம்!'' என்றார் சூப்ரெண்டெண்ட்.

''அதற்கும் சிறைக்கும் என்ன சம்பந்தம்?'' என்று கேட்கும் தோரணையில் அவரைப்பார்த்தேன்.

''இது மாதிரியான பைண்டிங் இலாகாவிற்கு கொஞ்சம் படித்தவர்கள்தான் தேவைப்படுவார்கள். உங்கள் ஆட்கள் வந்தால் கவர் கட்டிங், புக் பைண்டிங், பைல் ஒர்க் இவைகளைக் கொடுக்கலாம். இப்போது நூறு பேர் வந்து போனதால் நிறைய சர்க்கார் வேலை பார்க்க முடிந்தது.'' என்றார். சூப் ரெண்டெண்ட் எப்போதாவதுதான் என்னோடு பேசுவார். அதுவும்இதுமாதிரி ப்யனுள்ள பேச்சைத்தான் பேசுவார். சிறை அதிகாரிகளில் இவர் மிகவும் உன்னதமான குணம்படைத்தவர். அவர் யாரையும் அடிக்க உத்தரவு கொடுக்கமாட்டார். எம். ஏ. படித்துவிட்டு ரிசர்வ் ஹெட் வார்டராக 1931-ல் உத்தியோ கத்தில் சேர்ந்து படிப்படியாக உயர்ந்து சூப்ரெண்டெண்டாக வந்தவர். 1966-ல் அவர் ரிட்டையராக போவதாகப் பேசிக் கொண்டு இருந்தார்கள். பெயர் பால்ராஜ். அவரது குடும்பமே சர்க்காருக்குச் சேவை புரிகிறது. மகன் விமானப்படையில் பணி புரிகிறார். தம்பி இராணுவத்தில் சேவை செய்கிறார். இவர் தந்தை கலெக்டராக இருந்திருக்கிறார்.

## 1—6—65

தோழர் மாதவன் எம்.எல்.ஏ., பி. எஸ். மணியம் முதலா னோர் வந்தார்கள். எனது விடுதலைப்பற்றியும், பாராட்டுக் கூட்டங்கள் பற்றியும் கேட்டார்கள்.

ஜூன் 30-ல் எனக்கு விடுதலை என்று அறிவிக்கப்பட்டி ருந்தது. அதை அறிந்துகொண்டு போகத்தான் தோழர் மாதவன் வந்திருந்தார். அதிலிருந்து விடுதலை உணர்ச்சியே என்னிடம் மேலோங்கி இருந்தது. தொடர்ந்து பத்திரிகை களிலும் எனது விடுதலைத் தகவல்கள் வந்து கொண்டிருந்தன.

## 8—6—65

தலைமைக் கழகத்திலிருந்து அமைப்புச் செயலாளர் N. V. நடராசன் அவர்கள் கடிதமெழுதியிருந்தார்கள். அதில் 30—6—65-ம் தேதிய எனது விடுதலை வரவேற்புக்கு அறிஞர் அண்ணா அவர்கள் வர இருப்பதாக அதில் எழுதியிருந்தார். நான் எதிர்பார்க்கவில்லை, அண்ணா அவர்கள் மலேசியா போகப்

போவதாக பத்திரிகைகளில் செய்திகள் அடிபட்டுக்கொண்டி ருந்தன. ஆகையால் அண்ணவை விடுதலைக்குப் பின்னர்கூட உடனடியாகப் பார்க்க முடியாது என்று நினைத்தேன். அண்ண வருகை தர விரும்பியது எனது பொது வாழ்க்கைக்கு ஒரு நல்ல உத்தரவாதமாகவே எனக்குப்பட்டது.

அந்தக் கடிதத்தில் திரு. N. V. நடராசன் அவர்கள் எனது விடுதலைக்கு மறுநாள் அண்ண அவர்கள் இராசபாளையம் வர இசைந்திருப்பதாகவும் குறிப்பிட்டிருந்தார். அதில் ஒரு சிக்கல் இருப்பதாக எனக்குப்பட்டது. அதாவது விடுதலைக்கு மறுநாள் திருப்பத்தூரிலும் மற்றும் சில ஊர்களிலும் பாராட்டுக் கூட்டம் நடத்த நண்பர் மாதவன் (M.L.A.) அவர்கள் ஏற்பாடு செய்தி ருந்தார். ஆகவே அன்றைய தினம் இராசபாளையம் போக வாய்ப்பிருக்காது. இதை எப்படி அண்ண அவர்களுக்கு தெரியப் படுத்துவது? நான் திகைத்துக் கொண்டிருக்கும் போது இன் ெனாரு தகவல் கிடைத்தது. 9—6—65-ல் மதுரையில் நடக்க இருக்கும் திருமணத்திற்கு அண்ண வரப்போவதாக பத்திரி கையில் பார்த்தேன்.

## 9-6-65

அண்ண அவர்களின் கைக்குக் கிடைக்கும்படி ஒரு கடி தத்தை எழுதி கள்ள வழியாக அனுப்பினேன். காந்தியார், பண்டித நேருகூட கள்ள வழிகளில் கடிதங்களை அனுப்பியிருப்ப தாகப் படித்திருக்கிறேன். நான் என்ன சாமான்யன்தானே? கடிதம் கிடைக்கப்பெற்ற அண்ண அவர்கள் விடுதலைக்கு மறு நாள் திருப்பத்தூர் தாலுகாவுக்கும், அதற்கு அடுத்த நாள் இராசபாளையத்திற்கும் வர ஒப்புதல் அளித்து விட்டார்கள். வெளியில் இருக்கும்போது முயன்று வெற்றி பெருத காரியங்க-ளெல்லாம் எனக்கு இப்போது நிறைவேறிக்கொண்டிருந்தன. சிறையிலேயே இருந்து விட்டால் என்ன என்று கூடத் தோன்றி யது. M.G.R., S S.R. இவர்களைப் பார்க்க சென்னைக்குப்போய் பலமுறை முயன்ருலும் அவர்கள் கிடைப்பதில்லை. ஆனல் அவர்கள் சிறையிலிருக்கும் என்னைப் பார்க்கப் பலமுறை வந்தார்களே சிறை வாழ்க்கைக்கு எவ்வளவு பெருமை? அதுவும் மக்கள் நலனுக்காகச் சிறைக்குப் போனல்தான் அந்தப் பெருமை கிடைக்கும். எல்லாம் தியாகம் நிறைந்த சிறை வாழ்க்கை ஆகிவிடுமா? காதலியின் எச்சலுக்கு மதிப்பு உண்டு! எல்லோருடைய எச்சலுக்கும் மதிப்பு ஏற்படுமா? தியாகத்திற்காக சிறை புகுவது காதலியின் எச்சலை விழுங்கு வதற்குச் சமம் தானே!!

## 10 - 6 - 65

எனக்கு ஒவ்வொரு நாளும் விடுதலை உணர்ச்சி மேலோங்கிக் கொண்டிருந்தது. காதலித்த பெண்ணைத் திருமணம் செய்து கொள்வதற்கு பெற்றோர்கள் இசைந்து திருமணத்திற்கும் நாள் குறித்தால் எவ்வளவு உற்சாகம் இருக்குமோ அந்த அளவு உற்சாகத்தை நான் பெற்றேன். ''முரசொலி'' ''நம்நாடு'' இதழ்களில் என்னுடைய விடுதலை பற்றிய செய்திகள் பெரிய அளவில் வந்து கொண்டிருந்தன.

என்னை வரவேற்பதற்கு சிறை வாசலுக்கு யார் யார் வரப் போகிறார்கள் என்று கற்பனை செய்து கொண்டிருக்கும் காலக் கட்டம்.

## 15 - 6 - 65

என்னுடைய அறையிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக பொருள்களை ஊருக்கு அனுப்ப ஆரம்பித்தேன். கழகத்தோழர் களும் நண்பர்களும் எனக்கு உதவிய பொருள்கள் நிறைந்து விட்டன. என்னுடைய சிறைவாசம் ஓராண்டு அல்லவா! எப்படியோ ஒரு குடும்பத்திற்கு வேண்டிய சாமான்கள் சேர்ந்து விட்டன. என்னுடைய தம்பிகள் அருணாசலம், திருஞானம் இருவரும் வாய்ப்புக் கிடைக்கும் பொழுதெல்லாம் என்னைச் சந்தித்து சாமான்களை எடுத்துக் கொண்டு போனார்கள்.

## 20 - 6 - 65

விடுதலை நாள் நெருங்கிக் கொண்டு வந்தது. சிறை வாசத்தின் போது என்னை முழுக்க முழுக்க கவனித்த டாக்டர் ஜி. கணபதி அவர்கள் எனக்கு சிறந்த கண்காணிப்பாளராக இருந்தார். வசதிக்குறைவினால் என்னுடைய உடம்பு வலிமை குன்றிவிடக் கூடாது என்பதற்காகச் சிறந்த வைட்டமின் உள்ள வில்லைகளை எனக்கு தந்து கொண்டிருந்தார். நான் சிறைக் குள்ளே செல்லும்பொழுது என்னுடைய எடை 120 பவுண்டு இன்று 128 பவுண்டு. குளிர்ச்சியான நிழலிலேயே ஓராண்டைக் கழித்ததால் என்முகம் கவர்ச்சியாகவும் என் உடல் திடகாத்திர மாகவும் இருந்தது. சிறைச்சாலைக்குள் நிறையப் படித்தேனே தவிர நிறைய எழுதவில்லை. நான் நடத்திய ''தென்னரசு'' மாத இதழுக்கு நான்கைந்து சிறுகதைகள் எழுதினேன். அண்ணா அவர்களின் ''காஞ்சி'' இதழுக்கு ''தும்பைப்பூ'' எனனும் நெடுங்கதை ஒன்று எழுதினேன். ஓராண்டில் நான் செய்த எழுத்துப் பணி இதுதான். ஒய்வு நேரத்தில் கைரேகை பற்றித் தெரிந்துகொள்ள வேண்டுமென்று விரும்பி அது

சம்பந்தமான நூல்களை நிறையப் படித்தேன். கைரேகை சரிதானு என்பதைப் பரிசோதிப்பதற்கு குற்றவாளிகளின் கைகள் பெரிதும்பயன்பட்டன. எனக்கு பொழுது போகவில்லை. உலகத்தில் வேகமானது மனம். எனக்கு முன்னுல் என்னுடைய மனம் சிறைவாசலைத் தினசரி தட்டிக் கொண்டேயிருந்தது. அண்ணாஎப்பொழுது வருவார்; சிறைக்கு வெளியே என்னென்ன நடக்கும்; கலைஞர் வருவாரா; என்றெல்லாம் நினைத்து நினைத்து மகிழ்ந்து கொண்டிருந்தேன்.

## 21-6-65

தூக்கம் களைப்பை நீக்கும் என்பார்கள். ஆனுல் நான் சிறைச்சாலையில் தூங்கித்தூங்கியே களைத்துப்போனேன். ஒவ்வொரு நாளும் எனக்குத் தூக்கம் வருவது பெரும் பாடாய் விட்டது. வெளியிலே விளக்கோடு உலாத்தும் வார்டர்கள் நான் தூங்காதிருப்பதைப் பார்த்து ''விடுதலை வந்து விட்டாலே இப் படித்தான் சார்'' என்று சொல்லிக்கொண்டு போவார்கள்.

## 22-6-65

காலை 10 மணி அளவில் மதுரை மாவட்டச் செயலாளர் என்னை சந்தித்தார். ஒரு பையில் 5 சிகரெட் பெட்டிகளைப் போட்டு என்னிடம் கொடுத்தார். அவருக்கு முன்னுல் நான் சிகரெட் பிடிப்பதில்லையென்றுலும் சிறைச்சாலையில் இருக்கக் கூடிய ஒரு ஜீவனுடைய சாந்திக்காக அவரே எனக்கு சிகரெட் வாங்கிக் கொண்டு வந்திருந்தார். அன்று ஒரு புதிய தகவலைச் சொன்னுர். ''உங்களை வரவேற்க எல்லாத் தலைவர்களும் வரு கிருர்கள்; அறிஞர்அண்ணு, கலைஞர்கருணுநிதி, K.A. மதியழகன் டாக்டர். சத்தியவாணிமுத்து, என். வி. நடராஜன் இவர்க ளெல்லாம் வருவதாக எனக்குத் தகவல் கொடுத்திருக்கிருர்கள், 30—6—65 அன்று மாலை தல்லாகுளம் பெருமாள் கோயில் திடலில் உங்களுக்குப் பாராட்டுக் கூட்டம் ஏற்பாடு செய்யப்பட்டி ருக்கிறது. மறுநாள் காலை மேலச் சின்னனம்பட்டியில் நமது பி. எஸ். மணியனுக்குத் திருமணம். நாம் எல்லாத் தலைவர்களை யும் அழைத்துக்கொண்டு அங்கே போகவேண்டும்'' என்ருர்.

இவ்வளவு தலைவர்களும் ஒரே முகமாக இங்கு வருவார்கள் என்று நான் எதிர்பார்க்கவில்லை. மனதிற்குள்ளே எனக்கு ஒரு திருப்தி-எல்லோருக்கும் நாம் நல்ல பிள்ளையாக நடந்திருக்கி ருேம் என்று!

இவ்வளவு பேர் வரப்போவது சிறைச்சாலைக்குள்ளே இருப்பவர்வர்களுக்கு பெரிய ஆச்சரியத்தைத் தந்தது. சிறைக்

குள்ளே என்னைத் தன்னந்தனியாகப் பார்த்ததினுல் என்னு-டைய தனிமையையும் வெளியே நடைபெற இருக்கும் விழா வையும் சேர்த்துப்பார்த்து, பிள்ளைப்பூச்சிகளைப்போல் இருக்கும் அந்தக் கைதிகள் வியப்படைந்துகொண்டிருந்தார்கள்.

சிறைச்சாலைக்குள்ளே ஒரு நூல் நிலையம் இருக்கிறது. வெளியிலே வாங்கமுடியாத அற்புதமான நூல்கள் சிறைச்சாலை நூல் நிலையத்தில் கேட்பாரற்றுக் கிடக்கின்றன. அதில் ஒரு முக்கியமான நூல்; ''ஆகஸ்டுக் கலவரத்தின் காரணக்கர்த்-தாக்கள் யார்?'' என்பது. அந்த நூலை வெள்ளைக்கார அரசாங் கம் அச்சிட்டு சர்க்காரின் அதிகாரப் பூர்வமான முன்னுரை யோடு வெளியிட்டிருந்தது. இந்தியா முழுவதும் ஏற்பட்ட குழப் பங்களுக்கும், கலவரங்களுக்கும், நஷ்டங்களுக்கும் யார் யார் பொறுப்பாளிகள் என்று அந்த நூலில் குறிப்பிடப்பட்டிருந்தது. காங்கிரஸ் இயக்கத்தின் ரகசியத் தீர்மானங்கள், காந்தியாரின் ரகசியக் கடிதங்கள் முதலியவற்றை துப்பறிவாளர்கள் மூலம் அறிந்து, வெள்ளைக்கார சர்க்கார் அதில் வெளியிட்டிருந்தது. காங்கிரஸ் அரசாங்கம் வந்தபிறகு அந்த நூலை நூல் நிலையத்தி லிருந்து அகற்றிவிடும்படி உத்தரவிட்டிருந்தார்கள். அதனுல் புத்தகப் பட்டியலிலிருந்து அதை விலக்கியிருந்தார்கள். அலமாரி யிலிருந்த அந்தப் புத்தகம் எப்படியோ என் கண்ணில் பட்டுவிட் டது. அதைப் பார்த்தவுடன் இந்த நூல் இங்கே இருப்பதை விட அண்ணுவிடம் இருப்பது பயனுடையதாகும் என எண்ணி இதை எப்படியாவது எடுத்துக்கொண்டு போய் அண்ணுவிடம் சேர்க்கவேண்டுமென்று தீர்மானித்து அதற்கான வேலைகளில் ஈடுபட்டேன். என் எண்ணப்படி அதைச் செய்துவிடுவேன் என்று உங்களுக்குத் தெரியும்.

## 29 - 6 - 65

நாளை விடுதலை! மதுரை மாவட்டச்செயலாளர் திரு. முத்து அவர்கள் சிறையில் என்னைச் சந்தித்தார்கள். அவர் சொன்ன தகவல் எனக்குப் பெருத்த வேதனையைத் தந்தது. ''அண்ணு அவர்கள் வரவேற்புக்கு வரவில்லை; மாலையில் நடைபெற இருக்கும் பாராட்டுக் கூட்டத்திற்குத்தான் வருகிருர்கள். கலைஞர் கருணுநிதி அவர்கள் புதுக்கோட்டைக் கூட்டத்தை முடித்துக்கொண்டு இரவே மதுரைக்கு வந்துவிடுகிருர்கள். ஆகையால் காலை 11 மணிக்கு மேல் நீங்கள் வெளியில் வரு வதற்கு சிறை மேலதிகாரியிடம் சொல்லி ஏற்பாடு செய்து கொள்ளுங்கள்'' என்ருர் மதுரை மாவட்டச்செயலாளர். அதன் படி சிறை மேலதிகாரி அவர்கள் காலை 11 மணிக்கு என்னை விடுதலை செய்ய இசைந்தார். அவர் சொன்ன நிபந்தனை, சிறைக்கோட்டை வாசலுக்கு உள்ளே முக்கியஸ்தர்கள் தவிர

மற்றவர்கள் யாரும் வரக்கூடாது; கோஷங்கள், வாணவேடிக் கைகள் எதுவும் அனுமதிக்கப்படமாட்டாது என்பதாகும். நானும் அந்த நிபந்தனைகளுக்கு உடன்பட்டேன்.

அன்று இரவு எனக்கு தூக்கம் வரவில்லை. தீபாவளியன்று இரவு, வீட்டில் உள்ள பெண்கள் எப்படித் தூங்காமல் வேலை பார்ப்பார்களோ அதைப்போல் நானும் நினைத்து நினைத்துக் காரியங்கள் செய்துகொண்டிருந்தேன். எப்படியோ பொழுது விடிந்தது.

## 30-6-65

காலை ஆறு மணிக்கே தயாராகிவிட்டேன். முதல்நாள் எனக்கு வந்த தபால்களையெல்லாம் சிறையதிகாரி எனக்கு அனுப்பி வைத்தார். நண்பர்களும் உறவினர்களும் வாழ்த்தி எழுதியிருந்த கடிதங்கள் அவை. அந்தக் கடிதங்களோடு மிக முக்கியமான இன்னொருகடிதமும் இருந்தது. அவரிடமிருந்து கடிதம் வரும் என்று நான் கனவில் கூடகாணவில்லை. அந்த கடிதம் இரண்டே வரிகளில் இரத்தினச்சுருக்கமாக அமைந்திருந்தது.

*"நானும் உங்களைச்சிறைவாசலில் நின்று வரவேற்பதாக நினைத்துக்கொள்ளுங்கள்"*

தமிழ்நாட்டில் சுருக்கமாகவும் விளக்கமாகவும் எதையும் எழுதக்கூடியவர் ராஜாஜி அவர்கள் தான். மேலே உள்ள கடிதம் அவர் எழுதியதுதான். தனிப்பட்ட முறையில் என்னை அவருக்குத் தெரியாது. அவர் எனக்கு அறிமுகம் இல்லை. அவருக்குப் பிடித்தமான ஒரு கொள்கைக்காக நான் மேற்கொண்ட சிறைவாசத்தை எண்ணி அவர் இந்தக் கடிதத்தை எழுதியிருந்தார். வெளியில் வந்ததும் அண்ணாவிடம் காண்பிக்க வேண்டும் என்பதற்காக அந்தக் கடிதத்தை மட்டும் சட்டைப் பைக்குள் வைத்துக்கொண்டேன். நேரம் நகர்ந்து கொண்டிருந்தது. காலை 7 மணி முதற்கொண்டே தெருவில் கூட்டம் நிறைந்திருப்பதாக அறிந்தேன். கலைஞர் கருணாநிதி அவர்கள்தான் எனக்கு முதல் மாலை அணிவிப்பதாக ஏற்பாடு. வெளியில் இருந்து வரும் வார்டர்கள், கோட்டை வாசலில் கூட்டம் தாங்கவில்லைஎன்று சொல்லிக்கொண்டேயிருந்தார்கள். 11 மணிவரை அவர்கள் காத்துக் கொண்டிருக்க வேண்டுமே என்று எனக்குக் கவலை.

காலை 8 மணி அளவில் நான் எதிர்பாராத தகவல் ஒன்று கிடைத்தது. சிறைவாசலில் அண்ணாவந்து காத்துக் கொண்டி ருப்பதாகச் சொன்னார்கள். முதல் நாள் மதுரை மாவட்டச்

செயலாளர் சொன்ன தகவலுக்கும் இப்போது கிடைத்த தகவலுக்கும் தொடர்பில்லாமலிருந்தது. ஒருவேளை வார்டர்கள் அண்ணாவைத் தெரியாமல் சொல்லுகிறார்களோ என்று கூட நினைத்தேன். அரைமணி நேரத்திற்குப்பிறகு, ''அண்ணா கார் மூலமாக சென்னையிலிருந்து அதிகாலையிலேயே வந்து விட்டார்கள்'' என்று மாவட்டச் செயலாளர் முத்து அவர்கள் சொல்லியனுப்பியிருந்தார்கள்.

நான் அதற்குப்பிறகு சிறை அதிகாரியை சந்தித்து என்னை 9 மணிக்கே விடுதலை செய்து விடுங்கள் என்று கேட்டுக் கொண்டேன். நான் எவ்வளவு சீக்கிரமாக சிறைச்சாலையை விட்டுப் போகிறேனோ அவ்வளவு சீக்கிரம் தனக்குப் பொறுப்பு விலகும் என்று கருதிய சிறை அதிகாரி எந்த மறுப்பும் சொல்லாமல் ஒப்புக்கொண்டார்.

நான் விடுதலை பெறுவதற்குப் பத்து நிமிடங்களுக்கு முன்னால் ஒவ்வொரு பிளாக்குக்கும் சென்று எல்லோரிடமும் விடைபெற்றுக் கொண்டேன். கடைசியாக நான் இருந்த பிளாக்குக்கு வந்து தனித்தனியாக ஒவ்வொருவரிடமும் விடை பெற்றுக்கொண்டேன். முதுகுளத்தூர் நண்பர்கள் கஜேந்திர பாண்டியன், கந்தசாமிப்பாண்டியன் இருவரும் கண்கலங்கினார்கள். அவர்களை விட்டுப் பிரிவது எனக்குத் துயரமாகத்தான் இருந்தது. எனக்கு அவர்கள் அவ்வளவு உதவி செய்திருக்கிறார்கள்.

சரியாக 9 மணிக்கு விடுதலைப் புத்தகத்தில் நான் கையெழுதிட்டேன். கோட்டை வாசலின் சிறிய கதவு எனக்காகத் திறக்கப்பட்டது. கோட்டைக்கு உள்ளே இருக்கும் திறந்த வெளியில் அறிஞர் அண்ணா, கலைஞர் கருணாநிதி, மதியழகன், சத்தியவாணிமுத்து, என். வி நடராசன், மதுரை மாவட்டச் செயலாளர் எஸ். முத்து, திருச்சி மாவட்டச் செயலாளர் அன்பில் தர்மலிங்கம், செ. மாதவன், எம்.எல்.ஏ., நண்பர் பில்லப்பன் நண்பர் பி. திருஞானம், மாங்குடி மதியழகன் மற்றும் பல முக்கியஸ்தர்கள் கையில் மாலையுடன் வரிசையாக நின்றார்கள். வெளி வாசலில் போலீஸ் கட்டுக்காவலை மீறிக்கொண்டு ஆயிரக்கணக்கான கழகத் தோழர்கள் உள்ளே வர எத்தனித்துக்கொண்டிருந்தார்கள். நான் வெளியே வந்ததும், அண்ணா இருக்குமிடத்திற்குவந்து வணங்கினேன். எனக்குப் பிடித்தமான மல்லிகைப்பூ மாலையை என் கழுத்தில் அண்ணா அவர்கள் அணிவித்தார்கள். அதைத் தொடர்ந்து கலைஞர் அவர்களும் மற்றவர்களும் மலர் மாலைகளை அணிவித்தார்கள்.

இந்தச் சடங்கு முடிந்ததும் தலைவர்கள் நகருக்குள் சென்று விட்டார்கள். மதுரைமாவட்டச் செயலாளர் என்னை அந்த இடத்திலிருந்து பொதுமக்கள் திரண்டிருந்த இடத்துக்கு அழைத்து வந்தார். கழகத் தோழர்களின் அன்பை என்னுல் தாங்க முடியவில்லை. அளவுக்கு மீறினுல் அன்பும் ஒரு தொல்லை தான்! மயக்கம் வரும் அளவிற்கு கழகத் தோழர்கள் என்னை நெருக்கி திணற அடித்து விட்டார்கள். நானும் மதுரை மாவட்டச் செயலாளரும் ஆயிரக்கணக்காஞேர் பின் தொடர அழகரடி வழியாக நடந்து வந்தோம். ஹார்வி மில் ரயில்வே கேட் வரை நடந்து வந்து வழி நெடுக கொடிகளை ஏற்றிவைத்து விட்டு அங்கிருந்து கார் மூலமாக கட்சி அலுவலகத்திற்கு வந்தோம். மதுரை மாவட்டச் செயலாளர் முத்து அவர்கள் அன்று செய்த விடுதலை ஏற்பாட்டை என்னுல் என்றும் மறக்க முடியாது.

மாலையில் தல்லாக்குளத்தில் பாராட்டுக் கூட்டம். ஐம்பதாயிரம் பேருக்குமேல் திரண்டிருந்தார்கள். மதுரை மாவட்டச் செயலாளர் எஸ். முத்து அவர்கள்தான் கூட்டத் தலைவர். மதியழகன், சத்தியவாணிமுத்து, என். வி. நடராஜன் முதலாஞேர் பேசிய பிறகு அருமைத் தலைவர் கலைஞர் அவர்கள் பேசினுர்கள். ''தென்பாண்டி நாட்டில் வீரமாக வாழ்ந்து காட்டிய பெரிய மருது, சின்ன மருது, என்ற வீர சகோதரர்கள் போல் கழக வரலாற்றில் அதே பாண்டிய நாட்டில் மதுரை முத்து அவர்கள் பெரிய மருது ஆகவும், நண்பர் தென்னரசு அவர்கள் சின்ன மருது ஆகவும் இணைந்திருந்து பணியாற்றி, எடுத்த காரியங்களில் வெற்றியை ஈட்டி கழகத்திற்குப் பெருமை தேடித்தருகிருர்கள்'' என்று பாராட்டினுர். அடுத்து நான் நன்றி சொல்ல வேண்டிவந்தது. என்னுடைய பேச்சில், பழைய சம்பவங்களை அண்ணு அவர்களின் கவனத்திற்குக் கொண்டு வந்தேன். கடைசியாக அண்ணு அவர்கள் பேசினுர்கள். அவர் பேசுகிறபோது ''நண்பர் தென்னரசு இருக்கக்கூடாத இடங்களில் எல்லாம் இருந்து தப்பித்து கெட்டுப் போகாமல் என்கைக்கு வந்தவர். அவருடைய சகிப்புத்தன்மையும் இனிய இயல்புகளும்தான் அவரை இந்த நிலைக்குக்கொண்டு வந்தன. மதுரை என்ருல் முத்துவின் பெயர் நினைவுக்கு வருவதுபோல், இராமநாதபுரம் என்ருல் தென்னரசுவின் பெயர் நினைவுக்குவர ஆரம்பித்திருக்கிறது. அவருடைய காலத்தில்தான் அந்த மாவட்டத்தில் கட்சி-கட்டுக்கோப்பாக வளர்ந்தது என்பதில் யாருக்கும் சந்தேகம் இல்லை''. என்ருர். கூட்டம் அதோடு முடிந்தது. மறுநாள் அண்ணு அவர்கள் எனது சொந்த ஊரான திருக்கோட்டியூருக்கு வர ஒப்புக்கொண்டார். மறுநாள் பகல் 3 மணிக்குமேல் மதுரையை விட்டுக்கிளம்பி, சிங்கம்புணரி,

திருப்புத்தூர், முறையூர், சூரக்குடி, சத்ருசங்காரக்கோட்டை முதலிய ஊர்களில் நடைபெற்ற வரவேற்பு நிகழ்ச்சிகளில் கலந்துகொண்டு விட்டு; இறுதி நிகழ்ச்சியாக திருக்கோட்டியூருக்கு வந்தார். இடையில் பெயர் சூட்டப்பெற்ற ஆண் குழந்தைகளுக்கெல்லாம் தென்னரசு என்று பெயர் வைத்தார்- அண்ணா.

இரவு பதினொருமணிக்குக் கூட்டம் முடிந்தது. கலைஞர் அவர்கள் என். வி. நடராசன், மதுரை மாவட்டச் செயலாளர் முத்து, மூவரும் அண்ணாவோடு என் இல்லத்திற்கு வந்திருந்தார்கள். ''என் சொல்லுக்காக அனுப்பிவைத்த தென்னரசு உடைய பெற்றோர்களிடத்தில், எந்தவிதமான கோளாறும் இல்லாமல் முன்னைவிட திடகாத்திரமாக தென்னரசுவை ஒப்படைக்கிறேன்'' என்று அண்ணா அவர்கள் எங்கள் ஊர் பொதுக்கூட்டத்தில் குறிப்பிட்டார்கள்.

இரவு பன்னிரெண்டு மணி அளவில் அண்ணா, கலைஞர் முதலானோர் விடைபெற்றுப் பிரிந்தார்கள். ஓராண்டு சிறை வாழ்க்கை எனது வாழ்க்கையில் ஒரு புதிய மறு மலர்ச்சியை உண்டாக்கியது. அண்ணாவின் உள்ளத்தில் என்னுடைய தொண்டு இடம் பெற்று விட்டதைத்தான் சிறை வாழ்க்கை எனக்கு அளித்த பதக்கமாகக் கருதினேன்.

1962ல் முதல் முறையாக மூன்று மாதம் தண்டிக்கப்பட்டு திருச்சி சிறைச்சாலையில் அடைக்கப்பட்டிருந்தேன். 1963ல் பாதுகாப்புக் கைதியாக சிறைபிடிக்கப்பட்டு திருப்புத்தூர் துணைச் சிறையில் வைக்கப்பட்டிருந்தேன். மூன்றும் முறையாக இந்தச் சிறைவாசம் கிடைத்தது. சிறைவாசம் இத்துடன் முடிந்துவிடுமா என்பதை எந்த அரசியல் வாதியும் சொல்ல முடியாது.






**1975** ஜூன் மாதம் நான் மலேசியாவில் இருந்தேன். அப்போது இந்தியாவில் எமர்ஜென்சி பிரகடனப்படுத்தப்பட்டு விட்டதாகத் தகவல் கிடைத்தது அரசியல் சூழ்நிலை - வெப்பம் மிகுந்ததாக ஆகிவிடக்கூடும் என நினைத்து நான் என்னுடைய பயணத்தை முடித்துக்கொண்டு உடனடியாகத் தமிழகத்திற்குத் திரும்பினேன்.

1972ல் தொடங்கிய ''தென்னரசு'' என்ற எனது வாரப் பத்திரிகை மிகச் சிறப்பாக நடந்து கொண்டிருந்தது. எமெர் ஜென்சி அறிவிக்கப்பட்டவுடன் ஒவ்வொரு கட்டுரையையும் சென்னையிலுள்ள தணிக்கை அதிகாரி பார்வையிட்டப் பிறகு தான் வெளியிடப்பட வேண்டுமென்று எனக்கு அரசாங்கத்தின் சார்பில் அறிவிக்கப்பட்டது. அந்த விதிகளை மீறாமல் நிதான மாகவும், எச்சரிக்கையாகவும் ஆறு மாத காலம் எனது பத்திரிகை தொடர்ந்து நடந்தது. திடீரென்று டில்லியிலிருந்து எனக்கு ஒரு கட்டளை பிறப்பிக்கப்பட்டது. அதில்''உங்களுடைய பத்திரிகையில் வெளியாகும், மத்திய சர்க்கார் பற்றிய விமர் சனக் கட்டுரைகளை உடனடியாக நிறுத்த வேண்டும்'' என்று அந்தக் கட்டளையில் குறிப்பிடப்பட்டிருந்தது. ஆனால் நான் கட்டுரையை நிறுத்தவில்லை. ஏனென்றால் அது ஏற்கனவே வெளியான ஆங்கிலப் புத்தகத்திலிருந்து மொழி பெயர்த்து எழுதப்பட்டவைதான். ஆகவே கட்டளை பிறப்பித்த தம்பிரான் களுக்கு இது மொழி பெயர்ப்புக் கட்டுரைதான் என்று பதில் எழுதி விட்டுத் தொடர்ந்து கட்டுரையை வெளியிட்டு வந்தேன்.

திடீரென்று ஒரு நாள் ''உங்களுடைய அச்சகத்தைப் பறிமுதல் செய்வதற்காக நடவடிக்கையை மேற்கொள்ளப் போகிறோம்'' —என்று மற்றொரு தாக்கீது! நான் அதற்குமேல் எதுவும் கூறிக்கொள்ள விரும்பாமல் பத்திரிக்கையை நிறுத்தி விட்டதாகஅறிவித்துவிட்டேன். 1975 டிசம்பரோடு என்னுடைய பத்திரிகைக்கு அரசாங்கத்திலிருந்து எந்தத்தகவலும் இல்லை.

1976 பிறந்தது. ஜனவரி மாதம் 16-ம் தேதி திண்டுக்கல்லில் நடைபெற்ற தி. மு. க. பொதுக் கூட்டத்தில் கலந்து கொள்வதற்காக நான் திண்டுக்கல்லுக்குப்போய் இருந்தேன். இரவு 8 மணி அளவில் எனக்கு இலேசான நெஞ்சுவலி ஏற்பட்டது. கூட்டத்தில் அதிக நேரம் பேசாமல் இரவு 9 மணி அளவில் கூட்டத்தை முடித்துக் கொண்டு மதுரைக்குத் திரும்பி விட்டேன்.

பொழுது விடிந்தது. எனக்கு உடல்நிலை சீராகவில்லை. எனது மனைவிக்கு மருத்துவப் பயிற்சி இருந்ததால் எனது உடல் நிலையைப் பற்றிக் கவலைப்பட்டாள். காலை 4 மணியளவில் லேசான நெஞ்சுவலி ஏற்பட்டது. நேரம் செல்லச் செல்ல வலி அதிகமானது. உடனடியாக பத்மா கிளினிக்குக்கு போன் செய்து டாக்டர் சீனிவாசனை வரவழைத்தார். அவர் வருவதற்கும் எனக்கு மாரடைப்பு ஏற்படுவதற்கும் சரியாக இருந்தது. ஒரு யானை என் நெஞ்சில் ஏறி மிதிப்பதுபோல் இருந்தது. உரிய நேரத்தில் டாக்டர் வந்து விட்டதால் எனக்கு மயக்க ஊசி போட்டு உடனடியாக என்னை அவரது காரில் வைத்து பத்மா கிளினிக்குக்குக் கொண்டுபோய் விட்டார்கள். பத்து நாட்கள் சிகிச்சைப் பெற்றேன். இலேசான மாரடைப்பு, ஒழுங்காகவும் கொஞ்சமாகவும் உணவை உட்கொண்டால் சரியாகிவிடும் என்று டாக்டர் மேலும் பல ஆலோசனைகளைக் கூறினர்.

ஜனவரி 31-ம் நாள்வரை அங்கு இருப்பதாக ஏற்பாடு செய்து இருந்தேன். ஆனால் ஜனவரி 30-ம் தேதியே தமிழக அரசு கலைக்கப்பட்டு விட்டது. மருத்துவமனையிலிருந்த எனக்கு இந்தத் தகவல் அறிவிக்கப்பட்டது. அந்த நேரத்தில் நான் இதைப் பெரிதாக மதிக்கவில்லை. இரவு 11 மணியளவில் தல்லாகுளம் டி. எஸ். பி. ரவி ஆறுமுகமும் என்னைக் கைது செய்வதற்கு மற்றொரு டி. எஸ். பி. முகம்மது அலி அவர்களும் போலீஸ் படையோடு கிளினிக்குக்குள் நுழைந்தார்கள். அவர்கள் என்னைச் சந்தித்து உடல்நலம் விசாரிக்க வந்திருக்கிறார்கள் என்றுதான் முதலில் நினைத்தேன். அவர்களைச் சந்தித்த பிறகு தான் கொஞ்சம் கொஞ்சமாக அவர்கள் பேட்டியிலிருந்து என்னைக் கைது செய்ய வந்திருக்கிறார்கள் என்று தெரிந்து கொண்டேன். அவர்கள் எனக்கு அறிமுகம் ஆனவர்கள் என்பதால் எடுத்த எடுப்பில் சொல்வதற்குச் சங்கடப்பட்டார்கள் பிறகு பேச்சுவார்த்தை முடிந்தப் பின்னர் 'புறப்படலாமா' என்று கேட்டார்கள். ஆனால், டாக்டர். சீனிவாசன் அவர்கள், இந்தச் சூழ்நிலையில் என்னைச் சிறைக்கு அனுப்பமுடியாது, இன்னும் 10 நாட்களுக்கு அவர் ஓய்வு எடுக்க வேண்டும்; இங்கேயே அவர் இருக்கட்டும் அவருக்குத் தேவையான பந்தோபஸ்து ஏற்பாடுகளைச் செய்து கொடுங்கள் என்று டாக்டர் சொன்னார்.

உடனே டாக்டருடைய யோசனையை ஏற்றுத் தேவையான போலீஸ் படைகளை நிறுத்தி விட்டு அவர்கள் போய் விட்டார்கள்.

நகரில் முக்கியமான இடத்தில் கிளினிக் இருப்பதால் எனக்குக் காவல் இருந்த போலீஸ் படையின் நடைமுறை அந்த வட்டாரத்தில் ஒரு பரபரப்பை ஏற்படுத்தியது. இரண்டு நாட்கள் கழித்து மதுரை காவல்துறைக் கண்காணிப்பாளராக இருந்த திரு. ராஜசேகர்நாயர் அவர்கள் திடீரென ஒரு புதிய உத்தரவை போட்டார். அதன்படி அரசினர் மருத்துவமனைக்கு நான் மாற்றப்பட்டேன், மிசாவின் கொடுமை ஆரம்பமானது.

என் மனைவி, மக்கள் என்னைப் பார்ப்பதற்கு முன் அனுமதி பெற வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டது. 12 நாள் நான் அரசினர் மருத்துவமனையில் இருந்தேன்.

பிறகு நானாகவே என்னைச் சிறைக்குக் கொண்டுபோய் விடுங்கள் என்று அதிகாரிகளைக் கேட்டுக் கொண்டு ஜனவரி மாதம் கடைசியில் நான் மதுரை சிறைக்குப்போய் விட்டேன். ஏற்கெனவே கைது செய்யப்பட்ட எனது நண்பர்கள் முன்கூட்டியே சிறைச்சாலைக்குப் போய் இருந்தார்கள். சுமார் எண்பதுபேர் மதுரைச் சிறைச்சாலையில் மிசாக் கைதியாக இருந்தோம். மிசா என்றால் கொடியவர்களை வதைக்கும் சட்டம் என்ற நினைப்பு அதிகாரிகளுக்கு இருந்தது. ஆதலால் அவர்கள் முதலில் எங்களைச் சரியாகக் கவனிக்கவில்லை. சராசரி வசதிகள் கூட எங்களுக்கு மறுக்கப்பட்டது. தூக்குத் தண்டனைக் கைதிகளை அடைக்கும் அறையில் எங்களை அடைத்து வைத்தார்கள். அறைகளில் விளக்குகள்கூட இல்லை. சிங்கம், புலிகளைப்போல் நாங்கள் நடத்தப்பட்டோம். நான் உடல் நலம் இல்லாததால் உப்பில்லாத கஞ்சியைச் சாப்பிட்டு விட்டு உடல் நலத்தைப் பேணிக் காப்பாற்றிக் கொண்டு இருந்தேன்.

எங்களுக்கு என்று ஒரு தனி இடத்தைப் பிரித்துக் கொடுப்பதற்காகச் சிறைக்கண்காணிப்பாளர் திரு. பெருமாள் தேவர் அவர்கள் மெத்தவும், சிரமப்பட்டு சிறைக்குள்ளேயே ஒரு சிறையாகயிருக்கும் 9-ம் பிளாக்குக்கு அனுப்பி வைத்தார். நாங்கள் 9ம் பிளாக்கில் ஒரு குடும்பமாக, எண்பது பேரும் நாட்களைக் கடத்திவந்தோம்.

ஒவ்வொரு நாளும் மத்திய, மாநில போலீஸ் அதிகாரிகள் எங்களைப் பார்ப்பதற்காகவும், எங்களுக்குள் குழப்பங்கள் உண்டாக்குவதற்காகவும் முயற்சி எடுத்து வந்தார்கள்.




மன்னிப்பு எழுதிக் கொடுத்தால் மறுநாளே விட்டுவிடுவோம் என்று ஆசை வார்த்தை காண்பித்துப் பலரிடம் மன்னிப்பு எழுதி வாங்கினார்கள். அவ்வாறு மன்னிப்பு எழுதி வாங்கியது ஒருவருக்கொருவர் ரகசியமாக இருந்தது. திடீரென்று ஒரு நாள் ''சுதேசமித்திரன்'' பத்திரிக்கையில் மன்னிப்பு எழுதிக் கொடுத்தவர்களின் பட்டியலைப் பார்த்தேன். எங்களுக்கு எல்லாம் அதிர்ச்சியாகவும், குழப்பமாகவும் இருந்தது. மன்னிப்பு எழுதிக் கொடுக்காதவர்களில் சிலர் ஏழைத் தொண்டர்கள் என்னிடம் வந்து நாங்களும் எழுதிக் கொடுக்கிறோம் என்று அனுமதி கேட்டார்கள். நான் அவர்களுக்குச் சரியாகவே பதில் சொன்னேன். இதுவரை எழுதிக் கொடுத்தவர்கள் யாரும் விடுதலை செய்யப்படவில்லை. அவர்கள் விடுதலை செய்யப்பட்ட பிறகு, உங்களால் சிறைக்கொடுமை தாங்க முடியாதுபோனால் நீங்கள் தாராளமாக எழுதிக் கொடுங்கள்—என்று நான் அவர் களிடத்தில் சொன்னேன். மன்னிப்பு எழுதிக் கொடுத்தவர்கள் விடுதலை செய்யப்படாததால் மதுரைச் சிறையில் மன்னிப்பு எழுதிக் கொடுப்பது நின்று விட்டது.

நாங்கள் இருக்கும் 9-ம் பிளாக்கில் 5 சிறிய கட்டிடங்கள் உண்டு. அதை நாங்களே பிரித்துக் கொண்டு ஒரு கட்டிடத்தில் இருபது பேர் வீதம் தனிக்குடித்தனம் ஆரம்பித்து விட்டோம். முதல் ஒரு மாத காலம் நாங்கள் மனைவி, மக்களைப் பார்ப்பதற்கு அனுமதி கிடைக்கவில்லை. சர்க்கார் அதிகாரிகளுக்கே மிசாவின் சட்டதிட்டங்கள் சொல்லித்தரப்படவில்லை. ஆகையால் அவர்கள் எங்களைச் சந்திப்பதற்கு யாரையும் அனுமதிக்க வில்லை. பிறகுதான் கொஞ்சம் கொஞ்சமாக விதிமுறைகள் சிறைச்சாலைக்குத் தெரிய வந்தன. வாரம் ஒருமுறை மனைவி, மக்களைப் பார்க்கலாம் என்றும், மற்றவர்களைப் பார்க்க அனுமதி அளிக்க முடியாது என்றும் சிறை அதிகாரிகள் அறிவித்தார்கள். கொஞ்சம் கொஞ்சமாக எங்களுக்குச் சிறை வாழ்க்கை மாமூல் ஆகிவிட்டது.

வெளியே என்ன நடக்கிறது என்று எங்களுக்குத் தெரிய வில்லை. கட்சி என்ன ஆயிற்று என்றும் எங்களுக்குப் புரியவில்லை. கலைஞர் தினசரி ''முரசொலி'' பத்திரிக்கையில் எழுதி வந்த கடிதம்தான் எங்களுக்கு ஊன்றுகோலாக இருந்தது.

தினசரி அதைப்படித்த பிறகுதான் சோர்வுகள் எங்களை விட்டு அகலும். தினசரி ''முரசொலியில்'' பார்த்து மற்ற வர்களுக்குப் படித்துக் காண்பித்து உணர்வுகள் மழுங்கிப் போகாமல் ஒருவருக்கொருவர் பார்த்துக்கொண்டோம்.

தமிழ்நாட்டில் உள்ள எல்லாச் சிறைச்சாலைகளிலும் தி. மு. க. நண்பர்கள் 'மிசா'க் கைதிகளாக இருந்தார்கள். ஐநூறுக்கும் மேற்பட்ட நண்பர்கள் மிசாவின் தாக்குதலுக்கு ஆளானார்கள். யார் யார் எந்த எந்தச்சிறையில் இருக்கிறார்கள் என்பது இரண்டு மாதங்கள் கழிந்த பிறகுதான் எங்களுக்குத் தெரிந்தது. இந்த இடைக்காலத்தில் இந்திரா காந்தி தென் மாவட்டங்களுக்கு வந்தார். கோவில்பட்டி அருகே ஒரு இடத்தில் பேசும்போது என்னுடைய சர்வாதிகாரத்தைப் பயன் பயடுத்தி (I will crush D. M. K. with all my Commands) நான் தி.மு.கவை அழிக்காமல் விடமாட்டேன் என்று பயமுறுத்தினர். இந்த மிரட்டலை எல்லாப் பத்திரிக்கைகளும் பெரிதாக வெளியிட்டிருந்தன. இதைச்சிறைச் சாலையில் படித்த நண்பர்கள் சிலர் சிறிது அஞ்சினார்கள். ஜனதாக் கட்சியைச் சேர்ந்த மதுரை வக்கீல் விஸ்வநாத ஐயர் அவர்கள் நமக்கு இனி விடுதலையே இல்லை என்று பயமுறுத்திவிட்டார். இருந்தாலும் நாட்கள் செல்லச் செல்ல தொண்டர்களுக்கு அச்சம் குறைந்து இந்திராகாங்கிரஸ் ஆட்சி நிலைக்காது என்ற எண்ணம் பிறந்தது.

மார்ச் மாதம் முதல் வாரத்தில் 4-ம் பிளாக்கில் இருந்த சாத்தூர் பாலகிருஷ்ணன் திடீரென்று மாரடைப்பால் காலமாகிவிட்டார். யாரும் எதிர்பார்க்கவில்லை. தலைவருக்கு நெருக்க மாணவர் கொள்கையில் உறுதிப்பாடு கொண்டவர் தோழர் பாலகிருஷ்ணன்.

மறுநாள் பாலகிருஷ்ணன் சடலம் சாத்தூருக்குக் கொண்டு போகப்பட்டது. விடியற்காலை பத்திரிகைச் செய்தியைப்படித்து நாங்கள் வியப்படைந்தோம் பாலகிருஷ்ணன் சவ ஊர்வலத்தில் தலைவர் கலைஞர் கலந்துகொண்டதாகச் செய்தியைப் படித்தோம். தொண்டர்கள் நிமிர்ந்து உட்கார்ந்தார்கள்.

இரண்டு நாட்கள் கழித்து எனது குடும்பத்தினர் என்னைப் பார்க்க வந்தார்கள்.

கலைஞர் சாத்தூர் போய்விட்டுத் திரும்பும்போது எங்கள் வீட்டுக்கு வந்து சாப்பிட்டுவிட்டு ஓய்வு எடுத்துக் கொண்டார் என்றும், கலைஞருக்கு கோவை. மு. கண்ணப்பன் காரோட்டியாக வந்தார் என்றும் கூறியதைக்கேட்டு எனக்கு விடுதலை வந்து விட்டதுபோன்ற உணர்ச்சி பிறந்தது.

நான்கு மாதங்களுக்குப் பிறகுதான் வெளிச் சிறைச்சாலையிலிருந்து கடிதங்கள் வந்தன. கடிதங்கள் வந்தாலும் அதில் பொதுவான விஷயங்கள் தான் எழுதப்பட்டு இருந்தன. நாங்கள் கேள்விப்பட்டது எல்லாம் எந்தக் கடிதத்திலும் வரவில்லை.

ஒரு நாள் சிறை அதிகாரிகள் சிலர் என்னையும், மற்றும் சில முக்கியஸ்தர்களையும் தமது அறைக்கு வரும்படி அழைத்திருந்தார்கள். ஏதோ முக்கியமான விஷயமாக இருக்கும் என்று நாங்கள் ஆவலோடு சென்றோம். அவர்கள் சொன்னது எங்களுக்கு அதிர்ச்சியைத் தந்தது.

சென்னைச் சிறைச்சாலையில் மு.க. ஸ்டாலின் கொடுமையாகத் தாக்கப்பட்டதாகவும், ஆற்காடு வீராச்சாமிக்கு கொடுத்த அடிகளால் ஒரு காது செவிடு ஆகிவிட்டதாகவும் திரு. ஆசைத்தம்பி உட்பட அனைவருக்கும் சரியான அடி என்றும் சிறை அதிகாரிகள் எங்களிடம் சொன்னார்கள். ஆனால் நாங்கள் ஏற்கெனவே கேள்விப்பட்டதும் இந்தத் தகவல்கள்தான். இப்போது, அது ஊர்ஜிதம் ஆகிவிட்டது. இந்தச் செய்தி எங்களுடைய பிளாக் முழுவதும் பரவி ஒவ்வொரு கட்டிடத்திலும் மோதி எதிரொலித்தது. மதுரைச் சிறைச்சாலையில் அதுவரை எந்த அசம்பாவிதமும் நடைபெறவில்லை. சிறை அதிகாரிகளுக்கும்

எங்களுக்கும் சுமுகமான உறவு இருந்தது. நாங்களும் சட்டத் திற்குப் புறம்பாக நடந்து கொள்ளவில்லை. அவர்களும் சலுகைகள் வழங்க முயற்சி செய்யவில்லை. இப்படியே நாட்கள் ஓடிக்கொண்டு இருந்தன.

இதற்கிடையில் அமைச்சராக இருந்த செ. மாதவன் அவர்கள் சிறையில் இருந்த நண்பர்களின் இல்லங்களுக்குச் சென்று ஆறுதல்கள் கூறுவதற்குப் பதிலாக எங்கள் மனைவி மக்களிடத்தில் மிரட்டல்களை அள்ளி வீசிவந்ததாகச் செய்திகள் கிடைத்தன. முரசொலி படிக்கக்கூடாது என்றும் கலைஞரைப் பின்பற்றினால் ஆயுள் முழுவதும் சிறைவாசம்தான் என்றும் அவர் அச்சுறுத்தி வந்திருக்கிறார்.

ஜூன் மாதம் ஒரு நாள் காலை 10 மணியளவில் எனதுதம்பி திருஞானம் என்னைப்பார்ப்பதற்காக வந்திருந்தான். வந்தவன் நல்ல தகவல்களைச் சொல்லவில்லை. நேற்று இரவு 10 மணி யளவில் என் தகப்பனார் திரு.சொக்கலிங்கனார் அவர்கள் இறந்து விட்டதாகச் சொன்னார். உடனடியாகப் பரோலில் வரக்கூடிய வாய்ப்பு இருக்காது என்று நினைத்தேன். என் தம்பியிடம்-நீ வீட்டிற்குப் போய்த் தலைமைச் செயலாளர் கார்த்திகேயன் அவர்களுக்கு இந்தத் தகவலை தொலைபேசிமூலம் தெரிவித்துவிடு என்று சொன்னேன். நான் சொன்னபடி அவன் சொல்லி யிருக்கிறான். நாங்கள் வியப்புறும் வகையில் அன்று மாலையே நான் இரண்டு நாள் பரோலில் வெளிவர அனுமதி கிடைத்தது. நான் மாலை நான்கு மணிக்கு என்னுடைய தகப்பனாருடைய சடலம் இருந்த கீழப்பூங்குடி என்ற கிராமத்திற்கு விரைந்து சென்றேன். ஊரில் ஒரே பரபரப்பு.

போலீஸ் பந்தோபஸ்தோடு பிரேத ஊர்வலத்தில் கலந்து கொண்டேன். இரண்டு நாள் மதுரையில் தங்கிவிட்டு மூன்றாவது நாள் சிறைச்சாலைக்குப் போய்விட்டேன். என் சிறைவாசத்தில் மறக்க முடியாத சம்பவம் இது.

அந்த நேரத்தில் நாடாளுமன்ற உறுப்பினர் தா. கிருஷ்ணன் என்னை என் இல்லத்தில் சந்தித்து என்னிடம் துக்கம் விசாரித்தார். அப்போது அவர் சில முக்கிய விஷயங்களைச் சொன்னார். அவைகளில் மிக முக்கியமானது-தலைவர் கலைஞர் அவர்களின் தூதுவராக அவர் ஷேக் அப்துல்லாவைச் சந்தித்ததுதான்.

"தமிழ்நாட்டில் 1976 ஜனவரி 31-ம் தேதி முதல் இன்று வரை நடந்துவரும் அரசாங்கக் கெடுபிடிகள், தொண்டர்கள் அனுபவித்து வரும் தொல்லைகள், வருமானவரிச் சோதனைகள்

பொய்வழக்குகள் எல்லாம் இந்திரா காந்திக்கு தெரிந்துதான் நடைபெறுகிறதா? அல்லது அவருக்குத் தெரியாமல் கவர்னரின் ஆலோசகர்கள் தன்னிச்சையாகச் செயல்படுகிறுர்களா? இது பற்றி இந்திரா காந்தியின் கவனத்திற்குக் கொண்டு போக முடியுமா?'' என்பதே தலைவர் கலைஞர் அவர்கள் கிருஷ்ணன் மூலம் ஷேக் அப்துல்லாவுக்கு அனுப்பிய செய்தி.

அதற்கு ஷேக் அப்துல்லா சொன்ன பதில்—''தமிழ் நாட்டில் நடைபெறும் கெடுபிடிகள் அனைத்தும் இந்திரா காந்திக்குத் தெரியும். அவரது தூண்டுதலின் பெயரில்தான் நடைபெறுகிறது. கருணாநிதி எதற்கும் பயப்படவேண்டிய தில்லை. கொடுமைகள் நீண்டகாலத்திற்கு நிலைக்காது. நான் பனிரெண்டு ஆண்டுகள் சிறையில் இருக்கவில்லையா? இந்திரா காந்தி கெஞ்சினுல் மிஞ்சுவார்; மிஞ்சினுல் கெஞ்சுவார். கருணாநிதியைப் பொறுத்தவரை,தெற்கே ஒரு ஷேக் அப்துல்லா இருப்பதாகத்தான் நான் நினைத்திருக்கிறேன். இதுதான் எனதுபதில் இதுபற்றி இந்திரா காந்தியிடம் முறையிடத் தேவையில்லை'' என்று சொல்லியனுப்பினுர்.

(பிற்காலத்தில் அவர் சொன்னபடிதான் நடந்தது. தமிழ் நாட்டில் நடைபெற்ற அத்துமீறல்களுக்கெல்லாம் கடற் கரையில் இந்திரா காந்தி மன்னிப்புக் கேட்டார்)

கொஞ்சம் கொஞ்சமாக மிசாவின் கொடுமைகள் தணிய ஆரம்பித்தன. சிறையில் வசதிகள் கிடைத்தன! மின்சார விசிறிகள் வழங்கப்பட்டன. ரேடியோ வைத்துக் கொள்ளலாம் என்று அனுமதி கிடைத்தது. புலால் உணவு கிடைத்தது. ஆனுல் இண்டர்வியூ விதிமுறை மட்டும் மாறவில்லை

ஒரு நாள் சிறை அதிகாரி என்னைத் தனியாக அழைத்தார் உங்களைப் பற்றியேதான் தினசரி சி. ஐ. டிக்கள் விசாரிக்கி றார்கள் என்றார். மற்றவர்கள் மன்னிப்பு எழுதிக் கொடுப்பதை நீங்கள் தடுப்பதாக சி. ஐ. டிக்கள் கருதுகிறார்கள்—என்றார். ஆனுல் நான் பதில் ஏதும் சொல்லவில்லை; அமைதியாக இருந்தேன். இப்படியே அக்டோபர் வரை நாட்கள் ஓடின.

சிறையிலிருந்த நண்பர்கள் மாலையில் வளைபந்து (டென்னி காய்ட்) விளையாடுவது, வாலி பால் விளையாடுவது, காலை நேரத்தில் சடுகுடு ஆடுவது இதுபோல் தினசரி நேரத்தைக் கழித்தனர். ஆனுல் நான் மட்டும் ஒரு அறையில் ஒதுங்கியிருந்து நாவல்கள் எழுதினேன்.

# மதுரையிலிருந்து வேலூர்




நவம்பர் 19ம் தேதி பிறந்தது. பிரதமர் இந்திரா காந்தியின் பிறந்த நாள் வந்தது. அன்று மாலை நான்கு மணியளவில் சிறை அதிகாரி என்னைக் கூப்பிட்டு அனுப்பினர். இருவரும் தனியாக ஒரு இடத்தில் அமர்ந்தோம்.

மனதைக் கையில் பிடித்துக் கொள்ளுங்கள். நான் சொல்வது உங்களுக்கு அதிர்ச்சியைத் தரலாம். இது என்னால் ஏற்பட்ட சிரமம் அல்ல. நான் ஏற்கெனவே தங்களிடம் சொன்னபடி இது சி. ஐ. டிக்களின் தூண்டுதலால் வந்தது என்று சொன்னர்.

நான் கலங்கவில்லை.

''முதலில் உங்கள் வீட்டுக்குப் போன் செய்து உங்கள் மனைவி, மக்களை வரச் சொல்வோம்'' என்றார்.

நான் ஒன்றும் பயப்படவில்லை.

''நீங்கள் சொல்வதைப் பார்த்தால் எனக்குத் தூக்குத் தண்டனையா வந்து விட்டது'' என்று கேட்கத் தோன்றுகிறது என்றேன். அதெல்லாம் ஒன்றுமில்லை. உங்களை மட்டும் இந்தச் சிறைச்சாலையில் இருந்து வேலூர் சிறைச்சாலைக்கு மாற்றி இருக்கிறர்கள். இன்று இரவு 8 மணிக்கு உங்களை பாண்டியன் எக்ஸ்பிரஸ் மூலமாக அனுப்பிவிட வேண்டுமென்று உத்தரவு வந்திருக்கிறது'' என்றார் சிறை அதிகாரி.

அரை மணி நேரத்திற்குள்ளாக என் மனைவி, குழந்தைகள் தமயந்தி,பாமினி ஆகியோர் சிறைச்சாலைக்கு வந்துவிட்டார்கள் அவர்களுக்கு விஷயத்தை சொன்னேம். என் மனைவி பிள்ளைகள் கண் கலங்கினர் இனி மேல் என்னைப் பார்க்க முடியாது என்று அவர்கள் நினைத்தார்கள். நானும் அப்படித்தான் நினைத்தேன் சூழ்நிலை அப்படி!

சிறை அதிகாரிகளின் பேச்சிலிருந்து எனக்கு ஒரு சந்தேகம் வந்தது. ஒரு வேளை நான் திரும்பாமலேயே போய் விட்டால் என்ன செய்வது என்று சிந்திக்க ஆரம்பித்து விட்டேன்.

இதுஒரு அசாத்திய கற்பனைதான். இருந்தும் அப்படி எனக்கு ஒரு யோசனை தோன்றிற்று. என்னோடு சிறையில் இருந்த வழக்கறிஞர் விஸ்வநாதய்யரை அழைத்து வந்து என் சொத்துக்களை உயில் எழுதத் தீர்மானித்தேன் அவரும் ஒரு மணி நேரத்திற்குள்ளாக உயிலைத் தயாரித்துக் கொடுத்தார். முக்கியமான இரண்டு நண்பர்கள் அதில் சாட்சிக்கையெழுத்துப் போட்டார்கள். நானும் கையெழுத்து போட்டு என் மனைவியிடம் கொடுத்து அனுப்பி விட்டேன். ஒரு மணி நேரத்தில் மிகுந்த துயரத்தோடு அவர்கள் விடைபெற்றுக்கொண்டு போய்விட்டார்கள். நான் வேகமாகப் பெட்டி, படுக்கைகளைத் தயார் செய்து என்னுடைய நண்பர்களிடம் விடைபெற்றுக் கொண்டு பிளாக்கை விட்டு வெளியே வந்தேன். என்னோடு சிறை அதிகாரிகளும், தி.மு.க. நண்பர்கள் அனைவரும் ஒன்று திரண்டு கலங்கிய கண்களோடு சிறை வாசல் வரை வந்தார்கள். கழகத் தோழர்கள் அனைவரும் கண்ணீரைக் கொட்டினர். என்னாலும் தாங்கமுடியவில்லை. எனக்கும் கண்கள் கலங்கின. கடைசி முறையாகநண்பர்களைப் பார்ப்பதுபோல ஒரு உணர்வு!

என்னை அழைத்துச் செல்வதற்கு ஒரு டி.எஸ்.பியும் இரண்டு சப்-இன்ஸ்பெக்டர்களும், ஆறு கான்ஸ்டபிள்களும் வந்தார்கள். நான் அவர்களோடுபுறப்படுவதற்கு முன்பு எனக்கு விலங்கு மாட்ட வேண்டுமென்று சொன்னார்கள். மதுரை சிறை அதிகாரி அதற்கு உடன் படவில்லை. அவருக்கு விலங்கு அவசியம் இல்லை என்று சொன்னார். அடுத்து என் கையிலிருந்த மருந்துப் பெட்டியை அந்தப் போலீஸ் அதிகாரி தன் வசப் படுத்திக் கொள்ள முயற்சி செய்தார். நான் ஒரு வேளைக்கு ஐந்து மாத்திரைகள் சாப்பிட வேண்டும். அது என் வசமே இருக்கட்டும் என்று சொன்னேன். அதற்கு அதிகாரி மறுத்து விட்டார். நாங்கள் உங்களை வேலூர் சிறைச்சாலைக்குக் கொண்டு சேர்க்கும் வரை நீங்கள் எந்த மாத்திரையும் சாப்பிடக் கூடாது. நாங்கள் கொடுக்கும் உணவை மட்டும் தான் சாப்பிட வேண்டும் என்று அச்சுறுத்தினர். நான் அதற்கும் இணக்கம் தெரிவித்தேன்.

இரவு 7 மணிக்கு, மதுரை ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்து விட்டோம். ஸ்டேஷனில் போலீஸ் கெடுபிடி அதிகமாக இருந்தது. எனக்கு என்று ஒரு தனி கம்பார்ட்மெண்ட்டை ஒதுக்கியிருந்தார்கள். சுதந்திரமாக உலாவிய மதுரை ஜங்ஷனில் நான் ஒரு கைதியாக அன்றுதான் முதன் முதலாக அழைத்துச் செல்லப்பட்டேன். எனக்குத் தெரிந்த நண்பர்கள் எல்லாம் பயந்து, ஒதுங்கிக் கொண்டார்கள். அப்போது மாநில அளவில் ஒரு பெரிய போலீஸ் அதிகாரி மப்டியில் வந்து

கொண்டிருந்தார். அவரைப் பார்த்து நான் வணக்கம் சொன்னேன். அவரும் என்னை நிறுத்தி-உங்களை எங்கே கொண்டு போகிறார்கள் என்று கேட்டார். உடனே என்னை அழைத்துச் சென்ற அதிகாரிகளுக்கு அந்தப் பெரிய போலீஸ் அதிகாரியைத் தெரியாது. ஒரு அதிகாரி கோபம் அடைந்து அந்தப் போலீஸ் அதிகாரியைப் பார்த்து ஒரு மிசா கைதியோடு எப்படிப் பேசலாம் என்று அரட்டினார். உடனே அந்தப் பெரிய அதிகாரிக்குக் கோபம் வந்து விட்டது. "you fool I am D I.G." என்றார் பதிலுக்கு! உடனே என்னைக் கொண்டு சென்ற அதிகாரி பயந்துபோய் அவருக்குச் சல்யூட் அடித்தார்.

இரவு இரண்டு மணிக்கு நாங்கள் விழுப்புரத்தில் இறங்கி விட்டோம். நாங்கள் அங்கிருந்து வண்டி மாறி வேலூருக்குப் போக வேண்டும். விழுப்புரம் பிளாட்பாரத்தில் வடக்குக் கோடியில் என்னைப்போல் ஒரு கைதியும், பத்துப் போலீசாரும் நின்று கொண்டு இருந்தார்கள். எனக்கு, தூரத்தில் இருந்து பார்க்கும் பொழுது அவர்களை அடையாளம் தெரியவில்லை. நெருங்கிப் போய் பார்க்கவும் அனுமதி கிடைக்கவில்லை. அவர்களும் வேலூருக்குத்தான் வரக்கூடும் என்று யூகித்தேன். மூன்று மணிக்கு நாங்கள் காட்பாடி ரயிலில் ஏறினோம். காலை 9 மணிக்கு வேலூர் ஸ்டேஷனில் இறங்கினோம். எனக்கு ஆச்சரியமாக இருந்தது. அதே ரயிலில் என்னைப் போல அழைத்து வரப்பட்டவர் தாழை. மு. கருணாநிதி தான்! அவரை திருச்சியிலிருந்து என்னைப்போல வேலூருக்கு மாற்றி இருக்கிறார்கள். இரண்டு பேரும் போலீசார் புடைசூழ தனித்தனிக் கும்பல்களாக நின்றோம். ஒருவருக்கொருவர் பேசுவதற்கு அனுமதிகிடைக்கவில்லை! எங்களைச் சிறைக்கு அழைத்துச் செல்வதற்குஒரு போலீஸ் வாகனம் வந்தது. அதில் ஏறி உட்கார்ந்த பிறகுதான் நாங்கள் கட்டிப்பிடித்துக் கொண்டோம்.

காலை 11 மணிக்கு நாங்கள் சிறைவாசலுக்குள் நுழைந்து விட்டோம். எங்களைச் சிறை கேட்கீப்பர் ஜட்டியோடு நிறுத்தினார். நான் சிவப்பு ஜட்டி அணிந்து இருந்தேன். வேலூர் சிறைச் சாலையில் முக்கியமான நக்ஸலைட்டுகள் அடைக்கப் பட்டு இருந்ததால் என்னைச்சிவப்பு ஜட்டியுடன் பார்த்த கேட் கீப்பர் நீங்கள் இருவரும் நக்ஸலைட்டுகளா? என்று கேட்டார். இல்லை நாங்கள் தி. மு. க. என்று சொன்னோம் "ஜட்டியை பார்த்து அப்படிக் கேட்டேன்"—என்று வருத்தப்பட்டார். 10 நிமிஷத்திற்குள்ளாக நானும், தாழை. மு. கருணாநிதியும் சிறைவாசலில் நிற்கும் செய்தி சிறை முழுவதும் பரவிவிட்டது.

ஏற்கனவே உள்ளே அடைக்கப்பட்டிருந்த துரை முருகன் வேகமாகச் சிறை உள் முற்றத்திற்கு ஓடி வந்தார். என்னைப் பார்த்ததும் அவருக்கு ஒரு தைரியம், அவரைப்பார்த்ததும் எங்களுக்கு ஒரு புதியதெம்பு!

நாங்கள் எல்லோரும் ஒன்றாம் பிளாக்கில் சேர்ந்து இருந்தோம். வேலூர் சிறைச்சாலையில், சிறைவிதி முறைகளைத் தவறவிடாமல் பின்பற்றுவார்கள். வேலூர் சிறைச் சாலையை மதுரைச் சிறையோடு ஒப்பிடும்போது மதுரையை நம் சொந்த வீடு என்று நினைக்கத் தோன்றும். வேலூர் சிறைச்சாலை சரித்திரப் பிரசித்திப் பெற்றது. ராஜாஜி, தேவர், அறிஞர் அண்ணா போன்ற தலைவர்கள் அந்தச் சிறைச்சாலையில் பலதடவைகள் காலத்தைக் கழித்து இருக்கிறார்கள். சுமார் மூவாயிரம் பேர் தாராளமாக வசிக்கக் கூடியது வேலூர் சிறைச்சாலை. கோட்டை வாசலை பார்க்க முடியாது. அவ்வளவு பெரியது. புத்தக சாலை ஒன்று இருக்கிறது. பொழுது போக்குவதற்காக நாங்கள் அங்கு போவது உண்டு.

சிறைச்சாலையின் கேட்டில் C. P. பிளாக் என்று ஒன்று இருக்கிறது. CP என்றால் (Clossed Prison) எப்போதும் மூடப் பட்டிருக்கும் உட்சிறை என்ற பொருள். அங்குதான் 1962-ல் அறிஞர் அண்ணாவையும் அடைத்து இருந்தார்களாம். அந்த இடம் எங்களுக்கு ஒரு புண்ணியஸ்தலமாக இருந்தது. ஆனால் அங்கே எங்களை அனுமதிக்க மாட்டார்கள். ஒரு நாள் சென்னையிலிருந்து மணி என்ற மிசா கைதி மாற்றப்பட்டு வேலூர் சிறைச் சாலைக்கு வந்தார். அவர் ஒரு திடுக்கிடும் தகவலைச் சொன்னார்.

கழகத்தின் கொள்கை பரப்புச் செயலாளர் சிட்டிபாபு சிறைச்சாலையில் இறந்து விட்டார் என்பதே அந்தச்செய்தி. 'எப்படி இறந்தார்'' என்று கேட்டோம். சிறைச்சாலைக்கு வந்த புதுதில் அங்கே பணியாற்றிய சிறை அதிகாரிகளின் தூண்டுதலின் பேரில் தி. மு. க. கைதிகள் கொடுமையாகத் தாக்கப் பட்டிருக்கிறார்கள். அவர்களில் சிட்டிபாபுவும் ஒருவர். அடி தாங்காமல் இரத்தக் காயம் ஏற்பட்டு சிறை மருத்துவமனையில் அவதிப்பட்டு இருக்கிறார். அவர் கடைசிவரை குணம் ஆகவில்லை. சிறைச்சாலையிலேயே இறந்து போனார். வேலூர் சிறை முழுவதும் இந்தச் செய்தி பரவியது. எங்களால் எதுவும் செய்வதற்கில்லை. ஒருநாள் அனுதாப உண்ணாவிரதம் இருந்தோம். அதோடு சரி. வேறு வழியில்லை.

இதைத் தொடர்ந்து நாங்கள் பயப்படும்படியாகச் சில தகவல்கள் எங்களுக்குக் கிடைத்தன. சென்னை சிறைச்சாலையில் தி. மு க. கைதிகளை அடித்த அதே அதிகாரி, வேலூர் சிறைச் சாலைக்கு மாற்றி வந்திருப்பதாக எங்களுக்கு செய்தி கிடைத்தது. அது உண்மைதான். வித்தியாசாகர் என்கிற அந்தச் சிறை அதிகாரி வேலூர் சிறையின் கண்காணிப்பாளராக வந்து சேர்ந்தார். சிறையே 'கப்சிப்' என்று ஆகிவிட்டது. ஒவ்வொரு செவ்வாய்க்கிழமை காலையிலும் அவர் சிறை முழுவதும் ரவுண்டு வருவார். அப்போது எல்லோரையும் பற்றி விசாரிப்பார். திடீரென்று ஒரு நாள் என்னை அழைத்து வரும்படி ஆள் அனுப்பினார். எனக்கு மனம் துணுக்குற்றது; இருந்தாலும் மனதைத் திடப்படுத்திக் கொண்டு நான் அவரை அறையில் போய்ப் பார்த்தேன். அவர் என்னிடத்தில் பேசும்போது தேன் ஒழுகப் பேசினார். ''உங்களுக்கு மாரடைப்பு ஏற்பட்டிருப்பதாக சிறை டாக்டருக்கு குறிப்பு வந்திருக்கிறது. ஆகையால் உங்க-ளுக்குத் தேவையான மருந்துகளையும், வசதிகளையும் எல்லாம் கேட்டு பெற்றுக்கொள்ளலாம்'' என்று சொன்னார். எனக்குத்தலை சுற்றல் நின்றது. அதன்பிறகு வாரம் ஒருமுறை எனக்கு E.C.G. பார்த்தார்கள். ரத்தக் கொதிப்பை அடக்க மாத்திரைகள் வழங்கப்பட்டன. வேலூர் சிறைக்குச் சென்ற ஒரு மாதத்திற்குப் பிறகு நானும் நண்பர் துரைமுருகனும் சிறை வாசகச்சாலைக்குச் சென்றோம். அப்போது ஒரு சுவையான சம்பவம் நடந்தது. நானும் அவரும் புத்தகச் சாலையில் நல்ல புத்தகத்தைத் தேர்ந்து எடுத்தோம்.

வாசகச் சாலையிலிருந்து நடந்துவரும் போது நண்பர் துரைமுருகன் ஒரு புத்தகத்தைப் புரட்டிக்கொண்டே ஒரு கேள்வியைக் கேட்டார். ''உங்க ஊர்ப்பக்கம் இரணியூர் என்கிற கிராமம் இருகிறதா?'' என்று கேட்டார். அதற்கு நான் ''அப்படி ஒரு கிராமம் இருக்கிறது. முப்பது வருஷங்களுக்கு முன்பு அந்த ஊரில் நாகரத்தினம் என்கிற கொள்ளைக்காரன் ஒருவன் இருந்தான். கொள்ளையைத் தவிர கொலை ஏதும் செய்யாத அவனை ஒரு கொலை வழக்கில் சிக்கவைத்து ஆயுள் தண்டனைக் கைதியாக்கி விட்டார்கள். இப்போதுதான் அவன் விடுதலையாகி இருக்கிறான். வெளியில் வந்த பிறகு அவன் கொள்ளையடித்த நகைகளைப் புதைத்து வைத்திருந்த இடத்தைத் தேடிக் கொண்டு இருக்கிறான். அவனால் அடையாளம் கண்டு கொள்ளமுடியவில்லை'' என்று நான் சொன்னேன். துரைமுருகன் விழிப்படைந்து அவர் கையில் வைத்திருந்த புத்தகத்தை என்-னிடத்தில் காண்பித்தார். அந்தப் புத்தகத்தில் நாகரத்தினம் கைதி எண் 6219, இரணியூர், திருப்புத்தூர் தாலுக்கா, இராமநாதபுரம் ஜில்லா என்று ஒரு குறிப்பு எழுதப்பட்டு இருந்தது.

நண்பர் துரைமுருகன் அதைப் படித்துவிட்டுத்தான் என்னிடம் கேட்டிருக்கிறார். நான் பதில் சொன்னதும் மகிழ்ச்சியும், ஆச்சரியமும் அடைந்தார்.



மிசாவின் இரண்டாவது கட்டமாக அதனுடைய பிடி தளர்ந்து கொண்டே வந்தது. பலருக்குப் பரோல் வழங்கப்பட்டது. கொஞ்சம் கொஞ்சமாக பரோலில் போகும் கைதிகளின் எண்ணிக்கை அதிகமாயிற்று. முக்கியஸ்தர்களுக்கும், தலைவர் கலைஞருக்கும் நெருங்கியவர்களுக்கு மட்டுமே பரோல் மறுக்கப்பட்டது. நான் என்னை மருத்துவப் பரிசோதனைக் குழுவிடம் (Medical Board) பரிசோதனைக்கு அனுப்ப வேண்டும் என்றேன். உடனே பரிசோதனைக்கு எனக்கு அனுமதி கிடைத்தது. எல்லோரும், நான் விடுதலை ஆகிவிடுவேன் என்று நினைத்தார்கள். ஆனால் மருத்துவக் குழு (Medical Board) எனக்கு உடல் நலம் சரியாக இருப்பதாகக் கூறி என்னுடைய கோரிக்கையை நிராகரித்து விட்டது.

நான் ஏற்கனவே குறிப்பிட்ட (Clossed Prisoners) பகுதியில் திரிபுராவைச் சேர்ந்த இடது கம்யூனிஸ்ட் கட்சித் தலைவர் நிருபன்சக்ரவர்த்தியை கொண்டுவந்து அடைத்தார்கள். பலத்த பாதுகாப்புப் போடப்பட்டு வந்தது. அவரை வெளியே கொண்டு போவதற்குப் போலீஸ் லாரியே உள்ளே வந்து அவரை ஏற்றிக் கொண்டு போவது வழக்கம். அவ்வளவு கடுமையாக அவரைக் கண்காணிப்பார்கள். அவர் வெளியில் வந்ததும் திரிபுரா முதலமைச்சராகி வரலாறு படைத்தார். அடக்குமுறை தோற்று போவதற்கு இது ஒரு உதாரணம்.

வட இந்தியாவில் இந்திரா காந்திக்கு எதிராக ஒரு அணி உருவாயிற்று. இந்தியாவின் முக்கிய தலைவர்கள் அனைவரும் டில்லியில் கூடினார்கள். தமிழ் நாட்டிலிருந்து தலைவர் கலைஞருக்கும் அழைப்பு வந்தது. அவர் டில்லிக்குப் புறப்பட்டதாகவும், அவரை வழி அனுப்புவதற்கு சென்னை ரயில் நிலையத்தில் பெரும் திரள் கூடியிருந்ததாகவும் கேள்விப்பட்டு நாங்கள் மகிழ்ச்சி அடைந்தோம். எங்களுக்கு ஒரு புதிய நம்பிக்கை பிறந்தது. ஏதோ இந்தியாவில் ஒரு ஆச்சரியம் நடக்கப் போகிறது என்று நாங்கள் யூகித்தோம். அதற்கு மாறாக டில்லியில் கூடிய அகில இந்தியத் தலைவர்கள் ஜனதாக்கட்சி என்று ஒரு கட்சியை உருவாக்கினார்கள்.

இந்திரா காந்தி அதிகாரிகளேயே நம்பி இருந்ததால், மக்களிடத்தில் தனக்குள்ள செல்வாக்கு என்ன என்பதை அறிந்து கொள்ளவில்லே. எமெர்ஜென்சியால் தனக்கு மதிப்பு உயர்ந்து இருப்பதாக இந்திரா காந்தி நினேத்தார். அது உண்மை அல்ல என்பது பின்னல் நிருபணம் ஆயிற்று. அன்பு வேறு, பயம்வேறு என்பதை இந்திரா காந்தி உணரவில்லே. பண்டிதநேரு அன்பினல் அடக்கி ஆண்டார். இந்திரா காந்தி பயமுறுத்தி அடக்கி ஆள நினேத்தார். ஆனல் அவர் போட்ட தவருன கணக்கு தவருன விடையைத்தந்தது.

இந்தக் காலக்கட்டத்தில் சகோதரர் முரசொலி மாறன் வெளியில் இல்லாதது பெரிய குறையாக எனக்குப்பட்டது. ஆம் மாறனும் மிசாக்கைதியாக சென்னேச் சிறைச்சாலேயில் இருந்தார். உடல் நலிவுற்றும் கலங்காத வீரனுக அவர் சிறை வாசத்தைக் கழித்தார். நடக்க முடியாத நிலே வந்த போதும் குறிச்சியில் உட்கார வைத்துத்தான் அவரை நேர்காணலுக்கு தூக்கி வந்திருக்கிருர்கள். (அதன் சாகுபடியை இந்திரா காந்தி பிற்காலத்தில் தன் குடும்பத்திலேயே அறுவடை செய்து கொண்டார்.) அதைப்போலவேதான் தம்பி ஸ்டாலினும் துன் புறுத்தப்பட்டார்; அடித்துத் துவைக்கப்பட்டார்.

சஞ்சய் காந்தியின் உடலேப்பார்த்து இந்திரா காந்தி கண்ணீர் வடித்தார்.—மு. க. ஸ்டாலின் மிசாவில் சிறைச் சாலேயில் இருந்தபோது சித்திரவதைக்கு ஆளானுர். அதனே அறிந்த இந்திரா குடும்பம் குதூகலித்தது; அதற்குத் தண்டனே யாகத்தான்-இயற்கை சஞ்சய் காந்தி ஓட்டிவந்த விமானத்தை சுக்குநூருகச் சிதறடித்து சஞ்சயின் உடலேச் சின்னுபின்னப் படுத்தி இந்திராகாந்தியை கண்ணீர் விடச்செய்தது போலும்.

ஒரு நாள் இரவு 7 மணியளவில் எங்கள் பிளாக்கில் குதூகலம் கூத்தாடியது. பின்னல் விசாரிக்கும் போது பார்லிமெண்ட் கலேக்கப்பட்டு விட்டது என்றும், விரைவில் பொதுத் தேர்தல் வரப்போகிறது என்றும், ரேடியோவில் அறிவித்ததாகச் சொன்னுர்கள். அன்று இரவே விடுதலே வந்துவிடும் என்று நாங்கள் எல்லாம் மூட்டை முடிச்சுகளேக் கட்டினேம். எதிர்பார்த்தபடி அன்று இரவு வரவில்லே. ஒரு வாரம் கழித்துத்தான் விடுதலே ஆரம்பமானது. அனேவரையும் ஒட்டுமொத்தமாக விடுதலே செய்யாமல் ஒரு நாளேக்கு ஒரு சிறைக்கு பத்துப்பேர் வீதம் விடுதலே செய்து கொண்டு வந்தார்கள்.

1977 ஜனவரி 31ம்தேதி எனக்கு விடுதலே வந்தது. சரியாக 365 நாளில் விடுதலே ஆனேன். இரவு பன்னிரெண்டு மணிக்கு பெட்டி படுக்கையுடன் நான் வெளியே வந்தேன். வேலூர் கழகப்

பிரமுகர் தேவராஜுக்கு தகவல் தெரிந்து அவர் சிறைவாசலில் வந்து காத்திருந்தார். அன்று இரவு அவருடைய வீட்டில் தங்கி இருந்துவிட்டு காலையில் 6 மணியளவில் மதுரைக்குப் பஸ்ஸில் வந்தேன். என்னை பஸ் நிலையத்தில் என் தம்பிகள் அருணச்சலம் திருஞானம் இருவரும் வரவேற்றார்கள். மூன்று மாதம் வேலூர் வாசத்திற்குப் பின்னர் பிப்ரவரி முதல் தேதிக்குப் பிறகுதான் குழந்தைகளையும் மற்றவர்களையும் பார்த்தேன். நான் விடுதலை ஆகியிருந்தாலும் எமெர்ஜென்சி அப்படியே இருந்தது. போலீஸ் C.I.D.க்கள் எனது நடவடிக்கைகளை கண்காணித்தார்கள். மறுபடியும் உங்களைப் பிடிக்க நேரலாம் என்று பயமுறுத்தினார்கள். நான் மட்டுமல்ல மிசாக் கைதிகள் யாரும் அதைப் பொருட்படுத்தவில்லை. தி. மு. கழகத்தை கலைஞரின் பேச்சும் எழுத்தும், பாதுகாக்கும் என்ற அசாத்தியமான தைரியம் தொண்டர்களுக்கு ஏற்பட்டிருந்தது.

தேர்தல் வந்தது. தமிழ்நாட்டில் தி. மு. க., அ. தி.மு.க , காங்கிரஸ், ஆகிய மூன்று கட்சியினரும் தனித் தனியாகப் போட்டியிட்டனர். அ.தி மு க. வெற்றி அடைந்தது. தி.மு க. பிரதான எதிர்க்கட்சியானது. தலைவர் கலைஞர் எதிர்க்கட்சித் தலைவரானார். ஆனால் வட இந்தியாவில் காங்கிரசின் அஸ்திவாரம் தகர்ந்துவிட்டது. மறுபடியும் மிசாவிற்குப் போக வேண்டியது வரும் என்ற எண்ணம் எங்களுக்குத் துளியும் ஏற்படாத வகையில் இந்திரா காந்தியே தோற்றுப்போனார். அது வரை எமெர்ஜென்சியை வைத்திருந்த இந்திராகாந்தி-தான் தோல்வி அடைந்ததும் அன்று இரவு ஒரு மணிக்கு எமெர்ஜென்சியை வாபஸ் பெற்றார். மறுநாள் நல்ல பொழுதாக விடிந்தது.

இந்தத் தொகுப்பில் சில முக்கியமான தகவல்களையும் எனக்கும் தலைவருக்கும் இடையில் நடந்து வந்த கடிதப் பரிமாற்றங்களையும் நான் குறிப்பிடவில்லை. குறிப்பிட்டாலும் அது மற்றவர்களுக்குப் பயன்படாது என்பதால் நான் அவைகளைத் தவிர்த்து விட்டேன்.






## இரண்டாவது சட்ட எரிப்பு (1986)

1964க்குப் பிறகு அரசியல் சட்ட எரிப்பு 1986ல் வரும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. 1964ல் நான் இந்தி ஆட்சி மொழிப்பிரிவை எரிக்கும் பொழுது எனக்கு வயது 34. இரண்டாவதாக மதுரையில் நான் எரிக்கும்போது எனக்கு வயது 58.

இந்திதான் இந்தியாவின் ஆட்சி மொழி என்ற பிடிவாதத்தை மத்திய சர்க்கார் ஒருபோதும் விட்டுக்கொடுக்கவில்லை அதுபோலவே அதை எதிர்ப்பதற்கும் தி. மு. க. ஒருபோதும் பின் வாங்கியதில்லை. மத்திய சர்க்காருக்கும் தமிழ் நாட்டிலுள்ள தி.மு.க.வுக்கும் இந்த யுத்தம் 50 ஆண்டுகாலமாக நடந்து கொண்டிருக்கிறது. மிஞ்சினல் கெஞ்சவும், கெஞ்சினல் மிஞ்சவும் என்கின்ற போக்கைப் பின்பற்றி வருகிற மத்திய அரசாங்கத்திற்குச் சரியான பாடம் புகட்ட வேண்டும் என்பதற்காக மறுபடியும் அரசியல் சட்டத்தின் மொழிப் பிரிவை எரிப்பது என்று தி.மு.க. தீர்மானித்தது. 1986ம் ஆண்டு நவம்பர் மாதம் 17ம் தேதி இந்த மொழிப் போர் தொடங்கியது. கழகத்தின் பொதுச் செயலாளர் பேராசிரியர் அன்பழகன் அவர்கள் இந்த மொழிப் போரை சென்னையில் தொடங்கினர். தலைவர் கலைஞர் முடித்து வைத்தார். அதைத் தொடர்ந்து கழகம் தீர்மானித்தபடி ஒவ்வொரு மாவட்டத்திலேயும் இந்த மொழிப்போர்க் கிளர்ச்சி தொடங்கப்பட்டது. 1964ல் கூட இவ்வளவு முன்னேற்பாடுகள் வாதப் பிரதி வாதங்கள் நடந்தது இல்லை. தலைவர் கலைஞர் அவர்கள் மாவட்டத் தலைநகரங்களுக்குச் சென்று மொழிப்போர் துவங்குவதின் நோக்கத்தை மக்களுக்கு எடுத்துச் சொன்னர். தமிழ் நாட்டில் ஒவ்வொருவரும் தி. மு. க. மொழிப் போரைப் பற்றிப் பேசி, விளக்கி விமர்சிப்பதற்குக் கலைஞரின் இந்தப் பயணம் ஒரு சிறந்த வாய்ப்பாக அமைந்தது.

இந்தி மொழி ஆதரவாளர்களும், அகில இந்தியக் கட்சியைச் சேர்ந்தவர்களும் தி. மு. க. வின் மொழிக் கிளர்ச்சி பற்றிக் குறிப்பிடும் போது-எங்களைத் தேச விரோதிகள் என்று வருணித்தார்கள். அரசியல் சட்டம் புனிதமானது அதை யாரும் தீண்டக் கூடாது என்பது அவர்கள் வாதம். தி. மு. க. தலைவர் கலைஞர் இதற்கு ஒவ்வொரு கட்டத்திலும் சரியான பதிலடி கொடுத்தார்.

''நாங்கள் அரசியல் சட்டத்தை அப்படியே கொளுத்தவில்லை. இந்திதான் இந்தியாவின் ஆட்சி மொழி என்ற வாசகத்தை ஒரு வெள்ளைக் காகிதத்தில் எழுதிக் கொளுத்துகிறோம். அது எப்படித் தேச விரோதமாகும்?'' என்று திருப்பிக் கேட்டார். கலைஞர் அவர்கள் எந்த வாதத்தை எடுத்து வைத்தாலும், புரியாதவர்களுக்கும் புரியும் வகையில் சிறந்த உவமைகளோடுதான் விளக்குவார். அதற்கு ஒரு உதாரணத்தை இங்கே குறிப்பிட விரும்புகிறேன்.

இலங்கையில் தமிழர்கள் கொலை செய்யப்படுவதை வன்மையாகக் கண்டித்து கலைஞர் பேசும் போதெல்லாம் ''இலங்கையில் இனப் படுகொலை நடைபெறுகிறது, உடனே இந்தியா தலையிட வேண்டும் என்று சுட்டிக்காட்டிக் கொண்டே வந்தார். மத்திய சர்க்கார் கலைஞரின் பேச்சுக்குக் காது கொடுக்கவில்லை. ஓரே வார்த்தையில் அது அயல் நாட்டுப் பிரச்சினை என்று கூறி விட்டது. அதற்கு கலைஞர் பதில் சொல்லும்போது பக்கத்து வீட்டில் படுக்கை அறையில் கணவன் மனைவி பேசிக் கொள்வதில் தலையிட்டால் அது தவறு. அதே படுக்கை அறையில் ஒரு கொலை நடக்குமானால் அடுத்த வீட்டுக்காரர் தலையிடாமல் இருப்பது பெரிய குற்றம். அதைப் போலத்தான் இலங்கையில் நடப்பது பக்கத்து வீட டில் நடக்கும் கொலை என்று குறிப்பிட்டார். நீண்ட காலத்திற்குப்பிறகு இலங்கையில் நடப்பது இனப் படுகொலை தான் என்பதை உணராதவர்கள் உணர்ந்தனர். கலைஞரின் தொடர்ச்சியான பிரச்சாரம் உணரவைத்தது. இதை போலத்தான் ஆட்சி மொழிப் பிரச்சனையிலும் அரசியல் சட்டத்தை எரிக்கின்ற பிரச்சனையிலும் கலைஞர் சுவையான உவமைகளின் மூலம் எடுத்துச் சொன்னார்.

''முருங்கை மரத்தில் ஒரு பகுதியில் கம்பளிப்பூச்சி மொய்க்கிறது. அதை அகற்றுவதற்கு அதன் மீது வெண்ணீரை ஊற்றுவது வழக்கம். அவ்வாறு ஊற்றுவது கொடிய பூச்சியை அகற்றுவதற்குத்தானே தவிர முருங்கை மரத்தையே வேரோடு அழிப்பதற்கு அல்ல. அதைப்போலத்தான் அரசியல் சட்டத்தில் இருக்கும் மொழிப்பிரிவில் இந்தி தான் ஆட்சி மொழி என்கின்ற வாசகத்தை ஒரு காகிதத்தில் எழுதி கொளுத்தினோமே தவிர, அரசியல் சட்ட திட்டத்தை அப்படியே எரிக்கவில்லை'' என்று மதுரையில் குறிப்பிட்டார்.

இன்னொரு ஊரில் பேசுகிறபோது ''ரோஜாவை சட்டையில் சொருகிக் கொண்டால் அழகாகத்தான் இருக்கும்-ஆனால் யாரும் ரோஜாவின் இலைகளையோ, ரோஜாவின் முட்களையோ சட்டையில் சொருகிக் கொள்வதில்லை; முள்ளை அகற்றிவிட்டு

இலைகளையும் அகற்றிவிட்டுத்தான் சட்டையில் ரோஜாவை சொருகிக் கொள்கிறார்கள். அதைப்போல அரசியல் சட்டம் முள் இல்லாத ரோஜாவாக இருக்க வேண்டுமென்று நாங்கள் கருதுகின்றோம்'' என்றார். 1964-ல் சட்டத்தை எரிக்க முற்பட்ட போது கூட இவ்வளவு விஸ்தாரமான விளக்கங்கள் கொடுப்பதற்கு நேரம் இல்லை.

நான் 1986, டிசம்பர் 7-ம் தேதி மதுரையில் அண்ணா சிலை முன்பு அரசியல் சட்டத்திற்குத் தீ வைத்துக் கொளுத்தினேன். என்னோடு மதுரை நகர் மாவட்டச் செயலாளர் உட்பட பலர் அரசியல் சட்டத்திற்கு நெருப்பு வைத்தார்கள். உடனடியாக நாங்கள் கைது செய்யப்பட்டு மதுரை சிறைச்சாலைக்குச் சென்று விட்டோம். 15 நாள் காவலுக்குப் பிறகு எங்கள் மீது போட்ட வழக்கு விசாரணைக்கு வந்தது. அரசியல் சட்டத்திற்கு, நெருப்பு வைத்துத் தேசத் துரோகம் செய்ததாகவும், 144 தடையை மீறியதாகவும் இரண்டு வழக்குகள் போடப்பட்டன. எங்கள் சார்பில் கழக வழக்கறிஞர்கள் வாதாடினர். அப்போது வெளியான பத்திரிக்கைச் செய்திகளை அப்படியே கீழே தந்து இருக்கிறேன்.

''1987, மதுரை, ஜனவரி மாதம் 9-ம் தேதி அன்று மதுரைக் கோர்ட்டில் தென்னரசும் தாவூதுவும் ஆஜர் படுத்தப்பட்டார்கள் 6 சாட்சிகளிடம் விசாரணை நடந்தது. தி.மு.க வினர் தரப்பில் பி. டி. ஆர். பழனிவேல்ராஜன் பொன்முத்துராமலிங்கம் ஆகியோர் குறுக்கு விசாரணை செய்தார்கள்.

''மதுரை அண்ணாசிலை அருகே இந்தி ஆதிக்க எதிர்ப்புப் போரில் ஈடுபட்டு கைதான தி.மு.க. அமைப்புச் செயலாளர் எஸ். எஸ். தென்னரசு, மதுரை நகர் மாவட்டச் செயலாளர் கே. தாவூது, அவைத் தலைவர் பெரியாண்டி முன்னாள் கவுன்சிலர் ஆறுமுகம் இளைஞர் அணி அமைப்பாளர் கா. பாண்டியராஜன், மாணவர் அணி அமைப்பாளர் கொ குபேந்திரன் பேச்சாளர் விடுதலை ரத்தினம் உட்பட எழுபத்திரண்டு தி.மு.க. வினர் மதுரை நீதித்துறை தலைமை மாஜிஸ்திரேட் பி. தனபால் முன்னிலையில் நேற்று ஆஜர் படுத்தப்பட்டனர்.

''இவர்கள்மீது விளக்குத்தூண் போலீசார் ஒரு வழக்கும் மதுரை நகர் போலீஸ் சூப்பிரெண்டு ஒரு வழக்கும் தொடர்ந்து உள்ளனர்''.

''இந்த இரண்டு வழக்குகளையும் ஒன்றாக நடத்தவேண்டும் என்று தி.மு. கழகத்தின் சார்பில் கோர்ட்டில் ஒரு மனு

தாக்கல் செய்யப்பட்டது. அதற்கு அரசு வழக்கறிஞர் எதிர்ப்புத் தெரிவித்தார். இரு தரப்பு வாதங்களையும் கேட்ட மாஜிஸ்திரேட் இரண்டு வழக்கையும் ஒன்ருக நடத்த அனுமதித்தார்.''

''பிறகு மதுரை நகர் போலீஸ் உதவி சூப்பிரென்டண்ட் சிவப்பிரகாசம் சாட்சியம் அளித்தார். அவரிடம் வழக்கறிஞர்கள் பி. டி. ஆர். பழனிவேல்ராஜன், பொன்முத்துராமலிங்கம் இருவரும் குறுக்கு விசாரணை செய்தார்கள். அதன் விவரம் வருமாறு''.




கேள்வி : நீங்கள் நகரில் போலீஸ் தடை உத்தரவு போட்டு இருந்தீர்களே? அதற்கு ஆர்.டி. ஓவிடம் இருந்து எழுத்து மூலமாக உத்தரவு எதுவும் பெற்று இருந்தீர்களா?

பதில் ;- எழுத்து மூலமாக உத்தரவு எதுவும் பெறவில்லை.

கேள்வி :- எவ்வளவு நாட்களுக்கு முன்பு இந்த உத்திரவைப் பெற்றீர்கள்?

பதில் :- இந்தச் சம்பவம் நடைபெறுவதற்கு சிலநாட்களுக்கு முன்பு வாய் மூலமாக உத்தரவு பெற்றேன்.

கேள்வி -: போலீஸ் தடை உத்தரவு அமுலில் இருக்கும் போது ஊர்வலம், பொதுக் கூட்டங்கள் நடத்தவேண்டும் என்ருல் உங்களுடைய அனுமதியைப்பெற வேண்டும் அல்லவா?

பதில் :- ஆம்!

கேள்வி :- அப்படி அரசியல் கட்சிகள் எதுவும் ஊர்வலம், பொதுக் கூட்டம் நடத்த வேண்டுமென்ருல் உங்களுக்கு எவ்வளவு நாட்களுக்கு முன்பு மனுச் செய்ய வேண்டும்?

பதில் :- 7 நாட்களுக்கு முன்பு மனுச் செய்ய வேண்டும்.

கேள்வி :- இந்தப்போராட்டம் நடப்பதற்கு முன்பு அப்படி மனு எதுவும் வந்ததா?

பதில் :- வரவில்லை.

கேள்வி :- அப்படிப்பட்ட மனு எதுவும் உங்களுக்குக் கீழ் உள்ள போலீஸ் அதிகாரிகளுக்கு வ ந் த த ா க ஏதாவது தகவல் உங்களுக்கு உ ண் டா?

பதில் :- தெரியவில்லை. அப்படி மனுக்கொடுத்ததாக இது வரை தகவலும் இல்லை.

கேள்வி :- சம்பவத் தின்போது நீங்கள் அங்கு இருந்தீர்களா?

பதில் :- சம்பவத்தன்று நான் ம து ரை நகரில் தான் இருந்தேன். பாதுகாப்பு ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியது இருந்ததால் நகரின் பல்வேறு இடங் களுக்குச் சென்று விட்டதால் சம்பவத்தின் போது நான் அங்கு இல்லை.

கேள்வி :- சம்பவ நேரம் தெரியுமா?

பதில் :- இன்ஸ்பெக்டர் சொல்லித்தான் தெரியும்.

கேள்வி :- அண்ணா அறிவகத்திற்கும் அண்ணா சிலைக்கும் இடையே உள்ள தூரம் எவ்வளவு?

பதில் :- சரியாகத் தெரியாது.

கேள்வி :- நகரில் தடை உத்தரவு பிறப்பிக்கும்போது அதன் நகலை அரசியல் கட்சிக்குக்கொடுக்க வேண்டும் என்று உங்களுக்குத் தோன்றவில்லையா?

பதில் :- எனக்கு அப்படித் தோன்றவில்லை.

கேள்வி :- தடை உத்திரவு அமுலில் இல்லாத நேரத்தில் கூட மைக்செட் போட உங்களிடம் அ னு ம தி பெற வேண்டும் அல்லவா?

பதில் :- ஆம்!.

கேள்வி :- அண்ணா சிலை அருகிலோ, அண்ணா அறிவகம் அ ரு கி லே ா மேடை எதுவும் அமைக்கப்பட்டு இருந்ததா?

பதில் :- இல்லை.

கேள்வி :- ஆங்கில, தமிழ் நாளிதழ்கள் தினமும் படிப்பீர்கள் அல்லவா?

பதில் :- ஆம்.

கேள்வி :- மொழிப் பிரச்சினை தொடர்பாக தி. மு. கழகம் நடத்திய போராட்டம் தொடர்பாக பத்திரிகைகளில் செய்தி வந்து இருந்ததை படித்தீர்களா?

பதில் :- ஆம். படித்தேன்.

கேள்வி :- தி. மு. கழகம் நடத்தும் போராட்டத்தின் மூலம் இந்திய அரசியல் சட்டத்தை அவமதிக்கும் நோக்கம் இல்லை என்று தி மு.க. தலைவர் கலைஞர் அறிக்கை பத்திரிகைகளில் வந்து இருந்ததை பார்த்தீர்களா?

பதில் :- பார்த்து இருக்கிறேன்.

—இவ்வாறு அவர் கூறினார்.

மதுரை கிழக்குக்கிராம நிர்வாக அதிகாரி பழனிச்சாமி சாட்சியம் அளித்தார். அவரிடம் கேட்கப்பட்ட கேள்விகளும் அதற்கு அவர் அளித்த பதில்களும் வருமாறு :-

கேள்வி :- சம்பவத்தன்று நீங்கள் அண்ணாசிலை அருகே இருந்ததாகக் கூறுகிறீர்களே? உங்களை அங்கு வரச் சொல்லி உங்கள் மேல் அதிகாரிகள் ஏதேனும் உத்தரவு பிறப்பித்து இருந்தார்களா?

பதில் :- ஆம், தாசில்தார் என்னை அங்கு வரச்சொல்லி உத்தரவிட்டிருந்தார்.

கேள்வி :- எத்தனை மணிக்கு அங்கு போனீர்கள்?

பதில் :- காலை ஒன்பது மணிக்குச் சென்றேன்.

கேள்வி :- கைது செய்யப்பட்டு உள்ள தி.மு.க. வினரை இதற்கு முன்பு உங்களுக்குத் தெரியுமா?

பதில் :- எஸ். எஸ். தென்னரசு, தாவூது ஆகியோரைத் தெரியும். மற்றவர்களைத் தெரியாது.

கேள்வி :- அண்ணாசிலை அருகே மேடை எதுவும் அமைக்கப் பட்டு இருந்ததா?

பதில் :- அண்ணாசிலைக்குக்கிழக்குப் பக்கத்தில் மேடை அமைக்கப்பட்டு இருந்தது.

கேள்வி :- அண்ணா அறிவகத்திற்கும் அண்ணா சிலைக்கும் எவ்வளவு தூரம் இருக்கும்?

பதில் :- இருநூறு கெஜதூரம் இருக்கும்.

கேள்வி ;- அங்கு ஒலி பெருக்கி இருந்ததா?

பதில் :- அண்ணா சிலை முன் இருந்தது. போலீசார் தலை யிட்டு அதை இயக்கவிடாமல் தடுத்தனர்.

கேள்வி :- ஊர்வலம் எத்தனை மணிக்கு வந்தது? எவ்வளவு பேர் வந்தனர்?

பதில் :- ஊர்வலம் 10-30 மணிக்கு அண்ணா சிலைக்கு வந்தது அதில் ஐநூறுபேர் இருந்தனர். அவர்களில் எஸ். எஸ். தென்னரசு, தாவூது ஆகியோரைத்தவிர வேறு யாரையும் தெரியாது.

கேள்வி :- உங்களுக்கு பொன்முத்துராமலிங்கத்தை தெரியுமா?

பதில் :- தெரியும்.

கேள்வி :- சம்பவத்தின்போது அவர் அங்கு வந்தாரா?

பதில் :- வந்தார்.

கேள்வி :- ஊர்வலத்தில் வந்தாரா?

பதில் :- வரவில்லை.

கேள்வி :- என்னை (பழனிவேல்ராஜன்) தெரியுமா?

பதில் :- தெரியும்.

கேள்வி :- நானும் ஊர்வலத்தில் வந்தேனா?

பதில் :- வரவில்லை.

கேள்வி :- அண்ணா சிலை அருகே இருந்த மேடையில் எத்தனை பேர் இருந்தார்கள்?

பதில் :- இருபத்தைந்து பேர் இருந்தனர். மற்றவர்கள் கீழே இருந்தனர்.

கேள்வி :- அண்ணா சிலைக்கு தி. மு. க.வினர் யாரும் மாலை போட்டார்களா?

பதில் :- தென்னரசு, தாவூது மாலை போட்டனர். மற்றவர்கள் போடவில்லை.

கேள்வி :- பொன்முத்துராமலிங்கம் மாலை போட்டாரா?

பதில் :- நான் அவர் போட்டதைப் பார்க்கவில்லை.

கேள்வி :- ஊர்வலம் எங்கிருந்து வந்தது?

பதில் :- நெல்பேட்டையில் இருந்து தி.மு.க.வினர் ஊர்வலமாக வந்தனர்.

கேள்வி :- ஊர்வலத்துடன் போலீசார் வந்தார்களா?

பதில் :- போலீசார் வரவில்லை.

கேள்வி :- ஊர்வலம் புறப்படும்போது அங்கு போலீசார் யாரும் இருந்தார்களா?

பதில் :- யாரும் இல்லை. அண்ணு சிலைக்கு அருகேதான் இருந்தனர்.

கேள்வி :- நீங்கள் எங்கு இருந்தீர்கள்?

பதில் :- அண்ணு சிலை அருகே இருந்தேன்.

கேள்வி :- அண்ணு சிலைக்கு நூறு கெஜ தூரத்தில் ஊர்வலத்தினரைப் போலீசார் கலைந்து போகச் சொன்னுர்களா?

பதில் :- தெரியாது.

கேள்வி :- தடை உத்தரவை தாவூது அவர்களிடம் தந்தது தெரியுமா?

பதில் :- தெரியாது.

கேள்வி :- தாவூதிடம் கையெழுத்து வாங்கியதாவது தெரியுமா?

பதில் :- தெரியாது.

கேள்வி :- சம்பவ இடத்தில் எத்தனைபேர் இருந்தனர்?

பதில் :- இருநூறுபேர் இருந்தனர்.

கேள்வி :- (போலீசார் கைப்பற்றிய மெழுகுவர்த்தியை காட்டி) இது சம்பவ இடத்தில் கைப்பற்றப்பட்டதா?

பதில் :- ஆம்.

கேள்வி :- இதை வைத்து எத்தனை பேர் துண்டுக்காகிதத்தை எரித்தார்கள்?

பதில் :- ஒரே ஒருவர் தான் எரித்தார்.

கேள்வி :- அவர் யார் என்று தெரியுமா?

பதில் :- தெரியாது.

இவ்வாறு அவர் கூறினுர்.

விளக்குத்தூண் போலீஸ் இன்ஸ்பெக்டர் ராஜேந்திரன் சாட்சியம் அளித்தார். அவரிடம் கேட்கப்பட்ட கேள்விகளும் அதற்கு அவர் கூறிய பதில்களும் வருமாறு :-

கேள்வி :- உங்கள் விசாரணை அதிகாரி உங்களை விசாரித்து வாக்கு மூலத்தைப் பதிவு செய்தாரா?

பதில் :- என்னை விசாரித்தார். ஆனால் வாக்குமூலத்தைப் பதிவு செய்யவில்லை.

கேள்வி :- இந்தி மொழிப்பிரச்சினைக்கு எதிர்ப்புத் தெரிவித்து தமிழ்நாடு முழுவதும் இந்தப் போராட்டத்தை நடத்தப் போவதாக தி. மு. க. தலைவர் கலைஞர் அறிவித்து இருந்தது தெரியுமா?

பதில் :- தெரியும்.

கேள்வி :- மதுரை நகரில் போலீஸ் ஒழுங்குமுறைச் சட்டம் அமுலாக்கப்பட்ட பிறகு வருகிற 7-ந் தேதி தி.முக. சார்பில் போராட்டம் நடத்த இருப்பதாகவும் அதற்கு அனுமதி கேட்டும் உங்களிடம் தி.மு.க. சார்பில் மனு எதுவும் கொடுக்கப்பட்டதா?

பதில் :- இல்லை!

கேள்வி : 33வ-து வட்ட தி. மு. க. செயலாளர் சிக்கந்தரை தெரியுமா?

பதில் :- தெரியாது.

கேள்வி :- அவர் தி.மு.க. போராட்டத்திற்கு அனுமதி கேட்டு உங்களிடம் மனுச்செய்தார் என நான் கூறுகிறேன்.

பதில் :- அவ்வாறு கூறுவது சரியல்ல!

கேள்வி :- அண்ணா அறிவாலயத்திற்கும் அண்ணா சிலைக்கும் இடையே உள்ள தூரம் 200 கெஜம் தானே?

பதில் :- 200 அடி தூரம் தான் உள்ளது. 200 கெஜம் என்பது சரியல்ல.

கேள்வி :- நீங்கள் கொடுத்த வரைபடத்தில் இந்தத் தூரத்தை குறிக்கவில்லை அல்லவா?

பதில் :- ஆம். குறிக்கவில்லை.

கேள்வி :- அண்ணா அறிவாலயம் அருகிலோ அண்ணா சிலை அருகிலோ மேடையோ, ஒலிபெருக்கியோ இல்லை அல்லவா?

பதில் :- அண்ணா சிலை அருகே மேடை இருந்தது. ஒலி பெருக்கி ஏற்பாடு செய்து இருந்தனர். அதற்கு அனுமதி இல்லை என நான் கூறி அதைத் தடுத்து விட்டேன்.

கேள்வி :- ஊர்வலம் புறப்பட்ட இடத்தில் போலீசார் இருந்தார்களா?

பதில் :- நான் உள்பட போலீசார் இருந்தோம். ஊர்வலம் புறப்பட்டதும் அண்ணாசிலைக்கு வந்தோம்.

கேள்வி :- போலீஸ் ஒழுங்குபடுத்தும் சட்ட நகலை எங்கே வைத்து யாரிடம் கொடுத்தீர்கள்?

பதில் :- அண்ணா அறிவாலயம் முன் வைத்து தடை உத்தரவைப் பற்றி தென்னரசிடமும், தாவூதுவிடமும், கூறினேன். ஒரு நகலை தாவூது இடம் கொடுத்துக் கையெழுத்துப் பெற்றேன்.

கேள்வி : தாவூதுக்கு ஆங்கிலம் படிக்கத் தெரியுமாஎன்பது பற்றி உங்களுக்குத் தெரியுமா?

பதில் :- தெரியாது.

கேள்வி :- உத்தரவை மீறி ஊர்வலமாக வந்த அவர்களை ஏன் கைது செய்யவில்லை?

பதில் :- நான் அவர்களைக்கைது செய்ய வேண்டும் என்று நினைப்பதற்குள் அவர்கள் அண்ணாசிலைக்குக் கூட்டமாக வந்து விட்டனர். அண்ணா சிலை அருகே இருந்த மேடையில் தலைவர்கள் ஏறிவிட்டனர். அவர்களைச்சுற்றி தொண்டர்கள் இருந்தனர். இதனால் அவர்களைக் கைது செய்ய முடியவில்லை.

கேள்வி :- காலை 10-30 மணிக்கு ஊர்வலம் தொடங்கி இருக்கிறது. 10-50 மணிக்குத்தான் இந்தி ஆதிக்க எதிர்ப்புப் போரில் ஈடுபட்டு உள்ளனர். இந்த இடைப்பட்ட நேரத்தில் அவர்களை ஏன் கைது செய்யவில்லை?

பதில் :- கூட்டமாக இருந்ததால் கைது செய்ய முடியவில்லை.

கேள்வி :- (போலீசார் கோர்ட்டில் கொடுத்திருந்த எரிக்கப் படாத நகலைக்காட்டி) இதில் இந்திய அரசியல் சட்டம் என்றோ எந்தப்பிரிவு என்றோ அதில் இருக்கிறதா?

பதில் :- இல்லை.

கேள்வி :- தேசிய அவமதிப்புச்சட்டப்படி வழக்குத் தொடர்ந்தால் குற்றவாளிக்கு எவ்வளவு தண்டனை கிடைக்கும்?

பதில் :- 3 வருட ஜெயில் தண்டனை கிடைக்கும்.

கேள்வி :- ஆகவே அப்படி யாராவது குற்றம் செய்ய முயன்றால் அதைத்தடுக்க வேண்டியது உங்களுடைய கடமைதானே?

பதில் :- ஆம்.

கேள்வி :- அப்படி என்ருல் ஏன் அவர்களைக்கைது செய்ய வில்லை?

பதில் :- அவர்களைக்கைது செய்ய நினைப்பதற்குள் சம்பவம் நடந்து விட்டது.

கேள்வி :- அப்படி என்ருல் பாதி எரிந்தும் எரியாத நகலை கைப்பற்றி உள்ளதாகக்கூறி உள்ளீர்களே எப்படிக் கைப்பற்றினீர்கள்?

பதில் :- இந்தி ஆதிக்க எதிர்ப்புப்போரில் ஈடுபட்டவர்களை கைது செய்த பிறகு அந்த இடத்தில் இருந்து கைப்பற்றினேன்.

கேள்வி :- அந்த நகலில் இந்தி வாசகங்கள் எதுவும் உள்ளதா?

பதில் :- இல்லை.

கேள்வி :- இந்தப் போராட்டத்தின்போது வன்முறைச் சம்பவங்கள் ஏதும் நடந்ததா?

பதில் :- போக்குவரத்துக்கு இடையூறு தவிர வேறு எந்த வன்முறைச் சம்பவங்களும் இல்லை.

இவ்வாறு அவர் கூறினர்.

இந்த வழக்கில் இன்ஸ்பெக்டர் ஜெய்சிங், மற்றும் அப்பாஸ், யாகூப் போட்டோகிராபர் ஆமோஸ் ஆகியோர் சாட்சியம் அளித்தனர். மொத்தம் 7 சாட்சிகளில் ஒருவரை அரசு தரப்பில் வாபஸ் பெற்றனர். மற்ற 6 பேர்களிடத்திலும் பி. டி. ஆர். பழனிவேல்ராஜன் குறுக்கு விசாரணையை வருகிற 12-ந் தேதிக்கு (திங்கள்) மாஜிஸ்திரேட் பி. தனபால் தள்ளி வைத்தார்.

மதுரை: ஜனவரி13-தென்னரசு, தாவூது, காவேரி மணியம் அமுதன் அணியினர் மீதான வழக்கு விசாரணை முடிந்தது. அதில் இன்று தீர்ப்புக் கூறப்படுகிறது.

"மதுரை அண்ணசிலை அருகே இந்தி ஆதிக்க எதிர்ப்புப் போரில் ஈடுபட்டுக்கைதான தி. மு. க. அமைப்புச் செயலாளர் எஸ். எஸ். தென்னரசு, நகர் செயலாளர் தாவூது உள்பட

எழுபத்தி இரண்டு தி.மு.க. வினர் நேற்று (திங்கள்) மதுரை நீதித்துறை தலைமை மாஜிஸ்திரேட் பி. தனபால் முன்னிலையில் ஆஜர் படுத்தப்பட்டனர்.

அதே பேரில் மதுரை கட்டப் பொம்மன்சிலை அருகே கைதான முன்னாள் M.L.A. காவேரி மணியம் உள்பட ஐம்பத்தி இரண்டு பேரும் அதே கோர்ட்டில் ஆஜர் படுத்தப்பட்டார்கள்.

அவர்களிடத்தில் மாஜிஸ்திரேட் பி. தனபால் கேள்வி கேட்டார். அதற்கு எஸ். எஸ். தென்னரசு, தாவூது, காவேரி மணியம் ஆகியோர் பதில் அளித்தனர். அதன் விவரம் வருமாறு :-

கேள்வி :- மதுரையில் கோட்டாட்சித் தலைவரின் ஒப்புதலின் பேரில் மதுரை நகர் போலீஸ் துணை சூப்பிரெண்டெண்ட் போலீஸ் ஒழுங்கு முறைச் சட்டம் பிறப்பித்துஇருந்தது தெரியுமா?

பதில் :- தெரியாது.

கேள்வி :- நீங்கள் ஊர்வலமாகச் சென்ற போது போலீஸ் அதிகாரி போட்ட தடை உத்தரவு நகலை உங்களிடம் கொடுத்து அதனால் ஏற்படும் விளைவுகளை எடுத்துக் கூறும்படி இன்ஸ்பெக்டரிடம் கூறியது தெரியுமா?

பதில் :- தெரியாது.

கேள்வி :- தடையை மீறி ஊர்வலம் சென்ற போது போலீஸ் தடை உத்தரவு நகலை உங்களிடம் கொடுத்துக் கையெழுத்து வாங்கியதாக இன்ஸ்பெக்டர் கூறுகிறாரே?

பதில் :- தடையை மீறவில்லை. நகல் பின்னால் கொடுத்துக் கையெழுத்து வாங்கப் பட்டது.

கேள்வி :- போலீசார் உங்களைக் கலைந்து போகச் சொன்னதாகவும் நீங்கள் மேடையில் ஏறி ஒரு காகிதத்தை எரித்ததாகவும் அரசுத் தரப்புச்சாட்சி கூறியுள்ளாரே? உங்கள் பதில் என்ன?

பதில் :- போலீசார் எங்களைக் கலைந்து போகச் சொல்லவில்லை. காகிதத்தை எரித்தோம். மற்றவை தெரியாது.

கேள்வி :- இந்தச் சம்பவத்தின் போது போலீசார் உங்களைக் கைது செய்ததாகவும் பார்வை மகஜரில் அவர் கையெழுத்துப் போட்டதாகவும் சாட்சி கூறுகிருரே?

பதில் :- கைது செய்தது உண்மை. மற்றவை தெரியாது.

கேள்வி :- போலீஸ் அதிகாரி உங்களிடம் கையெழுத்து வாங்கிய போது அப்படிச் சட்டம் இருப்பது தங்களுக்குத் தெரியும் என்று கூறி அங்கிருந்து, ஊர்வலமாக புறப்பட்டுச் சென்று மேடையில் ஏறி இந்திய அரசியல் அமைப்புச் சட்டப் பிரிவு 343ன் நகலை தீயிட்டுக் கொளுத்தியதாகச் சாட்சி கூறியுள்ளாரே?

பதில் :- தடையை மீறிச் செல்லவில்லை. சட்டத்தை எரிக்கவில்லை. ஒரு தாளில் எழுதி எரித்தோம்,

இவ்வாறு அவர்கள் பதில் கூறினர்கள்.

பிறகு வழக்கறிஞர் வாதம் நடந்தது. அரசு வழக்கறிஞர் பாலசுந்தரம் கூறியதாவது :-

''போலீஸ் தடை உத்தரவுபோட, போலீஸ் துணை சூப்பிரெண்டிற்கு அதிகாரம் இல்லை என்ருலும் போலீஸ் நடைமுறை உத்திரவுப்படி அவருக்கு அதிகாரம் உள்ளது. இந்திய தண்டனைச் சட்டம் 143 (சட்ட விரோதமாகக் கூடுதல்) 188 (அரசு அதிகாரியால் போடப்பட்ட உத்தரவை மீறுதல்) ஆகிய குற்றங்கள் நிருபிக்கப்பட்டு உள்ளதால் இதற்கே தண்டனை வழங்கலாம். கூட்டமாக வருபவர்களில் ஒருவரிடத்தில் மட்டும் உத்தரவு நகலைத் தாக்கல் செய்தாலே போதும். அதன்படி தானூது, காவேரி மணியம் ஆகியோரிடத்தில் நகல் கொடுக்கப்பட்டு கையெழுத்து வாங்கப்பட்டு உள்ளது. அவர்கள் தெரிந்தே தடையை மீறி உள்ளனர் என்பது நிருபணம் ஆகிறது. மற்றவர்களுக்கு இப்படி ஒரு உத்தரவு இருக்கிறது என்று தெரியச் செய்வதே போதுமானது. இது போன்ற நேரங்களில் பொது மக்களுக்கு இடையூறும் பீதியும் இருந்தது என்பதை நிருபிக்கத் தேவையில்லை. எனவே தடை உத்தரவை மீறிச் சட்டவிரோதமாகக் கூடி அரசியல் அமைப்புச்சட்டத்தின் ஒரு பிரிவை எரித்த குற்றத்திற்கும் தண்டனை வழங்க வேண்டும்''.

இதற்குப்பதில் அளித்து தி.மு.க வினர் சார்பில் ஆஜரான வழக்கறிஞர் பி.டி.ஆர். பழனிவேல்ராஜன் வாதிட்டார். அதன் விவரம் வருமாறு :-

''போலீஸ் தடை உத்தரவு நகல் ஒருவருக்குத்தான் தரப்பட்டது. மற்றவர்களுக்குத் தரப்படவில்லை. மற்றவர்களுக்கும்

தரவேண்டும் எனச் சட்டத்தில் கூறப்பட்டு உள்ளது. ஆனால் அவர்களுக்குத் தரப்படவில்லை.

இந்தி எதிர்ப்புப் போராட்டம் இன்று நேற்றல்ல. ராஜாஜி முதல் அமைச்சராக இருந்த காலத்தில் இருந்து இந்தப் போராட்டம் நடை பெற்று வருகிறது. இப்போது நடைபெற்ற போராட்டம் ஒரு பொறுப்பு மிகுந்த அரசியல் கட்சியான தி.மு.க.வினரால் அறிவிக்கப்பட்டு நடைபெற்று வருகிறது. கோவையில் நடைபெற்ற மாநாட்டில் லட்சக்கணக்கான மக்கள் கலந்து கொண்டனர். அங்கு தி.மு.க. தலைவர் கலைஞர் அவர்களால் இந்தப் போராட்டம் அறிவிக்கப்பட்டது. இது பற்றிய செய்திகள் பத்திரிகைகளில் வந்தது. மேலும் எங்கிருந்து யார் தலைமையில் ஊர்வலம் புறப்பட்டு எங்கு வைத்து இந்தப் போராட்டம் நடக்கிறது என்பதை முன் கூட்டியே அறிவிக்கப் பட்டது. இது பற்றிய பட்டியல்கள் தினகரன், முரசொலி பத்திரிகைகளில் வெளியிடப்பட்டன.

மதுரை நகர் செயலாளர் இதற்கான அனுமதி கேட்டு மதுரை நகர் போலீஸ் துணை சூப்பிரெண்டிற்கு மனுக் கொடுத்தார். அனுமதி மறுக்கப்பட்டது. ஆகவே இது வெளிப்படையாக அறிவிக்கப்பட்டு நடந்த போராட்டமாகும். இது போலீசாருக்கு நன்கு தெரியும்.

தி.மு.க.வினர் தடையை மீறி ஊர்வலமாகச்சென்றனர். சட்டத்தை எரிப்பது பிடி கட்டளை (வாரண்டு) இன்றிக் கைது செய்யப்படக் கூடிய குற்றம் என்று போலீசாருக்குத் தெரியும். தி.மு.க.வினர் ஊர்வலமாகச் சென்றபோது போலீசாரும் பாதுகாப்புக்குச் சென்று உள்ளனர். பிடி கட்டளை இல்லாமல் கைது செய்யப்படக் கூடிய குற்றம் எனத் தெரிந்தும் தி.மு.க.வினரை போலீசார் கைது செய்யவில்லை.

சம்பவ இடத்தில் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த ஒலி பெருக்கியை மட்டும் அனுமதியில்லை என்று கூறி தடுத்த போலீஸ் அதிகாரிகள் தடையை மீறி ஊர்வலம் சென்ற தி.மு.க. வினரை உடனடியாகக் கைது செய்யாதது ஏன்? தி.மு.க.வினர் கட்சி மேலிடம் என்ன உத்தரவு இட்டதோ அதன்படி போராட்டத்தில் ஈடுபட்டு உள்ளனர்.

இ.த.ச. 188-ஐ மீறுவது குற்றமல்ல. அதேபோல் ஒரு துண்டுப் பேப்பரில் சில வார்த்தைகளை எழுதி எரிப்பதும் குற்றமல்ல(சில சட்டப்புத்தகங்களைக் கோர்ட்டில் படித்துக்காட்டினார்.)

தி மு க.வின் இந்தி எதிர்ப்புப் போராட்டம் கடந்த 30 ஆண்டுகளாக நடைபெற்று வருகிறது. இந்தியாவை ஆட்சி செய்த மூன்று பிரதமர்கள் இந்தியை நாங்கள் திணிக்க மாட்டோம் எனப் பல முறை வாக்குறுதி கொடுத்தனர். இந்திய அரசியல் அமைப்புச் சட்டமும் ஐம்பதுக்கும் மேற்பட்ட தடவைகள் திருத்தம் செய்யப்பட்டு உள்ளன. எரிக்கப்பட்ட பேப்பரில் தமிழிலும் வார்த்தைகள் உள்ளன. அதை அரசியல் அமைப்பின் ஒரு பகுதியாகக் கருத முடியாது. எங்களுடைய குறிக்கோள் இந்தி தேசிய மொழியாக இருக்கக் கூடாது. அதற்கேற்ப இந்திய அரசியல் அமைப்புச் சட்டம் திருத்தப்பட வேண்டும் என்பது தான்.

போராட்டம் தொடங்குவதற்கு முன்பு சென்னையில் நடந்த மாணவர்கள் கூட்டத்தில் தலைவர் கலைஞர் பேசும்போது ''நாளை நீங்கள் வாழ இன்று எங்களை அழித்துக்கொள்ள தயாராக இருக்கிறோம்'' என்று கூறியுள்ளார். இந்தப்போராட்டத்தின் நோக்கமே இந்தி பேசாத மக்களின் சந்ததியினர் எதிர்காலத்தில் இரண்டாம் தரக் குடிமக்களாகிவிடக் கூடாது என்பதுதான்.

இந்திய அரசியல் அமைப்புச்சட்டம் இந்த நாட்டின் பிரதமரைவிட உயர்வானது. இந்த நாட்டைவிட உயர்வானது, அதனால்தான் பிரதமர்கள் உறுதிமொழி கொடுத்தும் நாங்கள் அரசியல் அமைப்புச் சட்டத்தில் திருத்தத்தைக் கொண்டுவர வேண்டும் எனப் போராடுகிறோம். அதை அவமதிக்கும் நோக்கம் இல்லை. ஆகவே இந்தித்திணிப்பு இல்லை என்று அரசியல் சாசனத்தில் உத்தரவாதம் வேண்டும் எனக்கேட்டுப் போராடுகிறோம்.

தேசிய கீதத்தைப் பாட மாட்டோம் என்று கூறுவது தேசிய அவமதிப்பாகும் என்று தொடரப்பட்ட வழக்கில் தேசிய-கீதத்தைப்பாட மறுப்பது தேசிய அவமரியாதை ஆகாது என உச்ச நீதிமன்றம் தீர்ப்புக் கூறி உள்ளது.

தமிழக சட்ட மன்றத்தில்கூட எம் ஜி.ஆர். அரசு அரசியல் அமைப்புச் சட்டத்தைத் திருத்த வேண்டும் எனத் தீர்மானம் போட்டு உள்ளது. அப்படி என்றால் எம். ஜி. ஆர். அரசு போட்டு உள்ள தீர்மானம் அரசியல் சட்டத்திற்கு எதிரான தீர்மானமா?

இந்தப் போராட்டத்தின்போது பதினைந்து ஆயிரம் திமு.க. வினர் முன் எச்சரிக்கை நடவடிக்கையாகக்கைது செய்யப்பட்டனர். அப்படி இருந்தும் தி. மு. க. வினர் ஊர்வலம் சென்றனர் அதன் இரு புறத்திலும் போலீசார் வந்து உள்ளனர்

அங்கிருந்த போலீஸ் அதிகாரிகளும் தி.மு.க.வினரை ஊர்வல மாகச் செல்ல அனுமதித்து இந்தி ஆதிக்க எதிர்ப்புப்போரில் ஈடுபட அனுமதித்து இருக்கிறார்கள். பிறகுதான் அவர்களைக் கைது செய்து உள்ளனர்.

இது எப்படி உள்ளது என்றால் ஒரு கடைக்காரனை ஐம்பது பேர் சேர்ந்து கொலை செய்யப் போகிறோம் என்று போலீசுக்கு தகவல் சொல்லி அதற்குப் போலீசாரே பாதுகாப்பாக வந்த பிறகு கடைக்காரனைக் கத்தியால் குத்தும்வரை காத்திருந்து குத்திய பின்பு கைது செய்வது போல் உள்ளது.

இந்தப் போராட்டத்தின் போது வன்முறைச் சம்பவங்கள் இல்லை. போக்குவரத்துப் பாதிக்கப்படவில்லை. ஆகவே இது, இ. த. ச. 188-ன் படியோ மற்ற பிரிவுகளின் கீழோ குற்றம் ஆகாது.

இவர்கள் செய்த ஒரே குற்றம் தடை உத்தரவு இருக்கிறது எனத்தெரிந்தும் கூட்டமாகக் கூடியதுதான். இது தவிர எந்தக் குற்றங்களும் அவர்கள் செய்யவில்லை. ஆகவே இ.த.ச. 143 அல்லது 151 பிரிவின் கீழ்தான் குற்றவாளியாக முடியும்.

இவர்கள் ஏற்கனவே ஐந்து வாரகாலம் சிறையில் உள்ளனர். தமிழ் காக்கப் போராடும் தமிழர்கள் அடைக்கப்பட்டு உள்ளனர். ஏற்கனவே சிறையில் இருந்த நாட்களைத் தண்டனைக் காலமாகக் கருதி தமிழர் திருநாளுக்கு முன்பு அவர்களை விடுதலை செய்ய வேண்டும்.''

இவ்வாறு அவர் வாதிட்டார்.

இரு தரப்பு வாதங்களையும் கேட்ட மாஜிஸ்திரேட் பி. தனபால் மறுநாள் தீர்ப்புக் கூறுவதாகக் கூறி வழக்கைத் தள்ளி வைத்தார்.






மதுரை. ஜனவரி 14.

மதுரையில் மொழிப் போரில் குதித்த தென்னரசு உள்பட 124 தி.மு.க.வினர் விடுதலை செய்யப்பட்டனர். அவர்கள் மீது சாட்டப்பட்ட தேசிய அவமதிப்புச் சட்டக்குற்றம் நிரூபிக்கப்பட வில்லை என்று நீதிபதி தீர்ப்பில் கூறி உள்ளார்.

மதுரையில் கடந்த மாதம் (டிசம்பர்) 7-ந் தேதி நெல் பேட்டை அண்ணாசிலை அருகில் மொழிப் போரில் ஈடுபட்ட தி.மு.க. அமைப்புச் செயலாளர் எஸ். எஸ். தென்னரசு, நகர் மாவட்டச் செயலாளர் கே. தாவூது, அவைத்தலைவர் கே. பெரி யாண்டி, முன்னாள் கவுன்சிலர் ஆறுமுகம், இளைஞர் அணி அமைப்பாளர் கா. பாண்டியராசன், மாணவர் அணி அமைப் பாளர் கொ. குபேந்திரன், பேச்சாளர் விடுதலை ரத்தினம் உள் பட எழுபத்தி இரண்டு பேர் கைதாகி மதுரைச் சிறையில் காவலில் வைக்கப்பட்டனர்.

அதே நாளில் கட்டபொம்மன் சிலை அருகே கைது செய்யப் பட்ட சோ. காவேரி மணியம் (முன்னாள் எம்.எல்.ஏ.) நகர் துணைச் செயலாளர் க. இசக்கி முத்து, வி.டி.சி. முதல்வர் ஜெக தீசன் பொதுக்குழு உறுப்பினர்கள் இரா. வேலு, மு. திருமலை ராஜன், பேச்சாளர் மிசா. வையை நம்பி நகர் மாவட்ட மகளிர் அணி துணைத் தலைவி லீலாவதி உள்பட ஐம்பத்தி இரண்டு பேர் மதுரைச் சிறையில் காவலில் வைக்கப்பட்டனர்.

இந்த இரண்டு அணிகளைச் சேர்ந்த நூற்றி இருபத்தி நான்குபேர் மீதான வழக்கு விசாரணை மதுரை நீதித்துறைத் தலைமை மாஜிஸ்திரேட் பெ. தனபால் முன்னிலையில் நடந்து வந்தது.

124 பேரும் 38 நாட்கள் சிறையில் இருந்தனர். அவர்கள் மீதான வழக்கு விசாரணை நேற்று முன்தினம் முடிவடைந்தது.

நேற்று (செவ்வாய்) மாலை அனைவரும் நீதிமன்றத்திற்குள் கொண்டு வரப்பட்டனர் மாஜிஸ்திரேட் பெ. தனபால் தீர்ப்புக் கூறினார். அதில் தி.மு க. வினர் மீது போடப்பட்ட தேசிய அவமதிப்புத் தடுப்புச் சட்டப் பிரிவின் கீழான குற்றம் நிரூபிக்கப்படவில்லை என்றும் தி.மு.க. வினர் மீதான இ.த.ச. 143, 188வது பிரிவின் கீழ் உள்ள குற்றம் நிரூபிக்கப்பட்டு உள்ளதாகவும் அதற்காக அவர்களுக்கு ஐந்து வாரக் கடுங்காவல் தண்டனை விதித்தும் அவர்கள் அனைவரும் இந்த தண்டனையை ஏற்கனவே அனுபவித்து விட்டதால் விடுதலை செய்வதாகவும் கூறினார்.

மாஜிஸ்திரேட் பெ. தனபால் தனது தீர்ப்பில் கூறி இருப்பதாவது :-

தி.மு.க.வினர் சட்ட விரோதமாகக்கூடி இந்திய அரசியல் அமைப்புச் சட்ட நகலை எரித்ததாகவும், அதன் காரணமாக இந்திய தேசிய அவமதிப்புத் தடுப்புச் சட்டப் பிரிவு 2-ன் கீழ் குற்றம் புரிந்ததாகக் கூறப்பட்டு உள்ளது. தி.மு.க வினர் தங்களுடைய விசாரணையின்போது மேற்கண்ட குற்றச்சாட்டை மறுத்துள்ளனர். எனவே, மேற்கண்ட அரசியல் அமைப்புச் சட்டம் பிரிவு 343 பாகம் 17ஐ எரித்தார்களா என்பதையே நாம் பார்க்க வேண்டும். சம்பவ இடத்தில் இருந்து கைப்பற்றப்பட்ட சான்றுகள் பாதி எரிந்தும் எரியாத பேப்பர்கள் ஆகும். அரசுத்தரப்பில் மேற்கண்ட வாசகம் அரசியல் அமைப்புச் சட்டப்பிரிவின் நகல்என்றும் அதை எரித்தது குற்றம் என்றும் கூறப்பட்டு உள்ளது. தி.மு.க.வின் வழக்கறிஞர்கள் பி. டி. ஆர். பழனிவேல்ராசன், பொன். முத்துராமலிங்கம் ஆகியோர் குறிப்பிட்டதுபோல் அவைகள் யாரிடமிருந்து கைப்பற்றப்பட்டன என்று கூறப்படவில்லை. எனவே தி.மு.க. வினர் அதைத்தான் எரித்தார்கள் என்பதற்த எந்தவிதமான சாட்சியமும் இல்லை. தி.மு.க.வினர் கையில் இருந்த பேப்பரை எரித்தார்கள் என்று மட்டும்தான் சாட்சி கூறியுள்ளார்.

ஆகவே தி.மு.க.வினர் இந்திய அரசியல் அமைப்புச்சட்ட 343-வது பிரிவின் கீழான நகலை எரித்தார்கள் என்று கொள்ள முடியாது. அந்த வகையில் தி.மு.க. வினர் மீது கொண்டு வரப்பட்ட இந்திய தேசிய அவமதிப்புத் தடுப்புச்சட்டப் பிரிவு 2-ன் கீழான குற்றச்சாட்டு நிரூபிக்கப்பட்டதாகக் கொள்ள முடியாது. அவ்வாறே நானும் முடிவுக்கு வருகிறேன்.

தி.மு.க.வினர் இந்திய தேசிய அவமதிப்புத் தடுப்புச் சட்டம் பிரிவு 2-ன் கீழான குற்றச் சாட்டு நிரூபிக்கப்படவில்லை என்று முடிவு செய்து அப்பிரிவின் கீழ் தி. மு. க. வினரை விடுதலை செய்தும் தி மு.க. வினர் மீது கொண்டு வரப்பட்ட இ.த.ச. பிரிவு 143 மற்றும் 188-வது பிரிவுகளின் குற்றச்சாட்டு சந்தேகத்திற்கு

இடமின்றி நிரூபிக்கப்பட்டதாகக்கண்டு தி.மு.க வினரை வின வியபோது குறைந்த தண்டனை கொடுக்க வேண்டும் என்று கூறினார்கள். எனவே தி.மு.க. வினர்களுக்கு இ.த.ச. பிரிவு 143 வது பிரிவின் கீழ் ஐந்து வார கடுங்காவல் தண்டனையும் இ த.ச. பிரிவு 188-வது பிரிவின் கீழ் 4 வார கடுங்காவல் தண்டனையும் விதித்து தண்டனையை ஏக காலத்தில் அனுபவிக்க வேண்டும் என்றும் ஏற்கனவே காவலில் இருந்த காலத்தைக் கழித்து விடுதலை செய்கிறேன்."

இவ்வாறு அவர் அதில் குறிப்பிட்டுள்ளார்.

விடுதலை செய்யப்பட்ட 124 தி.மு.க. வினருக்கும் மதுரை நகர் மாவட்ட தி. மு. க. சார்பில் கைத்தறி ஆடைகள் அணிவிக்கப்பட்டன.

நீதிபதியின் தீர்ப்பைக் கேட்பதற்கு தி. மு. க. தொழிற் சங்கப் பேரவைச் செயலாளர் சொ. பால்ராஜ் ஆ. சந்திரன், துரைராஜ், எம். எஸ். ராஜாமணி, வட்டச் செயலாளர்கள் அ. குருசாமி, நாராயணன், செ. போசு, மகபூப்ஜான், மற்றும் ஏராளமான தி. மு. க. வினர் வந்து இருந்தனர்.

தி. மு. க. வினர் சார்பில் வழக்கறிஞர்கள் பி.டி.ஆர். பழனி வேல்ராஜன், பொன் முத்துராமலிங்கம் எம்.எல்.ஏ., பி. முருகேசன், கண்ணன், தவமணிவேல், கே. பி. பெரியசாமி, வி. வேலுச்சாமி, கரு தியாகராசன், எஸ். சங்கர், டேனியல் மனோகரன், குழந்தைவேலு, மோகன்குமார், ராமகிருஷ்ணன், சவுந்திரபாண்டியன், ஏ. பழனியாண்டி, முத்துப்பாண்டியன், நாகராசன், கே தங்கசாமி, குணசேகரன், எம். ஏ. முகமது இப்ராகிம், டி. மாயாராஜன், சிங்காரவேலு, எல். தம்புராசு, அருணாசலம், பொன். அன்பழகன், ஆசைத்தம்பி, ஹனிபோட்சா, சி. கதிரவன் ஆகியோர் ஆஜரானார்கள்.



சர்வாதிகாரம்
தலைவிரித்தாடும்
தாண்டவத்திற்கு
கொள்ளிக்கட்டையால்
எழுதிய பெயர்தான்
'மிசா!'

கொடுமை
கொடூரம்
வஞ்சகம்
பழிவாங்கும் படலம்

இவைகளால்
நசுக்கப்பட்ட
தோழர்களுக்கு
எதிர்வந்த
சோதனைகள்
ஏராளம்!

வரலாறு
குறித்துக்
கொள்ள வேண்டிய
அந்தச் சம்பவங்கள்
நினைவுக் குறிப்பிலிருந்து
இங்கே
தரப்படுகிறது.

# அரும்புச் செய்திகள்

## அரசாங்கம் பணிந்தது

நான் நாற்பதாண்டு காலமாக அரசியலில் இருக்கிறேன். கட்சிப்பணி, எழுத்துப்பணி தவிர எனக்கு வேறு பணிகள் கிடையாது. வியாபாரத்திற்கும் எனக்கும் எந்தச்சம்பந்தமும் இல்லை. இருப்பினும் என்னைத்தேசியப் பாதுகாப்புச் சட்டத்தில் பிடிப்பதற்குக் காரணம் எதுவும் கிடைக்காமல்-மக்களுக்குப்போய்ச் சேர வேண்டிய அத்தியாவசியப் பண்டங்களைக் கடத்தியதாகக் குற்றம் சாட்டி அந்தச் சட்டத்தின்படிதான் என்னைக் கைது செய்திருந்தார்கள்.

முதலில் எனக்கு அந்த உத்தரவை என்னிடம் காண்பிக்கவில்லை. இரண்டுவாரம் கழித்துத்தான் அந்த உத்தரவை நான் பார்த்தேன். வெளியில் வந்ததும் அரசாங்கத்திற்குக் கடுமையாக ஒரு கடிதம் எழுதினேன்.

அரசாங்கம் அந்த உத்தரவை ரத்து செய்து விட்டு, வேறு அரசியல் காரணங்களால்தான் நான் கைது செய்ய பட்டேன் என்று பிரகடனப்படுத்தாவிட்டால் என்னைக் கைது செய்ய உத்தரவிட்ட மாவட்ட ஆட்சித் தலைவர் மீது வழக்குப்போடுவேன்-என்று வழக்கறிஞர் மூலம் இராமநாதபுர மாவட்ட ஆட்சித் தலைவருக்கு 'நோட்டீஸ்' கொடுத்தேன். எனது நோட்டீஸ் கிடைத்த ஒரு மாதத்திற்குள் அரசாங்கம் பணிந்து விட்டது.

''தென்னரசு தேசியப் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ் கைது செய்யப்பட்டது முற்றிலும் அரசியல் காரணத்தின் அடிப்படையில்தானே தவிர அத்தியாவசியப் பொருள்களைக் கடத்தினர் என்ற சட்டத்தின்படி அல்ல'' என்று எழுத்துமூலம் எனக்கு அறிவித்தது.

# வீட்டை இடிக்கத் திட்டம்

**1975** தொடக்கத்திலேயே மதுரையில் என் வீட்டைவணிகவரித்துறை அலுவலகத்திற்கு வாடகைக்கு விட்டு விட்டு, நான் கலைஞர் நகரிலேயே ஒரு சிறிய வாடகை வீட்டிற்குக் குடியேறியிருந்தேன்.

1976 ஜனவரியில் கழக அரசு கலைக்கப்பட்ட மறு நிமிடமே கைது செய்யப்பட்டேன். சில நாட்கள் கழித்து என் இல்லத்தை வருமானவரித்துறையினர் சோதனை இடத்திட்டமிட்டுவருவதாக எனக்குத் தெரிந்தது. நான் கலங்கவில்லை. நன்ருகப் பார்க்கட்டும் என்று அலட்சிய மாகவே இருந்தேன்.

தலைவர் கலைஞரின் பணம், நகை, முதலியவற்றை என் இல்லத்தில் நான் புதைத்து வைத்திருப்பதாகவும், அதைப்போல நண்பர் கோ. சி. மணியும் மறைத்து வைத்திருப்பதாகவும் மத்திய அரசுக்குத் தவருன தகவல் கிடைத்திருக்கிறது. அப்போது மதுரையில் எஸ் பி. யாக இருந்த திரு. ராஜசேகர நாயர் அவர்கள் அதற்கு இடந் தரவில்லை. கலைஞரின் சொத்துக்களை தென்னரசு புதைத்து வைத்திருந்தால் அவர் வீட்டை வாடகைக்கு விட்டிருக்க மாட்டார். அவர் இப்போது குடியிருக்கும் வாடகை வீட்டிலும் புதைக்க முடியாது'' என்று கூறியிருக்கிருர். அதற்குப் பிறகு என் வீட்டை இடிக்க இருந்த திட்டம் கைவிடப்பட்டது.

# வினை விடுமா?

எனக்கு மாரடைப்பு வந்த மறு நாளே நான் கைதாகினேன். தனியார் மருத்துவ மனையில் இருக்க எனக்கு அனுமதியில்லை. ஆகவே சிறையிலிருந்து திங்கட் கிழமை தோறும் அரசு மருத்துவமனைக்கு வந்து சிகிச்சை பெற்றுப் போய்க்கொண்டிருந்தேன்.

ஒரு வருஷத்திற்கு உப்பில்லாமல் சாப்பிடவேண்டும், இல்லாவிட்டால் இரண்டாவது 'அட்டாக்' வருவதற்கு வாய்ப்பு வந்துவிடும் என்று இருதய சிகிச்சை நிபுணர்கள் கூறிவிட்டார்கள். இதற்கிடையில் என்னை 'மெடிக்கல் போர்டு'க்கு அனுப்பி பூர்வாங்கமாகப் பரிசோதித்து அர சுக்குத் தகவல் தரும்படி அரசாங்கத்திடமிருந்து சிறைக்கு

ஒரு உத்தரவு வந்தது. அதன்படி ஒருபெரிய டாக்டரிடம் என்னைக் கொண்டு போனார்கள். எல்லாச் சிகிச்சைகளும் நடந்தன. எனக்குத்துணை யாரும் இல்லை. மாலையிலேயே சிறைக்குத் திரும்பி விட்டேன்.

மெடிக்கல் போர்டின் தீர்ப்பு இரண்டு வாரங்கள் வரை கிடைக்கவில்லை. மறு வெள்ளிக்கிழமை என்னைச் சந்தித்த என் குடும்பத்தார் கூறியது-''ரூபாய் ஐயாயிரம் தந்தால் உங்கள் வீட்டுக்காரரை நாளைக்கே விடுதலை செய்யவேண்டும், இல்லா விட்டால் அவர் உயிருக்கே ஆபத்துஎன்று எழுதுகிறேன்'' என்று அந்த டாக்டர் ஒரு தரகரை என் வீட்டுக்கு அனுப்பினார். ''அதற்கு நாங்கள் இணங்கவில்லை அவருக்கு ஹார்ட் அட்டாக் வந்தது உண்மை அதை எழுதினால் போதும் அதற்கு எதற்காகப் பணம் தரவேண்டும் என்று திருப்பி அனுப்பி விட்டோம்''—என்றார்கள்.

மறு வாரம் மெடிக்கல் ரிப்போர்ட் வந்தது. அதில் ''தென்னரசுக்கு இருதயம் நார்மலாகவே இருக்கிறது. அவர் சிறையில் நீடிப்பதால் ஆபத்துஇல்லை'' என்று டாக்டர் கூறியிருந்தார். இரண்டாண்டுகளுக்குப்பிறகு அதே டாக்டர் லஞ்ச ஒழிப்பு போலீசாரால் கைது செய்யப் பட்டு இன்னும் நீதிமன்றத்திற்கு அலைந்து கொண்டு யிருக்கிறார். வினை விடுமா?

## காலில் விழுந்த கலெக்டர்

இராமநாதபுர மாவட்டத்தில் ரெ. சுப்பிரமணியம் என்பவர் கலெக்டராக இருந்தார். எமர்ஜென்சி காலத்தில் கூட நியாயமாகத்தான் இருந்தார். ஆனால் ஆட்சியைக் கலைத்த அன்றே அவர் ருத்ரதாண்டவம் ஆடத்தொடங்கி விட்டார்.

தலைவர் கலைஞருக்கு நெருக்கமானவர்கள் அனைவர் மீதும் பொய் வழக்குப்போட்டார். தி.மு.க. பஞ்சாயத்துத் தலைவர்கள் மீதெல்லாம் நம்பிக்கையில்லாத் தீர்மானம் கொண்டு வரத்தூண்டி அவர்களைப் பதவிலியிருந்து நீக்கினார். எங்களுடைய மனைவி மக்களுக்குப் பேட்டி கொடுக்க மறுத்தார். பெரிய வழக்கறிஞர், மாநில பார் கவுன்சில்தலைவர் ராஜையா போன்றவர்களைத் தனக்கு முன்உட்காரக் கூடாது என்று கூறி நிற்கவைத்துப் பேசினார். அதிகாரத்தை எவ்வளவு துஷ்பிரயோகம் செய்ய முடியுமோ அவ்வளவையும் செய்தார்.

விருதுநகர் எண்ணெய் வியாபாரிகளை, கவர்னர் அழைக்கிறார் என்று மதுரைக்கு அழைத்து—கலைஞர் எங்களை மிரட்டி ரூபாய் ஐந்து லட்சம் வாங்கிக் கொண்டார்—என்று எழுதிக்கொடுக்கச் சொன்னார். அவர்கள் கவர்னர் எதிரிலேயே—நாங்கள் பொய்யாக எழுதித்தர மாட்டோம்—என்று முகத்திலடித்தாற்போல் கூறிவிட்டார்கள். மிசா காலம் முடிந்து வெளியில் வந்ததும் சில வியாபாரிகளும், அரசியல் வாதிகளும் கலெக்டர் மீது ஷா கமிஷனுக்குப் புகார் எழுதினர். அதுவும் விசாரணைக்கு வந்தது. ஆனால், கலெக்டர், அவர்களைத் தேடிப் போய் அவர்கள் காலில் விழுந்து குற்றச் சாட்டுக்களை வாபஸ் வாங்க வைத்துவிட்டார்.

## உதவித் தொகை . . .

தலைவர் கலைஞருக்கு, ஒவ்வொரு கழகத்தொண்டனின் பொருளாதார நிலை தெரியும். அந்த அடிப்படையில் மிசாவில் இருந்த பலரது குடும்பங்களுக்கு மாதந்தோறும் உதவித் தொகை அனுப்பினார். சிலருக்கு அனுப்பவில்லை. அவர்களெல்லாம் என்னைத்தான் தூற்றினார்கள். அதற்கும் எனக்கும் துளியும் சம்பந்தமில்லை. கலைஞராக யோசித்துச் செய்த காரியம் அது. வீண்பழிகள் விலை போகாது என்பதை நானறிந்தவன். அதற்காக நான் வருத்தப்படவில்லை. வருத்தப்பட்டு விவகாரம் செய்திருந்தால் இன்று அவர்கள் எனக்கு நண்பர்களாக இருந்திருக்க முடியாது.

## 'மிசா'விலை–ஒரு லட்சம்

தேவகோட்டையைச் சேர்ந்த இராம. வெள்ளையன் இராமநாதபுர மாவட்ட தி. மு. க. வில் மூத்தவர்களில் ஒருவர். இடைக்காலத்தில் கட்சியின் வரவு, செலவு விவகாரத்தினால் கட்சி மேலிடம் அவர்மீது ஒழுங்கு நடவடிக்கை எடுத்திருந்தது. அவருக்கும் ஈ. வெ. கி. சம்பத்திற்கும் ரகசியத் தொடர்பு இருந்தது. இது தலைமைக்குத் தெரிந்து விட்டது. இருப்பினும் அவரும் மிசாவிற்கு வந்து விட்டார். வந்து விட்ட பிறகு என்னசெய்ய முடியும்? ஒன்றாகத்தான் இருந்தோம். அவருக்கு தினசரி பொய் மூட்டைகளை அவிழ்த்து விடுவது தொழிலாகி விட்டது. ''கலைஞரை வீட்டிலேயே சிறைவைத்துவிட்டார்கள்.

தயாளு அம்மையாரைக்கூட யாரும் பார்க்க அனுமதி கிடைப்பதில்லை'' என்றெல்லாம் தொண்டர்கள் மத்தியில் பிரச்சாரம்செய்தார். ஒரு நாள் திடீரென்று 'வெள்ளையன் விடுதலை' என்றார்கள். நம்பமுடியவில்லை. ஒரு லட்சம் செலவு செய்து விடுதலை வாங்கியதாகப் பின்னர் தெரிந்தது. யாருக்குக் கொடுத்திருப்பார் என்பதை நான் சொல்லவேண்டியதில்லை!

## சோணையாவின் கனவு

**கட்**சியில் மூத்தவர்களில் ஒருவர் திருப்புவனம் சோணையா, அவர் திருப்புவனம் ஒன்றியப் பெருந்தலைவராகவும், மானாமதுரை சட்டமன்ற உறுப்பினராகவும் இருந்தார். அவர் மிசாவில் இருந்தபோது அவரது உடல் நிலைபெரிதும் பாதிக்கப்பட்டது. 'இந்த வாரம் இறுதிக்குள் அவர் கதை முடிந்துவிடும்' என்கிற அளவிற்கு அவர் உடல் நொடித்துவிட்டது.

''அண்ணே, நான் இன்னும் இரண்டு மூன்று வாரத்திற்குள் கண்ணை மூடிவிடுவேன். சாத்தூர் பாலகிருஷ்ணன் குடும்பத்திற்குப்போய் ஆறுதல் சொன்னதுபோல், கலைஞர் எங்கள் வீட்டுக்கும் வந்து எனது சவ ஊர்வலத்திலும் கலந்து கொள்ள ஏற்பாடு செய்யுங்கள் அதுதான் எனது கடைசி ஆசை'' என்று அழுதார். சில வார்த்தைகளைச் சொல்ல முடியாமல் கைசாடையால் காண்பித்தார். நான், உடனே சோணையாவின் உடல்நிலை பற்றியும், அவரது கடைசி விருப்பம் குறித்தும் தலைவர் கலைஞருக்கு எழுதினேன். மறுவாரத்தில் ஒரு முக்கிய நண்பர் மூலம் சோணையாவின் உடல்நிலை பற்றி, விசாரித்துக் கேட்டறிந்து கொண்டார். அதிர்ஷ்ட வசமாக சோணையா தப்பித்துக் கொண்டார். இன்று அவருக்குத் தணியாத ஆசை என்ன தெரியுமா? தலைவர் கலைஞர் அவர்களை அழைத்துத் தனக்கு மணி விழா நடத்த வேண்டும் என்பதுதான்! பொறுங்கள்; நடத்தி விடலாம்! என்று நான் உறுதி கூறியிருக்கிறேன்.

## மறைவுகள்

**கொ**ள்கைவீரன் முத்து வடுகு என்ற சுந்தரராசன். அவர் அருப்புக் கோட்டை வட்டச் செயலாளராக இருந்தார். பசும்பொன் முத்துராமலிங்கத்தேவர் குடும்பத்திற்கு

மிகவும் நெருக்கமானவர். விசுவாசத்திற்கும், எடுத்த முடிவை மாற்றாதிருக்கும் உறுதிக்கும் இலக்கணமானவர். கொஞ்ச நாட்களாக அவர் சிறையில் மௌனமாக இருந்தார். உடல் நலிந்து கொண்டே வந்தது. பெரிய மருத்துவமனைக்கு அனுப்பிப்பார்த்தோம். ஆசனவாயில் புற்றுநோய் என்று தீர்ப்புக் கிடைத்தது. இறுதிவரை மனங் கலங்காமல் இருந்து விடுதலையானார். வெளியில் வந்த மறு மாதம் காலமாகி விட்டார். அவரது இறுதி ஊர்வலம் அவரது சொந்தக் கிராமமான உளுத்திமடையில் நடந்தது. ஆடவரும் பெண்டிருமாக ஆயிரக்கணக்கில் கலந்து கொண்டார்கள். அவருக்கு அவரது நஞ்செய் நிலத்திலேயே சமாதி அமைக்கப் பட்டிருக்கிறது.

மிசாவில் இருந்தபோது பலரது குடும்பங்களில் 'சாவு'கள் ஏற்பட்டன—என் தந்தையார் மறைந்தார், திரு. காதர்பாட்சாவின் தாயார் மறைந்தார், சிவகங்கை திருஞானத்தின் தாயார் மறைந்தார், வத்திராயிருப்பு செயலாளர் சொக்குவின் மகள் மறைந்தார்.

## வெறியன் கயூம்

**செ**ன்னைச் சிறையில் மு. க. ஸ்டாலினையும், வீராச்சாமியையும், சிட்டிபாபுவையும் உதைத்துத்துவைத்த வெறியன் கயூம் என்கிற ஜெயிலர் மதுரைக்கு மாற்றலாகி வந்தார். வந்ததும் மிசா கைதிகளை 'மிசா நாய்கள்' என்றே அழைத்து வந்தார். ஒருநாள் எல்லோரும் அவர் உள்ளே வந்தால் தோசைக் கரண்டியால் சாத்துவது— என்று முடிவை எடுத்தார்கள். மறுநாள் திட்டப்படியே கலவரம் மூண்டது. உடனே சூப்ரெண்டெண்ட் பெருமாள் தேவர் வந்து, மரியாதைக் குறைவாக நடந்துகொண்ட ஜெயிலருக்காக வருத்தம் தெரிவித்தார். பின்னர் அமைதி ஏற்பட்டது.

அதே ஜெயிலர், நான் வேலூருக்குப் போனபிறகு வேலூருக்கு மாற்றலாகி வந்தார். ஒரு நாள் அவர் என்னைச் சிறை நூலகத்தில் சந்தித்தார்.

"பெருமாள் தேவர் ஒரு சூப்ரெண்டா? கைதிகளுக்காக மன்னிப்புக் கேட்பது மகாக் கேவலம்! நீங்கள் இந்த ஜெயிலை மதுரை ஜெயில் மாதிரி நினைத்து விடாதீர்கள்!" என்று உருட்டிப்பார்த்தார்.

"எனக்கு எல்லாச் சிறையும் ஒன்றுதான். விதிகளுக்குக் கட்டுப்பட்டு நடந்தால் வீடும் சிறையும் ஒன்று தானே!'' என்றேன்.

அந்த நேரத்தில் அங்கு வந்த சிறை டாக்டர் அருணாசலம் "அவரிடம் அதிகம் பேசாதீர்கள்! மதுரையிலிருந்து வந்திருக்கும் இதயநோயாளி!'' என்று சொன்னதும் கயூம் போய்விட்டார். (பெருமாள்தேவர் இன்று D.I.G. யாகப் பதவி உயர்வு பெற்றிருப்பதாக அறிந்து நாங்கள் பெரிதும் மகிழ்கிறோம்)

## கலைஞரின் பேருதவி

**வே**லூர் சிறையில், மறக்கமுடியாத ஒரு உயிரோவியம் உலவியது. ஆம் அவர் பெயர் மாசிலாமணி அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் அவர் படித்துக் கொண்டிருந்தபோது, ஒரு கொலை வழக்கில் சிக்கி, சந்தர்ப்ப சாட்சியங்களை வைத்துத் தண்டிக்கப்பட்டவர். ஆனால் அவர் நிரபராதி. சிறையில் அவர் எங்களுக்கு பெரிதும் உதவியாக இருந்தார். தற்போது, தலைவர் கலைஞர் அவர்களின் தளராத முயற்சியால் அவர் விடுதலையடைந்து அண்ணா அறிவாலயத்தில் பணியாற்றிக் கொண்டிருக்கிறார்.



# வீர மறவர்கள் பட்டியல்

1976-ல்
இந்தியாவில்
இரண்டாவது
சுதந்திரப்போர்-
நெருப்பாறு ஓடிய
நெருக்கடி காலம்!

ஜனநாயகத்தின்
கழுத்து
நெரிக்கப்பட்ட நேரம்!

ஏன் எதற்கு
என்ற
முகாந்திரம்
கூறப்படாது
கைது
காராக்கிரகம்!

குடும்பத்திற்கு
பாதுகாப்பு விளக்காக
விளங்கிய
குடும்பத் தலைவர்கள்
சர்வாதிகாரமாக
இழுத்துச்
செல்லப்பட்டனர்-

அவர்கள்
வசதிமிக்கவர்கள்
அல்லர்-
ஆயினும்
நெஞ்சுரம் கொண்டோர்.

அப்போது
சிறை என்பது
எரிமலை
புலிக்குகை!

அங்கு
வீர மறவர்கள்
செய்த தியாகம்
கழக வரலாற்றுக்கும்
வளர்ச்சிக்கும்
வலிமைசேர்த்தது!

பாண்டியன்
திருநகர் மண்ணில்
சிறையிருந்தோர்
பெயர்கள்
இங்கே தொகுத்துத்
தரப்படுகிறது.





# தி. மு. க.

1. கே.வி. விக்ரமாதித்தராசன்
மாவட்ட அவைத் தலைவர்,
45, கச்சேரித் தெரு,
திண்டுக்கல்.

2. கே.ஜி. அந்தோணி,எம்.சி.
21, பேட்டைரோடு,
திண்டுக்கல்-2.

3. செ. தம்பித்துரை,
ஒன்றியச் செயலாளர்
ரெட்டியார் சத்திரம்,
திண்டுக்கல் வட்டம்.

4. வி. எஸ். லெட்சுமணன்,
ஒன்றியச் செயலாளர்,
மேட்டுராசக்காபட்டி,
திண்டுக்கல்-2.

5. கே. எம். எம். மேத்தா,
நகராட்சித் தலைவர்,
பெரியகுளம்.

6. பெ. மலைச்சாமி, எம்.ஏ.,
ஒன்றியச் செயலாளர்,
சாணிப்பட்டி,
மேலூர் வட்டம்.

7. எம். மதுரை வீரன்,
முன்னாள் எம்.சி.,
15/16 கீழவெளி வீதி,
மதுரை-1.

8. வி.டி. சீனி,
18, கரிகாலன் லாரி-
நிலையம், கீழவெளி வீதி,
மதுரை-1.

9. எஸ். லெட்சுமணன்,
224, கீழவெளி வீதி,
மதுரை-1.

10. கே. கிருட்டிணமூர்த்தி,
மாஜி எம்.எல்.ஏ., பழனி,
மதுரை மாவட்டம்.

11. கு. திருப்பதி, பி.ஏ.,பி.எல்.,
மாநகரச் செயலாளர்,
37, தெற்கு வெளி வீதி,
மதுரை-1.

12. பொன். முத்துராமலிங்கம்,
மாவட்டச் செயலாளர்,
5-ஏ, தாமசு தெரு,
நரிமேடு, மதுரை-2.

13. என். நெல்லைமாறன்,
பொதுக்குழு உறுப்பினர்,
அழகாபுரி, சாப்டூர் அஞ்சல்
(வழி) திருமங்கலம்

14. சொ. காவேரிமணியம்,
பி.எஸ்.ஸி.,பி.எல்.,
அவனியாபுரம்,
மதுரை-12.

15. எஸ். அக்கினிராசு,
பொதுக்குழு உறுப்பினர்,
கூத்தியார்குண்டு,
மதுரை-6.

16. கா. வைகை நம்பி,
பேச்சாளர்,
80, தெற்குப்பெருமாள்
மேஸ்திரி வீதி, மதுரை-1.

17. பழக்கடை எஸ்.பாண்டியன்
79, யானைக்கல்,
மதுரை-1.

18. துரை. எழில்விழியன்,
பொதுக்குழு உறுப்பினர்
பெரியார் நகர்,
(சதாசிவ நகர்)
வண்டியூர், மதுரை.

19. பொ. இராமச்சந்திரன்
17, திருவேங்கடபுரம்,
ஆழ்வார்புரம், மதுரை-2.

20. ஒக்கூர் எஸ்.எஸ்.
மணிவாசகம்,
30, சுங்கம்பள்ளிவாசல்
தெரு, மதுரை-1.

21. விடுதலை ரத்தினம்,
பேச்சாளர்,
மீன்காரக் காம்பவுண்டு,
கண்மாய்க்கரைத் தெரு,
எம்.கே.புரம், மதுரை-11.

22. தீப்பொறி ஆறுமுகம்,
47, பி. கே. பவனம்,
1-வது மெயின்ரோடு,
ஜெய்ஹிந்த்புரம்,
மதுரை-11.

23. தேவகிபாண்டியன்,
செல்லூர், மதுரை-1.

24. கே. பெருமாள்,
ஒன்றியச் செயலாளர்,
பிடாரி கோயில் தெரு,
திருவாடானை.

25. சி. நாராயணன்,
ஒன்றியச் செயலாளர்,
சிவகங்கை.

26. சி. சேதுராமன்,
முன்னாள் எம்.எல்.ஏ.,
சிவகங்கை.

27. ஏ. சண்முகம்,
பி.ஏ., பி.எல்.,
சிவகங்கை.

28. என். பாண்டியன்,
(மாணவர் தலைவர்,
ஆர்.டி.எம்.கல்லூரி)
வடக்குக் கீரனூர்,
கருஞ்சுத்தி,
இளையாங்குடி வழி

29. பி. இரத்தினம்,
(மாணவர் தலைவர்,
ஆர்.டி.எம். கல்லூரி)
கோட்டூர், வழி தேனி,
மதுரை மாவட்டம்.

30. சொக்கு (எ) கருப்பையா,
நகரச் செயலாளர்,
வத்திராயிருப்பு,
திருவில்லிபுத்தூர் வட்டம்

31. ச. அமுதன்,
மாவட்டத் துணைச்
செயலாளர்,
திருவில்லிபுத்தூர்.

32. ஆர். பி. ஆதிநாராயணன்
சமத்துவ இல்லம்,
இராசபாளையம்.

33. ஜி. வரதராசன்,
மாவட்டப் பொருளாளர்,
சாத்தூர்,
முகவை மாவட்டம்.

34. பெரி. அழகு,
மாவட்ட அவைத் தலைவர்,
சிங்கம்புணரி,
திருப்பத்தூர் வட்டம்.

35. ராம. வெள்ளையன்,
நகரவைத் தலைவர்,
பி.என்.ஏ. வீதி,
தேவகோட்டை.

36. சித. சிதம்பரம்,
முன்னாள் எம்.எல்.ஏ.,
19, சாமிநாதன்
செட்டியார் தெரு,
முத்துப்பட்டணம்,
காரைக்குடி.

37. இரா. முத்துமன்னன்,
ஒன்றியச் செயலாளர்,
உப்பூர்,
ராசசிங்கமங்கலம் வழி

38. பி. இரத்தினம்,
மாவட்டப் பிரதிநிதி,
78, குப்பையாதேவர்-
சந்து,
மேலத் தெரு, விருதுநகர்.

39. எம். சுந்தரராசன்,
நரிக்குடி ஒன்றியச்
செயலாளர்,
உழுத்திமடை,
கட்டனூர் அஞ்சல்,
திருப்பாச்சேத்தி வழி

40. திருஞானம்,
நகரச் செயலாளர்,
சிவகங்கை.

41. ஏ. பாலுச்சாமி,
கீழத்தெரு, திருச்சுழி,
அருப்புக்கோட்டை வட்டம்

42. சுப. தங்கவேலன்,
பி. கொடிக்குளம் அஞ்சல்
வழி பொட்டக வயல்,
பரமக்குடி வட்டம்

43. மா. தங்கப்பாண்டியன்,
மாவட்டச் செயலாளர்,
மல்லாங்கிணறு,
வழி விருதுநகர்

44. காதர் பாட்சா என்ற
வெள்ளைச்சாமி,
கமுதி.

45. ஆர். எஸ். மணி,
ஊராட்சி மன்றத் தலைவர்,
பாண்டியூர்,
கங்கைகொண்டான்
அஞ்சல்,
வழி நயினார்கோயில்,
பரமக்குடி வட்டம்.

46. பி. பாலகிருஷ்ணன்,
நகரச்செயலாளர்,
மன்னார்கோட்டை ரோடு,
சாத்தூர்,
(மறைவு 1-4-76)

47. எஸ்.எஸ். தென்னரசு,
கலைஞர் கருணாநிதி நகர்,
மதுரை,

48. எஸ். காசிம்,
பொதுக்குழு உறுப்பினர்,
காசிம் சைக்கிள் கம்பெனி,
திருப்பத்தூர் ரோடு,
தேவகோட்டை

49. டி. சோணையா,
முன்னாள் எம்.எல்.ஏ.,
புதூர், திருப்புவனம்,
முகவை மாவட்டம்

50. இரா. கிருட்டிணன்
முல்லைக்குளம்,
கட்டிக்குளம் அஞ்சல்
வழி மானாமதுரை

51. எஸ். சாகுல் அமீது என்ற
வாஹித்,
அன்பு உணவு விடுதி,
மேல்கரை, மானாமதுரை

52. எஸ். இராசாங்கம்,
தி.மு.க. செயலாளர்,
கணபதிபட்டி,
பிரான்பட்டி அஞ்சல்,
வழி புழுதிபட்டி.

53. கே பி எஸ். பாண்டியன்,
மாவட்ட அவைத் தலைவர்,
11/4டி, செவந்திபுரம்
1-வது சந்து,
முத்துராமன்பட்டி,
விருதுநகர்.

54. வி. மலைக்கண்ணன்,
மாவட்டச் செயலாளர்,
பன்னீர்செல்வம் தெரு,
வண்டல் அஞ்சல்
வழி சாலைக்கிராமம்,
பரமக்குடி.

55. அ. வே. அரவரசன்,
மாவட்டப் பிரதிநிதி,
5/163, கொல்லன்-
பட்டரைத் தெரு,
பரமக்குடி.

56. கே. ஏ. எஸ். அற்புதம்,
நகர் மன்றத் தலைவர்,
பரமக்குடி.

57. எஸ். பி. கிருஷ்ணன்,
நெல்லுக்கடை,
சிங்கம்புணரி.

58. எஸ். மாரிமுத்து,
செயலாளர் தி.மு.க.
இராமேசுவரம்.

59. எஸ். அகமது தம்பி,
செயலாளர், தி.மு.க.
மண்டபம்.

60. ஆ. குறள்பித்தன்,
கணேசபுரம்,
காரைக்குடி.

61. எஸ் ஏ. சேக் சுல்தான்,
மாவட்டத் துணைச்
செயலாளர்,
இராமநாதபுரம்.

62. மு. நடராசன்,
மேலக்கனிசரி,
மாங்குடி வழி,
முதுகுளத்தூர் வட்டம்.

63. கந்தசாமி,
நகரச் செயலாளர்,
4-பி, ஆளப்பசெட்டியார்
தெரு,

64. சி. சொக்கலிங்கம்,
ஒன்றியச் செயலாளர்,
தி. புதுப்பட்டி,
திருப்பத்தூர் வட்டம்.

65. வி. இராமநாதன்,
செயலாளர்,
முறையூர்,
திருப்பத்தூர் வட்டம்.

66. எம் இராசாக்கிளி,
சமஸ்கான் பள்ளிவாசல்-
தெரு,
திருப்பத்தூர்

67. எஸ். அகமது, நடுத்தெரு,
திருப்பத்தூர்.

68. எம். ஆர். சங்கரன்,
53-ஏ, தெற்கு பெருமாள்-
மேஸ்திரி வீதி, மதுரை-1.

69. ஏ. மாரியப்பன்,
99, டி.பி.கே. ரோடு,
மதுரை-1.

70. ஏ. ஆறுமுகம்,
முன்னாள் எம்.எல்.ஏ.,
பூலாம்பட்டி அஞ்சல்,
வழி எடப்பாடி,
சங்ககிரி தாலுகா,
சேலம் மாவட்டம்.

71. வீரபாண்டி
எஸ். ஆறுமுகம்,
பூலாவரி,
பூலாவரி அஞ்சல்.
சேலம் தாலுகா,
சேலம் மாவட்டம்.

# தி. க.

1. எஸ். சுப்பையா,
மாவட்ட தி.க. தலைவர்,
வாடிப்பட்டி,
நிலக்கோட்டை வட்டம்.

2. பி. கே. பி. பூமண்டலம்,
தலைவர்,
மெயின் ரோடு,
திண்டுக்கல்.

3. ஒ.வி. கே. நாகாத்தலிங்கம்
நகர தி. க. தலைவர்,
பழக்கமிஷன்மண்டி,
வடக்கு மாரட்டு வீதி,
மதுரை-1.

4. எஸ். கிருஷ்ணன்
மாவட்டப் பொருளாளர்,
தி.க. வழக்கறிஞர்,
நிலக்கோட்டை.

5. எஸ். வேலுச்சாமி
கே. ராமநாதபுரம்,
வேடசந்தூர் வட்டம்.

6. வி. பொன்னுச்சாமி
48, பெத்தையா பிள்ளை
தெரு,
இராசபாளையம்.

7. எஸ்.எஸ் கருப்பையா,
நகர தி.க. தலைவர்,
அருப்புக்கோட்டை.

# இ. கம்யூனிஸ்ட்

1. எஸ்.ஏ. தங்கராஜ், எம்.சி,
சோலைஹால் ரோடு,
திண்டுக்கல்.

2. வி. சந்திரபோஸ்
பூபதி ஆஸ்பத்திரி
மதுரை ரோடு,
உசிலம்பட்டி.

3. சா. இரும்பொறை
அம்மச்சியாபுரம்,
(வழி) தேனி.

4. எஸ் மாதவன்
131, அம்பலப்புளி பஜார்,
இராஜபாளையம்.

5. பி. குருசாமி
சேத்தூர்,
(வழி) இராஜபாளையம்.

6. பி. தங்கவேல்
முகவூர்,
(வழி) இராஜபாளையம்.

# ஜனசங்கம்

1. பி. வி. கிருஷ்ணன்
77/10, பாரதிபுரம்,
நாகல் நகர், திண்டுக்கல்.

3. பி. கே. இராமரத்தினம்
20ஏ, மகால், 6வது தெரு,
மதுரை-1.

2. கே.ஆர்.சூர்யா, பி.எஸ்சி.,
டி.எம்.ஐ.டி. (ஆட்டோ)
30, மகால், 8-வது தெரு,
மதுரை-1.

# ஆர். எஸ். எஸ்.

1. கே. என். ராஜாராம்,
எல்.எம்.இ.,
169, கீழவெளி வீதி,
மதுரை-1.

2. கே. விஸ்வநாதன்
வழக்கறிஞர்
89, வக்கீல் புதுத் தெரு.
109, பி.டி.ஆர். ரோடு,
மதுரை.

3. டி. ஆர். ராஜாராம்
எமனேஸ்வரம்,
பரமக்குடி.

4. பி. நெல்லையப்பன், பி.ஏ.,
3, வடக்கு ரத வீதி,
தூத்துக்குடி-2.

# சுயேட்சை

1. எஸ். பாண்டி
   திடீர் நகர்,
   மதுரை-1.

2. ஏ. செல்லத்துரை
   10ஏ, சவேரியார் கோயில்
   தெரு, (அ) 68பி, வண்டிக்
   காரத் தெரு, மெயின்
   பஜார், இராமநாதபுரம்.

3. ஆர். இராமசாமி சேர்வை
   முதுநாள்,
   சூரங்கோட்டை,
   இராமநாதபுரம்.

4. ஜி. ஜெயப்பிரகாஷ்
   156, பட்டுநூல்காரத்தெரு
   சிவகங்கை.

5. கெ. அம்பலம்
   16ஏ, வடக்கு ரத வீதி,
   கோட்டை, திருப்புவனம்.

6. கே கண்ணன்
   நெல்முடிக்கரை,
   திருப்புவனம்.

7. எஸ். முத்து இப்ராஹிம்
   ஊராட்சித் தலைவர்
   இராசசிங்கமங்கலம்.

8. எம். முத்தலிபு
   சிங்கம்புணரி.

9. எஸ். கோவிந்தன்
   உரிமையாளர்
   அமுதா தியேட்டர்
   சிவகங்கை

10. ஆர். ஏ. சாத்தையா
    ஊராட்சித் தலைவர்
    விளத்தூர் அஞ்சல்,
    பரமக்குடி வட்டம்.

11. எஸ். சிங்காரம்
    மாணிக்கம் & சன்ஸ்
    மானாமதுரை.

12. பி. சிக்கந்தர் பாட்சா
    ஊராட்சித் தலைவர்
    புதுப்பட்டி வழி
    ஆர். ஆர். நகர்,
    சாத்தூர் வட்டம்.

13. என். கருப்பையாத் தேவர்
    தேவர் தெரு, சாத்தூர்.

14. கே. இராமச்சந்திரன்
    (புதுவீடு) சாயல்குடி
    வழி அருப்புக்கோட்டை,
    முகவை மாவட்டம்.

# காங்கிரஸ்

1. வெடி கிருஷ்ணன்,
   35-ஏ, மீனும்பாள்
   பாத்திர ஸ்டோர்,
   மேலநாப்பாளையத்தெரு,
   மதுரை-1.

# திருமணம்

எஸ். எஸ். தென்னரசு
அவர்களின் மூத்தசெல்வி
இளவரசி, சிங்கப்பூர் கதிரேசன்
அவர்களின் செல்வன் நாராயணன்,
ஆகியோர் திருமணம் கலைஞர்
தலைமையில் 29 - 9 - 1984 அன்று
மதுரையில் நடைபெற்றது.

தென்னரசு அவர்களின் இளைய
செல்வி தமயந்தி நாச்சியாருக்கும்
தேவகோட்டை காளிதாசன்
அவர்களின் செல்வன் அருணா-
சலத்திற்கும் 7-9-1988 அன்று
கலைஞர் அவர்கள் தலைமையில்
திருமணம் மதுரையில் நடை
பெற்றது.

இரண்டு திருமணங்களிலும்
கலைஞர் ஆற்றிய
இலக்கிய நயம்
மிளிரும் உரை
இங்கு தரப்
படுகிறது.



என்னுடைய அன்புக்குரிய உடன் பிறப்பு - அவருடைய பாஷையிலே சொல்ல வேண்டுமேயானல் என்னுடைய சீடர் தென்னரசு அவர்களுடைய செல்வி இளவரசிக்கும், சிங்கப்பூர் கதிரேசன் அவர்கள் செல்வன் நாராயணனுக்கும் நம் அனைவருடைய நல்வாழ்த்துக்களோடு மணவிழா நிகழ்ச்சி நிறைவேறியிருக்கிறது.

1963 ஆம் ஆண்டு தென்னரசின் திருமணத்தை நான்தான் தலைமையேற்று நடத்திவைத்தேன். இன்று அவருடைய மகள் திருமணத்துக்கும் தலைமையேற்று நடத்தி வைத்திருக்கிறேன். அடுத்து அவருடைய பேத்தியின் திருமணத்திற்கும் தலைமை வகிக்க வேண்டும் என்று ஆசைதான்.

செல்வி இளவரசி என்னுடைய செல்விகளிலே ஒரு செல்வி. முரசொலியில் எமர்ஜென்சி காலத்தில் தணிக்கை அதிகாரிகளை ஏமாற்றுவதற்காக கரிகாலன் என்ற புனைப்பெயரிலே கேள்விக்கு பதில் எழுதும் முறையை மேற்கொண்ட போது, திருக்கோட்டியூரில் இருந்து இளவரசி என்ற பெயரில் எனக்குப்பல கேள்விகள் வரும். நான் அவைகளுக்கு எல்லாம் பத்திரிகையில் பதில் எழுதுவேன். பிறகுதான் இந்த இளவரசி தென்னரசின் மகள் என்று தெரிந்தது. இப்படிப் பல கேள்விகளை என்னிடம் கேட்டுப் பதில்களைப் பெற்ற இளவரசி - திருமண விஷயத்தில் மட்டும் என்னிடம் கேள்வி கேட்கவில்லை என்பதைக் குறிப்பிடாமல் இருக்க முடியாது.

நான்தான் உரிமையோடு சொல்ல முடியும். இது ஒரு காதல் திருமணம். இந்தக் காதல் திருமணத்தை நான் வரவேற்கிறேன்—பாராட்டுகிறேன்—வாழ்த்துகிறேன். கவிச் சக்கரவர்த்தி பாரதியார்-

நாடகத்தில் காவியத்தில் காதலென்ருல்
நாட்டினர்தாம் வியப்பெய்தி நன்ரும் என்பர்;
ஊடகத்தே வீட்டினுள்ளே கிணற்ருேரத்தே
ஊரினிலே காதலென்ருல் உறுமுகின்ருர்.

என்று பாடினுர். பெற்ருேர்கள் மகனையும் மகளையும் அழைத்துக் கொண்டுகூட நாடகம் பார்ப்பார்கள். நாடகத்திலே, காவியத்திலே, திரைப்படத்திலே காதல் காட்சிகளைப் பார்த்துவிட்டு அருமையான காட்சி என்பார்கள்; ஆனல் அவர்கள் வீட்டுக் காதல் என்ருல் உறும ஆரம்பித்து விடுவார்கள். பாரதி அந்த முரண்பாட்டை விளக்கிக்காட்டி,

பாரினிலே காதலென்னும் பயிரை மாய்க்க
மூடரெல்லாம் பொருமையினுல் விதிகள் செய்து
முறை தவறி இடரெய்திக் கெடுகின்ருரே!

என்று குறிப்பிட்டார். பாரதியாரின் பாட்டை பாரதிக்கு உரிமை கொண்டாடுகின்ற காங்கிரஸ் தலைவர்கள் பின்பற்றுகிருர்களோ இல்லையோ நம்முடைய தி. மு. கழகத் தளபதி தென்னரசு அவர்கள் பின்பற்றி பாரதிக்குப் புகழ் சேர்த்திருப்பதை நான் இங்கே பாராட்டாமல் இருக்க முடியாது.

என்னுடைய தம்பிமார்கள் இங்கே எடுத்துக் காட்டியதைப் போல—அருமை நண்பர் பழனிவேல்ராசன் எடுத்துச் சொன்னதைப்போல-நம்முடைய தென்னரசு அவர்கள் தென் பாண்டி மண்டலத்திலே ஒரு மூத்த தலைவராக அனுபவத்தால் பழுத்த தலைவராக விளங்குகின்ருர்.

அவர் அடிக்கடி என்னைத் தென்னிந்தியாவின் போர்வாள் என்று குறிப்பிடுவார். சரியாகவோ, தவருகவோ அவர் கூற்றுப்படி நான் தென்னிந்தியாவின் போர்வாள் என்ருல், அது சாணை பிடிக்கப்படுகிற இடங்களில் ஒன்ருக தென்னரசு அவர்களின் உள்ளமும் இருக்கிறது என்பதை நான் கூருமல் இருக்கவும் முடியாது.

இன்றைக்குத் தமிழகம் முழுவதும் முரசு கொட்டுகின்ற நம்முடைய தி.மு. கழகத்தின் தளபதிகளிலே ஒருவராக அவர் திகழ்ந்து கொண்டிருக்கிருர்.

திராவிடர் இயக்கமும், திராவிடர் இயக்கத்தோடு இணைந்து பணியாற்றக்கூடிய அளவில் இருக்கின்ற அன்புக்குரிய நண்பர் நெடுமாறன் அவர்களது தலைமையிலே இயங்குகின்ற தமிழ் நாடுகாமராஜ் காங்கிரஸ் கட்சியும், அய்யண்ணன் அவர்கள்

தலைமையில் இயங்குகின்ற பார்வர்டு பிளாக் கட்சியும், தளபதி வீரமணி அவர்களுடைய தலைமையில் இயங்கும் திராவிடர் கழகமும்தான் தமிழகத்திலே இருக்கின்ற தமிழர்களுக்காகத் தமிழர்களிலே பிற்படுத்தப்பட்டவர்களாக—தாழ்த்தப்பட்டவர் களாக இருக்கின்ற மக்களுக்காகப் பாடுபடக்கூடிய பணியை மேற்கொள்ள வேண்டியிருக்கிறது. அந்தப் பணியைத் திறம்பட நடத்துகின்ற இந்த இயக்கத்திற்கு என்னைப் போர்வாள் என்று அவர் சொன்னாலும் கூட, அவர் இந்த இயக்கத்துக்கு ஒரு கேடயமாகத் திகழ்ந்து தென்பாண்டி மண்டலத்தில் இந்த இயக் கத்தை நடத்தி வருகிறார். அவருக்கு உறுதுணையாக இந்தத் தென்பாண்டி மண்டலத்திலே இருக்கின்ற தள நாயகர்கள்——தனித்தனியாக அனைவருடைய பெயரையும் குறிப்பிட நான் விரும்பவில்லை—அத்தனை பேரும் என்னுடைய இதயத்திலே இடம் பெற்றிருப்பவர்கள். அவர்களெல்லாம் இங்கே மணமக்களை வாழ்த்தியிருக்கின்றார்கள்.

மணமகள் இளவரசிக்கு எதுவும் அதிகம் நான் சொல்லத் தேவையில்லை நன்கு படித்த பெண். தானே தேர்ந்தெடுத்துக் கொண்ட கணவனோடு தன்னுடைய பெற்றோர்களின் சம்மதத் தோடோ, அவர்கள் சம்மதித்தாலும், சம்மதிக்காவிட்டாலும் எனது சம்மதத்தோடு நடைபெறுகின்ற இந்த மணவிழாவில் உங்களை வாழ்த்துகின்றேன்.

நீங்கள் குடும்பத்துக்கு விளக்குகளாக ஒளி விடுங்கள். நாட்டிற்குத் தொண்டர்களாகப் பணியாற்றுங்கள். தமிழினம் வாழ—தமிழ் வாழ—தமிழர்களை—தமிழினத்தை வாழவிடுவதற் கான பணிகளிலே உங்களுடைய வாழ்வையும் இணைத்துக் கொண்டு வாழ்க! வாழ்க! என்று வாழ்த்துகின்றேன்.



# திருமணம்

மணமகன் :
அருணாசலம்

1988

மணமகள் :
தமயந்தி நாச்சியார்

கழகத்தின் தூண்களில் ஒருவராக விளங்குகின்ற அருமை தென்னரசு அவர்களுடைய செல்வி தமயந்தி நாச்சியாருக்கும் தேவகோட்டை காளிதாசன் அவர்களுடைய செல்வன் அருணா சலம் என்கின்ற அருணுக்கும் நம் அனைவருடைய இனிய வாழ்த்துக்களோடு மணவிழா நிகழ்ச்சி இங்கே நிறைவேறியிருக் கின்றது. இந்த மணவிழாவிலே தென்னரசு அவர்களுடைய அருமை பெருமைகளையும் இந்த இயக்கத்திற்கு அவர் பல ஆண்டு காலமாக ஆற்றி வருகின்ற தொண்டினையும் இந்த இயக்கத்தின் ஒவ்வொரு அங்குல வளர்ச்சிக்கும் அவர் புரிந்து வந்துள்ள தியாகத்தையும் இன்னமும் இந்த இயக்கத்தை வளர்ப்பதற்காக அவர் எடுத்துக் கொண்டுள்ள முயற்சிகளையும் நம்முடைய கழகத்தின் முன்னோடிகளும் மற்ற நண்பர்களும் எடுத்துக் கூறியிருக்கிறார்கள்.

தென்னரசு அவர்களை சற்றொப்ப 36 ஆண்டுகளுக்கு முன்பு எனக்கு அறிமுகப்படுத்தியவர் கவிஞர் கண்ணதாசன். சிறு கூடல்பட்டி, காரைக்குடி நிகழ்ச்சிகளை முடித்துவிட்டு சிவகங்கை வழியாக மதுரைக்கு வரும்போது திருக்கோட்டியூர் வழியாகக் கார் சென்ற நேரத்தில் கண்ணதாசன் திடீரென்று காரை நிறுத்தச் சொன்னார். இங்கே ஒரு ஆர்வமிக்க கழக இளைஞனை உனக்கு அறிமுகப்படுத்துகிறேன்—என்று சொல்லி இந்த இளைஞனை அன்றைக்கு எனக்கு அறிமுகம் செய்து வைத்தார். அப்போது இந்த இளைஞனுக்குப் பெயர் சிந்தாமணி.

கண்ணதாசன்—சிந்தாமணியை உனக்கு அறிமுகம் செய் கிறேன் என்று சொன்னபோது வரப்போவது ஆணா? பெண்ணா? என்ற சந்தேகத்தோடு கவனித்தபோது இந்த சிந்தாமணிதான் வந்தார். சிறிது நேரம் தெருவில் இருந்தவாறே அளவளாவிக் கொண்டிருந்தோம். அப்போதெல்லாம் திராவிடக் கழகத்தினர் திராவிட முன்னேற்றக் கழகத்தினர் நண்பர்களை உபசரிக்கும் போது ஆங்காங்கு ஒரு கோப்பை தேநீர் வாங்கி வழங்குவ துண்டு. அதைப்போல இந்த சிந்தாமணி அவர்கள் அவசர அவசரமாகத் தன்னுடைய தோழர்களை அனுப்பி எனக்கும்

கண்ணதாசனுக்கும் தேநீர் வரவழைத்துத் தந்தார். அப்போது ஒரு ஐம்பது பக்கம் உள்ள சிறிய நோட்டு புத்தகத்தை என்னிடம் கொடுத்து இது நான் எழுதிய ஒரு சிறு கதை, இதைப் படித்து விட்டு உங்களுடைய கருத்தை எனக்கு வழங்க வேண்டும் என்று சொன்னர். சென்னை செல்கின்ற வழியிலேயே நான் அதைப் படித்து முடித்தேன்.

பிறகு சென்னையில் மறைந்த தலைவர்களில் ஒருவரான என். வி. என். அவர்களிடம் பேசிக்கொண்டிருந்தபோது அவர் தன்னுடைய 'திராவிடன்' பத்திரிகைக்கு ஒரு துணை ஆசிரியர் தேவை என்பதை என்னிடம் சொன்னர்.

நான் இவரை அவருக்கு அடையாளம் காட்டி தென்னரசோடு தொடர்பு கொண்டு அவரை சென்னைக்கு வரச்சொல்லி 'திராவிடன்' அலுவலகத்திற்கு அனுப்பி வைத்து அங்கே பணி புரிகின்ற வாய்ப்பைப் பெற்ருர். அதன்பிறகு முரசொலியில் பணியாற்றினர்.

சிந்தாமணி என்கிற பெயரை மாற்ற வேண்டும் என்கின்ற ஆர்வத்தை என்னிடம் அவர் வெளியிட்டபோது தென் பகுதிக் கெல்லாம் ஒரு காலத்தில் அவர் அரசாக வருவார் என்று நான் எண்ணிய காரணத்தால் அன்றைக்கே அவருக்கு தென்னரசு என்ற பெயரை நான்தான் சூட்டினேன். அந்தத் தென்னரசின் ஆட்சி இன்றைக்குக் கழக நண்பர்களுடைய உள்ளத்தில் எந்த அளவிற்கு ஊடுருவியிருக்கின்றது-ஆதிக்கம் செலுத்துகின்றது என்பதை இந்த மாமன்றத்திலே என்னல் உணர முடிகின்றது. 'பெற்ற பொழுதினும் பெரிதுவக்கும்' என்பதற்கொப்ப நான் அன்றைக்கு திருக்கோட்டியூர் தெருவிலே தென்னரசைக் கண்ட போது ஏற்பட்ட மகிழ்ச்சியை விட இன்றைக்குப் பல ஆயிரம் மடங்கு அதிக மகிழ்ச்சியைப் பெறுகின்றேன்.

நெல்லைச் சீமை தொட்டு தஞ்சைத் தரணி வரையிலே இந்த வட்டாரத்திலே இருக்கின்ற கழகத்தின் தளகர்த்தர்களா னலும் அல்லது தமிழகத்தின் பல்வேறு பகுதிகளிலே வாழ்கின்ற இயக்கத்தை நடத்திச் செல்கின்ற தளகர்த்தர்களானலும் அவர் கள் எல்லாம் தென்னரசை உணர்வார்கள், அறிவார்கள், அவ ருடைய உயர்வை எண்ணி மகிழ்வார்கள். அவருடைய உறுதியை எண்ணிப் பூரிப்பார்கள். அத்தகைய தளகர்த்தர்கள் எல்லாம் பூரிக்கின்ற நேரத்தில், அவர்களால் தலைவனுக உரு வாக்கப்பட்ட நான் எவ்வளவு புளகாங்கிதம் அடைவேன், பூரிப்புக் கொள்வேன் என்பதைச் சொல்லத் தேவையில்லை.

அத்தகைய உடன்பிறப்பைப் பெற்றிருக்கிறோம் என்பதில் நான் அளவில்லா மகிழ்ச்சி அடைந்து கொண்டிருப்பவன். அவர் தன்னுடைய மூத்த மகள் இளவரசிக்குத் திருமணம் நடத்தி வைத்து அதற்கும் நானே தலைமையேற்று இன்றைக்கு இங்கே அவருடையஅடுத்தமகள் தமயந்தி நாச்சியாரின் திருமணத்தை நடத்தி வைக்கின்ற வாய்ப்பினை எனக்கு வழங்கியுள்ளார். அவருடைய திருமணத்தையே நான்தான் 1963ஆம் ஆண்டு நடத்தி வைத்தேன். இப்போது அவருடைய மகள்களின் திருமணத்தையும் நான்தான் நடத்தி வைக்கின்றேன். எனக் கொரு ஆசை. அவருடைய பேரன், பேத்திகளின் திருமணத்-தையும் நான் மாத்திரமல்ல, இங்கே வந்திருக்கின்ற நாங்கள் எல்லாம் வந்து வாழ்த்துக்களை வழங்க வேண்டுமென்று ஆசை. (கை தட்டல்) அதைத் தென்னரசு ரேகை பார்த்துத்தான் சொல்லவேண்டும் என்று துரைமுருகன் கூறக்கூடும்.

தென்னரசு வேலூர் சிறைச்சாலையிலே ரேகை பார்த்ததாக துரைமுருகன் சொன்னார். அங்கே அவர் ரேகை பார்த்ததற்கு ஒரு காரணம் உண்டு. நான்தான் அங்கே அவரை ரேகை பார்க்கச் சொன்னேன். ஆனால் எனக்கும் ரேகையில் நம்பிக்கை கிடையாது. தென்னரசுவுக்கும் ரேகையிலே நம்பிக்கை கிடை-யாது. பண்டித ஜவஹர்லால் நேரு அவர்களே கூட இந்த ரேகை, ஜோஸ்யம், ஜாதகம் இவைகளில் தனக்கு நம்பிக்கை இல்லை என்று ஆழமாகச் சொல்லியிருக்கின்றார்.

தந்தை பெரியார் அவர்களுடைய கருத்தை, பேரறிஞர் அண்ணா அவர்களுடைய கருத்தை சுயமரியாதை இயக்கம் ஏற்றுக்கொண்டிருக்கின்ற கருத்தை ஏற்றுக் கொண்டு அந்த அடிப்படையில்தான் இன்றைக்குத் திருமணம் நடக்கின்றது என்பதை எண்ணிப் பார்க்கின்ற நேரத்தில் ரேகை சாஸ்தி-ரத்திலே எனக்கும் தென்னரசுவிற்கும் நம்பிக்கை இல்லை என்பதை அறிந்து கொள்ளலாம். ஆனால் நான் ஒன்றை ஒளிக் காமல் சொல்லவேண்டும். திராவிட முன்னேற்றக் கழகத்திலே உள்ள சில பேருக்கு அந்த நம்பிக்கை இருக்கின்றது. நான் மறுக்க வில்லை.

தி. மு. கழகத்திலே உள்ள அத்தனைபேரும் சுயமரியாதைக் காரர்கள் அல்லர். சுயமரியாதை உள்ளவர்கள். ஆனால் சுயமரியாதைக் கொள்கையில் தங்களை முழுக்க ஈடுபடுத்திக் கொண்டவர்கள் அல்ல. ஏனென்றால் தி.மு. கழகம் ஒரு அரசியல் இயக்கமாக இன்றைக்குப் பரிணாம வளர்ச்சி பெற்றிருக்கின்ற காரணத்தால் - தம்பி மாறன் இங்கே குறிப்பிட்டதைப் போல

தன்மான இயக்கத்தை தந்தை பெரியார் அவர்கள் உருவாக்கிய போது ஊருக்கு நான்கு பேர்கள்தான் அன்றைக்கு இருப்பார்கள். ஒவ்வொரு ஊரையும் குறிப்பிடும்போது மாயவரம்என்ருல் நடராஜன் என்றும்-கும்பகோணம் என்ருல் கே. கே. நீலமேகம் என்றும் மதுரை என்ருல் முத்து என்றும்- திருச்சி என்ருல் அன்பில்-என்றும் - மன்னூர்குடி என்ருல் மன்னை நாராயணசாமி என்றும் இப்படி ஒரு ஊர்ப் பெயரைச் சொன்னுல் அந்த ஊரில் ஒருவர்தான் ஞாபகத்திற்கு வருவார் என்ற அளவிற்குத்தான் சுயமரியாதை இயக்கம் ஒரு காலத்திலே வளரத்தொடங்கியது. அரும்பத் தொடங்கியது அந்த அரும்பு இன்றைக்கு அரசியல் மலராக முகிழ்த்திருக்கின்ற இந்த நேரத்தில் மணம் வீசுகின்ற இந்த நேரத்தில் - இந்த இயக்கத்திலே உள்ள அத்தனை பேருமே சுயமரியாதை இயக்கக் கொள்கைகளை அழுத்தந் திருத்தமாக பின்பற்றுகின்ற வர்கள் என்று சொல்லிவிட முடியாது.

ஒன்றை நான் வெளிப்படையாகச் சொல்ல விரும்புகிறேன். ஒரு முறை மதுரை முத்து அவர்கள் சென்னையில் கழக அலுவலகக் கட்டிடத்தில் பேசிக் கொண்டிருந்தபோது (அவர் தீவிர மான சுயமரியாதைக்காரர்) தலைவர் அவர்களே உங்களைக் கேட்கிறேன். சுயமரியாதைக்காரர்களுக்கு இந்த இயக்கத்தில் என்ன இடம்? என்று கேட்டார் அதற்கு நான் தி.மு கழகத்திலே சுயமரியாதைக்காரர்களுக்கும் இடம் உண்டு என்று சொன்னேன். அதனுடைய உட்பொருளை அவர் புரிந்துகொண்டார். எனவே தி.மு. கழகத்திலே உள்ள சுயமரியாதைக் கொள்கையை அவரவர்களும் தனிப்பட்ட முறையிலே பின்பற்றுகின்ற நிலை இன்றைக்கு இருக்கின்றதே அல்லாமல் அந்த சுயமரியாதை எண்ணம் - சுயமரியாதைக் கொள்கை - கடவுளைப் பற்றிய கொள்கை வேறு பல கொள்கைகளை யாரிடத்திலும் திணிப்பது என்பது இல்லை.

சுயமரியாதையிலே ஈடுபாடு கொண்ட-பகுத்தறிவு இயக்கத்திலே ஈடுபாடு கொண்ட ஒரு பெரும் கூட்டம் தி. மு. கழகத்திலே இருந்தாலும் கூட - தி. மு. கழகத்திலே ஆதரவாளர்களாக இருக்கின்ற பல பேர் வைதீகப் பற்றுள்ளவர்களாக இருக்கின்ருர்கள். அவர்கள் ஆலயங்களுக்குச் சென்று அங்கே தான் ஆண்டவன் இருப்பதாக எண்ணி வழிபடுகின்றவர்களாக இருக்கின்ருர்கள். நாமோ ஏழையின் சிரிப்பிலே இறைவனைக் காணக் கூடியவர்கள். பேரறிஞர் அண்ணு அவர்களின் கொள்கை வழிப்படி நடப்பவர்கள். எனவே ஏழையின் சிரிப்பிலே தான் இறைவன் இருக்கின்ருன் என்று எண்ணக்கூடியவர்கள்;

எனவே அந்த ஆதரவாளர்கள் சில பேரும் மிசா நேரத்தில் தி. மு. கழகத்திற்குச் சோதனை வந்தபோது அவர்களும் மடக்கப் பட்டு, மிசாக் கைதிகளாகப் பல்வேறு சிறைச்சாலைகளிலே இருந் தார்கள். அப்படி இருந்தவர்களில் சிலர் வேலூர் சிறையிலே இருந்தார்கள். நல்லவேளையாக மதுரைச் சிறைச்சாலையிலே இருந்த தென்னரசு திடீரென்று மாறுதல் செய்யப்பட்டு வேலூர் சிறைக்கு அழைத்துச் செல்லப்பட்டார்.

வேலூர் சிறையில் தென்னரசு ரேகை பார்த்ததற்குக் காரணம் - சில பேர் தங்களுக்கு இனி விடுதலையே கிடையாது என்று எண்ணி மனம் சோர்ந்து போய்விடக் கூடாது என்பதற் காகத்தான் அவர்களுக்கெல்லாம் ரேகை பார்த்து பயப்படாதீர் அடுத்த மாதம் உங்களுக்கு விடுதலை வந்துவிடும் என்று இப்படி ஆறேழு மாதம் சொல்லிச் சொல்லி அவர்களையெல்லாம் பயப் படாமல் சிறைச்சாலையில் உறுதியாக இருக்க அவர் கையாண்ட தந்திரம் கை ரேகையே தவிர அதிலே அவருக்கும் நம்பிக்கை இல்லை. எனக்கும் நம்பிக்கை இல்லை. யாருடைய கையை யாவது நீட்டச் சொன்னல் ஏமாந்து கைகளை நீட்ட வேண்டா மென்று நான் இப்போதும் தெரிவித்துக்கொள்கிறேன்.

தென்னரசைப் போன்ற ஆரம்ப காலத்திலேயிருந்து இந்த இயக்கத்திலே தங்களை ஈடுபடுத்திக் கொண்டிருக்கின்ற சுயமரி யாதைக்காரர்கள் ஜாதகத்திலோ, ஜோஸ்யத்திலோ, ரேகை யிலோ நிச்சயமாக நம்பிக்கை வைக்க மாட்டார்கள். அவைகள் எல்லாம் மக்களை ஏமாற்ற நடத்தப்படுகின்ற தொழில்கள் என்பதை நாங்கள் உணர்ந்தவர்கள். அதையும் மீறி உங்க ளுடைய மனத் திருப்திக்காக யாராவது ரேகை பார்த்தால், யாராவது ஜோஸ்யம் பார்த்தால் அதிலே உங்களுக்கு ஒரு திருப்தி. இன்றைக்கு இருக்கின்ற கஷ்டம் நாளைக்காவது போகாதா? அடுத்த வாரமாவது போகாதா? என்பதில் ஒரு திருப்தி - அந்தத் திருப்திக்குத் தீனி போடுபவர்களாக ஜோஸ்யர்கள் இருக்கின்ற காரணத்தால் அந்தத் தொழில் இன்றைக்கு நடைபெற்றுக் கொண்டிருக்கின்றது. அந்த ஒன்றின் காரணமாகத்தான் தென்னரசு ரேகை பார்த்தாரே அல்லாமல் வேறல்ல.

ரேகை பார்த்த ஆற்றலை மாத்திரம் குறிப்பிட்டால் போதாது. இங்கே தா. கிருஷ்ணன் அவர்களும், தவத்திரு அடிகளார் அவர்களும், துணைப்பொதுச்செயலாளர் அவர்களும் எடுத்துக் காட்டியதைப் போல எத்தனை முறை தென்னரசு சிறைச்சாலைக்குச் சென்றார் ஒவ்வொரு முறையும் அது அண்ணா அவர்களுடைய காலமாக இருந்தாலும் சரி-அல்லது அண்ணா

அவர்களுக்குப்பிற்பட்ட காலமாக இருந்தாலும் சரி-தி.மு.கழகம் களம் அமைக்கின்றது என்றால் அந்தக் களத்தில் ''நான் எந்த இடத்தில்'' என்று கேட்கின்ற முதல் ஆளாக தென்னரசு இருந்தார்—இருக்கிறார். என்றைக்கும் இருப்பார் என்பதில் எனக்குக் கிஞ்சிற்றும் சந்தேகம் கிடையாது.

தா. கிருஷ்ணன் பேசும்போது தென்னரசு 25 முறை சிறை சென்றார். என்னை எம். பி. யாக ஆக்கியவர், யார் யாரையோ எம்.எல்.ஏ. வாக ஆக்கியவர், இந்த முகவை மாவட்டம் பிரிக்கப் படாமல் ஒன்றாக இருந்தபோது தி. மு. கழக அணி எல்லாத் தொகுதிகளிலும் வெற்றி பெறக்கூடிய அளவிற்கு பணியாற்றிய ஆற்றல் வாய்ந்தவர். அப்படிப்பட்டவருக்குக் கழகம் கொடுத்த பரிசு எதுவுமில்லை என்று சொன்னார். நான் கிருஷ்ணனுக்குச் சொல்கிறேன்—என்னையே நான் தென்னரசுவிற்குப் பரிசாகக் கொடுத்திருக்கும்போது இதைவிட வேறு ஒரு பரிசை தென்னரசைப் போன்றவர்கள் எதிர்பார்ப்பார்கள் என்று நிச்சயமாக நான் எண்ணவில்லை. எங்களைப் போன்றவர்களின் உள்ளங்களையே தென்னரசுவிற்கு நாங்கள் பரிசாகத் தந்திருக்கின்றோம்,

இந்த இயக்கம் பத்துப் பன்னிரண்டு ஆண்டு காலத்திலே பட்ட சித்திரவதைகள் கொஞ்சம் நஞ்சமல்ல. சந்தித்த சோதனைகள், சந்தித்த வேதனைகள், சாதாரணமானவைகள் அல்ல. அவைகளை எல்லாம் நாங்கள் இன்றைக்குத் தாண்டி, கடந்து, காட்டாறுகளைப் பற்றிக் கவலைப்படாமல், வீசிய புயலைக் கூட வலது கையால் தள்ளிவிட்டு இடி, மழை, மின்னல் இவைகளைப் பற்றியெல்லாம் கவலைப்படாமல் தி. மு. கழகம் என்னும் இந்த இலட்சியத்திருவிளக்கை அணையாமல் காப்பாற்றி இன்றைக்கு உச்சி முகட்டிற்குக் கொண்டு வந்திருக்கின்றோம் என்றால் அது தனிப்பட்ட கருணாநிதியின் ஆற்றல் அல்ல, தனிப்பட்ட பேராசிரியர் அவர்களின் ஆற்றல் அல்ல தனிப்பட்ட நாஞ்சிலாரோ, மாறனோ, பொன். முத்துராமலிங்கமோ, தென்னரசோ இவர்களுடைய ஆற்றல் அல்ல. தென்னரசைப் போன்ற இலட்சக்கணக்கான தொண்டர்கள் உடன் பிறப்புக்கள் அத்தனை பேரும் தந்த ஆற்றல்தான் இன்றைக்கு தி. மு. கழகத்தின் ஒளிவிளக்கை அணையாமல் காப்பாற்றிக் கொண்டிருக்கின்றது.

அப்படிபட்டவருடைய இல்லத்திலே நடைபெறுகின்ற மணவிழா இது. கழகக் குடும்பத்திலே நடைபெறுகின்ற மண விழா. என்னுடைய குடும்பத்திலே நடைபெறுகின்ற மணவிழா, காங்கிரஸ் கட்சியைச் சேர்ந்த அருமை நண்பர் குன்னக்குடி

தங்கவேலன் பேசும்போது என்னையும் சேர்த்துக் கொள்ளுங்கள் நம்முடைய குடும்பத்திலே நடைபெறுகின்ற திருமணம் என்று சொன்னார். அரசியலைப் பொறுத்தவரை நீங்கள் - நாங்கள் என்று இருந்தாலுங் கூட, தமிழ்ச் சமுதாயத்தைப் பொறுத்த வரை நாம்தான், அதை நீங்கள் உணர்ந்து கொண்டால் சரி. நீங்கள் ஏற்றுக் கொண்டால் சரி, தமிழர்கள், தமிழ் இன மக்கள் தமிழ் மொழிக்குச் சொந்தக்காரர்கள் தமிழ் நாட்டு உரிமை-களைப் பெறக் கூடியவர்கள் நாம்.

பத்திரிகையிலே இன்று கூடப் படித்தேன். ஒரு மத்திய அமைச்சர் சொல்லியிருக்கிறார், கருணாநிதியின் தமிழ்ப்பற்று என்ன ஆயிற்று என்று கேட்டிருக்கிறார். எனக்குக் கோபம் வர வில்லை. மகிழ்ச்சிதான், எனக்குத் தமிழ்ப் பற்று இருந்ததை ஒப்புக்கொண்டுதானே, அது என்னவாயிற்று என்று கேட்டி ருக்கிறார், இதுவரையிலே எனக்குத் தமிழ்ப்பற்றே இல்லை என்று சொன்னவர்கள் - கருணாநிதிக்குத் தமிழ்ப்பற்றே கிடையாது என்று சொன்னவர்கள் - தமிழ்ப்பற்று என்னவாயிற்று என்று கேட்டிருக்கின்றார்கள் என்றால் அதற்கு என்ன அர்த்தம்? அது இருந்ததாகத்தான் அர்த்தம். ஆகவே அது ஏற்கனவே என்னிடம் இருப்பதாக ஒப்புக்கொண்டிருக்கின்றார்கள், அதற்கு எந்த ஆபத்தும் வராது.

என்னுடைய தமிழ்ப் பற்று காங்கிரஸ் கட்சியோடு சேர்ந்து கூட்டணியாகச் செயல்பட்டபோதே கெடவில்லை என்றால் இப் போது தமிழ்ப்பற்றுக் கெட்டுப் போய்விடும் என்று யாரும் எதிர் பார்க்கத் தேவையில்லை. அந்தப் பற்று வளரும் - அந்தப் பற்று வளர—ஆர்வம் வளர - வென்றிட, தென்னரசைப் போன்ற கழகத்தின் தளகர்த்தர்கள் எனக்கும் கழகத்திற்கும் என்றென்-றும் துணையாக இருப்பார்கள். அந்தக் குடும்பத்தின் குல விளக்குகள் தமயந்தியும் அருணாசலமும் வாழ்க வாழ்க என்று மீண்டும் ஒரு முறை வாழ்த்துகின்றேன்.






சிறைவாசம் எனக்கு முதற்களமாக அமைந்தது 1962-ம் ஆண்டுதான். தலைச்சுமையைவிட மனச்சுமை கனமானவை என்பதை உணர்ந்த வருடம் அது.

1962-ல் எனக்குத் திருமணம் ஆகவில்லை. காங்கிரஸ் ஆட்சி கொடுகட்டிப் பறந்த காலம் அது. நாட்டில் விலைவாசி உயர்வை மாகாண ஆட்சியால் தடுக்க முடியவில்லை. எல்லாத் தரப்பிலும் விலைவாசி உயர்வைப் பற்றி விமர்சனம் கடுமையாக இருந்தது. இதற்கு காமராஜர் முதல் சாதாரண காங்கிரஸ் தொண்டர்வரை பொறுப்பான பதிலைச் சொல்லவில்லை.

“விலைவாசியைத் தடுக்கக்கூடிய அதிகாரம் மாகாண சர்க்காருக்கு இல்லை. அது மத்திய சர்க்காரைச் சார்ந்தது” என்று காமராஜர் முதல் அனைத்துத் தலைவர்களும் பதில் சொல்லிவிட்டார்கள். பொதுமக்களைத் திரட்டுவதற்கு ஒரே வழி விலைவாசி உயர்வைக் கண்டித்து மாவட்ட ஆட்சித்தலைவர் அலுவலகங்கள் முன்பாக மறியல் செய்வதுதான் என்று தி.மு.க. தீர்மானித்தது. அந்த முடிவின்படி ஜுலை மாதம் 15-ந் தேதி கழகத்தின் சார்பில் மாவட்டத் தலைநகரங்களில் மறியல் போராட்டம் தொடங்கியது.

மதுரை மாநகரில் பேராசியர் அன்பழகன் அவர்கள் தலைமையில் மறியல் செய்யவேண்டுமென்று தி.மு.க. தலைமை உத்தரவு இட்டது. மதுரை, இராமநாதபுரம் ஆகிய இரண்டு மாவட்ட ஆட்சியர் அலுவலகங்களும் ஒரே காம்பவுண்டுக்குள் இருந்ததால் இரண்டு மாவட்டத்தைச் சேர்ந்த தொண்டர்களும் மதுரையிலேயே மறியல் செய்ய நேர்ந்தது. பேராசிரியர் அன்பழகன் அவர்கள் தலைமையில் மதுரை தி. மு. க. அலுவலகத்திலிருந்து வடக்குமாசிவீதி வழியாக ஊர்வலமாக வந்து சரியாகக் காலை 10 மணிக்கு மாவட்ட ஆட்சியாளர் அலுவலகம் முன்பாக மறியல் செய்தோம். ஏராளமான போலீசார் பந்தோபஸ்துக்கு வந்திருந்தார்கள். நாங்கள் மறியலை சுணக்கமில்லாமல் நிறைவேற்றிக் கொண்டிருந்தோம். பேராசிரியர் அன்பழகன் அவர்கள், மதுரை எஸ். முத்து அவர்கள்,

நான் மூவரும் மறியல் போரில் கைதான முக்கியஸ்தர்கள். டி. ஐ. ஜி. ஷெனாய் ஸ்தலத்திலேயே வந்திருந்து எங்களைக் கைது செய்து போலீஸ் வேனில் ஏற்றி நீதிமன்றத்திற்குக் கொண்டுவந்தார். நீதிபதி மாலை 4 மணியளவில் எங்களை 15 நாள் காவலில் வைக்கும்படியும், அதன் பிறகு நீதிமன்றத்திற்குக் கொண்டுவரும்படியும் உத்தரவு இட்டார்.

இரவு 7மணி அளவில் நாங்கள் சிறைச்சாலைக்குள் நுழைந்தோம் எல்லாப் பகுதிகளிலிருந்தும் வந்து சிறை நிறைந்து வழிந்தோடும் வகையில் தொண்டர்கள் குவிந்திருந்தார்கள். எங்களுக்குச் சாப்பாடு போடுவதற்குச் சிறையில் வசதியில்லை. இரவு 8 மணிக்கெல்லாம் எங்கள் எண்ணிக்கை நான்காயிரத்தைத் தாண்டிவிட்டது. இரவில் நாங்கள் யாரும் சாப்பிடவில்லை. மறுநாள் காலை 11 மணியளவில் உப்புமா என்ற பெயரால் அரைவேக்காடோடு கொஞ்சம் உணவு கொடுத்தார்கள். பாத்திரம் இல்லாததால் எல்லோரும் வரிசையில் நின்று கையிலேயே ஏந்தி வாங்கிச் சாப்பிட நேர்ந்தது.

மறுநாள் நீதிபதி சூரியமூர்த்தி அவர்கள் நீதிமன்றத்தையே சிறைச்சாலைக்குக் கொண்டுவந்து விட்டார். அதுவரை அப்படி ஒரு சம்பவம் அங்கு நடந்ததில்லை. ஏற்கெனவே சிறையில் அடைபட்டிருக்கின்ற நான்காயிரம் பேரை வேறு பல சிறைகளுக்கு மாற்றுவதற்கான நீதிபதி சிறைச்சாலைக்கு வந்திருந்து கும்பல் கும்பலாக எங்களைப்பிரித்து சிலரை திருச்சி சிறைச்சாலைக்கும், சிலரை புதுக்கோட்டை சிறைச்சாலைக்கும் மாற்றிவிட்டார்கள். அதில் பேராசிரியர் அன்பழகன் அவர்கள், நான், மதுரை எஸ். முத்து அவர்கள், காவேரி மணியம் அவர்கள், ஆழ்வார்புரம் ராமச்சந்திரன் ஆகியோர் திருச்சி சிறைச்சாலைக்கு மாற்றப்பட்டோம்.

திருச்சி சிறைச்சாலை, மதுரை சிறைச்சாலையைப் போல் நான்கு மடங்கு பெரியது. அதே சிறைச்சாலையில் கலைஞர் அவர்களும், மன்னை நாராயணசாமி அவர்கள் அன்பில் தருமலிங்கம் அவர்கள் போன்ற முன்னணித் தலைவர்களும் அடைபட்டிருந்தார்கள். ஆகவே எனக்கும் பொழுது போவது கஷ்டமாகத் தெரியவில்லை.

என் வாழ்க்கையில் முதன்முறையாகக் கைதி உடையில் கலைஞரை சந்தித்தது அந்தக் காலக்கட்டத்தில்தான்.

வாரம் ஒரு முறை அதிகாரிகள் வருமுன் எல்லாக் கைதிகளும் சிறை உடை உடுத்தி வரிசையில் நிற்க வேண்டும். அதிகாரிகள் அணிவகுத்து வந்து அவர்களைப் பார்வையிட்டு குறைகளைக் கேட்டறிந்து கொள்வார்கள். அப்போதுதான்

எல்லாத் தலைவர்களும் சிறைச்சாலை உடைகளைத் தவருமல் அணிந்து வந்திருப்பார்கள். அதைப்போலவே அண்ணு அவர்களும் வேலூர் சிறைச்சாலையில் சிறையில் தந்த உடைகளை ஒரு சாதாரணக் கைதியைப்போல் தவருமல் அணிந்து வந்ததாக நாங்கள் கேள்விப்பட்டோம்.

வடக்கே இமயமலைச்சாரலில் சீனப் படையெடுப்பு தீவிரமாகி நமக்கும், சீனாவிற்கும் போர்மூளும் கட்டம் வந்துவிட்டது. இந்த நேரத்தில் இந்தியாவிற்குள் கட்சிகளுக்குள்ளேயே பேதம் கூடாது என்று அண்ணு விரும்பினுர். அதை மனதிலே வைத்துக் கொண்டு வடக்கே ஏற்பட்ட எல்லைப் போராட்டத்திற்கு தி. மு. க. இந்திய அரசுக்கு பரிபூரணமாய் ஆதரவு அளிக்கும் என்றும், வெளியிலிருக்கும் தி. மு க. தொண்டர்கள் இரத்ததானம் அளிக்க வேண்டுமென்றும் ஆணையிட்டார்.

அண்ணுவின் அறிக்கை வந்த இரண்டு மூன்று தினங்களில் சர்க்கார் எங்களைத் திடீரென்று விடுதலை செய்துவிட்டது. எங்களுக்கு நான்கு மாதங்களுக்குத் தண்டனை ஏற்கெனவே வழங்கப்பட்டிருந்தது. அதில் மூன்று மாதத்தை நாங்கள் சிறையில் கழித்து விட்டோம்.

சிறைச்சாலை விதிகளின்படி வருமானவரி கட்டுகிறவர்களுக்கும், படித்துப் பட்டம் பெற்றவர்களுக்கும்தான் சிறையில் முதல்வகுப்பு வசதி உண்டு. எனக்கு இந்த இரண்டு தகுதியும் இல்லாததால் முதல் வகுப்பு வசதி கிடைக்கவில்லை.

இதைக் கேள்விப்பட்ட முதுகுளத்தூர் பார்வர்டு பிளாக் சட்ட மன்றக்கட்சி உறுப்பினர் சசிவர்ணத்தேவர் அவர்கள் இராம நாதபுரம் மாவட்ட ஆட்சித்தலைவர் பிரபாகரிடம் என்னுடைய நிலையை எடுத்துச் சொல்லியிருக்கிருர். உடனே அவர் 'சிறைச்சாலையில் முதல் வகுப்புத் தருவது கைதிகளின் வெளியுலக வாழ்க்கைத் தரத்தையொட்டியது' என்பதால் என்னை ஒரு எழுத்தாளர் என்ற முறையில் எடுத்துக் கொண்டு எனக்கு முதல்வகுப்பு வசதியைச் செய்து கொடுக்க ஆணை பிறப்பித்தார்.

ஒரு இளைஞனுடைய வாழ்க்கையில் முதலிரவு எப்படி மறக்க முடியாததோ அதைப்போல ஒரு இளைஞனுடைய வாழ்க்கையில் முதல் சிறைவாசமும் மறக்கமுடியாதது. எவ்வளவுதான் ஓய்வு சிறையில் கிடைத்தாலும், உடல்தான் சிறைகுள்ளே இருக்குமே தவிர மனம் சிறைக்கு வெளியேதான் சுற்றிக் கொண்டிருக்கும்.

நல்ல சுவையான உணவாக இருந்தாலும் அதை விளக்கில்லாமல் இருட்டுக்குள் இருந்து சாப்பிடுவது போலத்தான் சிறை வாழ்க்கை.

திருச்சி சிறையில் தலைவர்கள் மிகுதியாக இருந்ததால் தொண்டர்கள் மத்தியில் ஒற்றுமையும், கட்டுக்கோப்பும், குலையாமல் இருந்தது. மூன்றும் வகுப்புக் கைதிகளுக்குக் காபி கிடையாது. அதற்காக கலைஞர் அவர்கள் வாரம் இரண்டு முறை முதல்வகுப்புக் கைதிகளுக்குத்தந்த காப்பி அனைத்தையும் மூன்றும் வகுப்புக் கைதிகளுக்குக் கொடுத்து விடுவது என்று முடிவெடுத்து அன்தபடி வாரம் இரண்டுநாள் மூன்றும்வகுப்புக் கைதிகளுக்குக் காப்பி வழங்கப்பட்டது.

பேராசிரியர் மீசை வைத்ததே அந்தச் சிறை வாசத்தின் போதுதான். அதற்கு முன்பு அவருக்கு மீசை இல்லை.

எதிர்பாராமல் நாங்கள் விடுதலையானதால் எங்கள் யாருக்கும் வெளியே வரவேற்பு இல்லை. கலைஞருக்கு மட்டும் எங்களுக்குமுன்பாக ஒரு மாதத்திற்கு முன்பே அவர் தண்டனை முடிந்து முறைப்படி விடுதலையானதால் முறையோடு அவருக்கு சிறைவாசலில் பெரிய வரவேற்பு இருந்தது. சிறைக்குள்ளேயே அணிந்திருந்த உடையைப் போல் பைஜாமாவும், ஜிப்பாவும் அணிந்து கொண்டு சிறையில் இருந்து வெளியே போனார். சிறைக்குள்ளிருந்த எங்களுக்கு, அவரைப் பார்த்ததும் வெளியில் எழுந்த ஆரவாரம்தான் காதில் விழுந்தது.

மறுமாதம் நாங்கள் விடுதலையாகி விட்டோம். இதுதான் என்னுடைய முதல் சிறைவாசம். அதற்குப்பிறகு எனக்குச் சிறைவாசங்கள் யாரும் எதிர்பார்த்த வகையில் மிக அதிகமாகத் தொடரும் என்று நான் அன்றைக்கு எதிர்பார்க்கவில்லை. வீட்டில் சொல்லிக் கொள்ளாமலேயே சிறைக்குச் சென்றதைப் போலவே எதிர்பாராமலே நான் வீட்டுக்குத் திரும்பி வந்து விட்டேன். அதன்பிறகு 1963-ல் தான் எனக்குத் திருமணம் நடந்தது. இது பொதுவாழ்க்கையில் 'முதற்களம்' என்றுதான் சொல்லவேண்டும்.

திருமணம் நடந்த மறுமாதமே நான் பாதுகாப்புக் கைதியாக நேர்ந்தது. அண்ணா அவர்கள் அரசியல் சட்டத்தின் மொழிப்பிரிவை எரித்தபோது மாநிலம் முழுவதும் கழக முக்கியஸ்தர்கள் பாதுகாப்புக் கைதிகளாயினர். அவர்களில் நானும் ஒருவன். அதிலிருந்து இன்றுவரை என் சிறை வாழ்க்கை தொடர்ந்து கொண்டிருக்கிறது.



